நடிகைகளின் தொப்புள்கள் கவனம் கலைத்த இந்த இடைப்பட்ட மாதங்களில், தமிழக அரசில் ஆட்சி மாற்றம் நிகழ்ந்திருக்கிறது, முன்னாள்அமைச்சர்கள் இன்னாள் அமைச்சர்களாகி, இன்னாள் முன்னாளாகியுள்ளனர். மெரினாவில் சிலைகளின் ஜனத்தொகை அதிகமாகியுள்ளது. மற்றபடி அதேபிச்சைக்காரக் கிழவன், அதே அலுமினிய டப்பா... எந்நாளும் மாநிலத்தின் ஜாடை மாறவில்லை.



தமிழகத்தில் ஒரு கட்சி, ஒரு தொலைக்காட்சி சேனல், ஒரு



பத்திரிகை, ஒருசெய்தித்தாள்தான் ஒரு சமயத்தில் முன்வகிக்க முடியும் என்ற என் கருத்து வலுப்பெறுகிறது. பணிக்கரிடம் பிரஸ்னம் கேட் டதில், 'மற்றொரு தேர்தல் வரலாம்' என்றார். மத்தியிலா, மாநிலத்திலா என்று அவர் சொல்வதற்குள் ஜெயமாலா மேட்டர் பெரிதாகி, தேவசம் போர்டிலிருந்து அவருக்கு அழைப்பு வந்து விட்டது.

டல்லாஸ் நண்பர் சங்கர் ரமணி சென்ற வாரம் காலமானார் என்கிற செய்தி, அவரை அறிந்தவர் அனைவருக்கும் அதிர்ச்சி தந்தது. அண்ணாமலையில் ஜியாலஜி படித்தவர். அறுபதுகளிலேயே ரமணி அமெரிக்கா சென்று அலாஸ்காவிலும், டெக்சாஸிலும் எண்ணெய்க் கிணறுகள் வாங்கி நிறைய சம்பாதித்தார். சாஃப்ட்வேர்காரர்கள் படையெடுப்புக்கு முன்பே சிறப்பெய்திய முதல் தலைமுறை இந்தியர்களில் முதன்மையானவர். நண்பர்கள் பலருக்கு உதவியவர். தமிழர். அவருடைய சொந்த ஏரோப்ளேனில் டெக்சாஸிலிருந்து லூசியானா வுக்கு அடை தோசையும், தயிர் சாதமும், மோர்மிளகாயும் எடுத்துக் கொண்டு, பிக்னிக் போல, தலைக்கு மேல் கர்நாடக சங்கீதம் ஒலிக்க, லியர்ஜெட்டில் பறந்து சென்றது ஞாபகம் இருக்கிறது.

அமெரிக்கா வாழ் தமிழர்களுக்கெல்லாம் ரமணி முன்னோடி. கடைசியாகக் காவிரிப் படுகை யிலோ, காரைக் காலிலோ விசாகப்பட்டினத்துக்கு அருகிலோ சமுத்திரத்தில் கச்சா எண்ணெய் சுத்திகரிப்பு பிளாட்பாரம் ஒன்றை இத்தாலியிலிருந்து இடம்பெயர்த்துக் கொண்டுவரும் முயற்சியில் இருந்தார். இவற்றில் ஒன்றாவது நிறைவேறுவதுதான் அவருக்கு மிகப் பெரிய அஞ்சலி.



பின்னால்... சங்கர் ரமணியின் விமானம்



சங்கர் ரமணி

மின்னஞ்சலில் கல்யாணப் பத்திரிகையை ஸ்கேன் பண்ணி அனுப்புவது இப்போது வழக்கமாகி வருகிறது. இதில் சௌகரியங்கள் பல. தபால் செலவோ, தாமதமோ இல்லை. send விசையை அழுத்தியதும், பத்திரிகை உலகெங்கும் போய்ச் சேர்ந்துவிடுகிறது. காகிதச் சிக்கனம். 200 பேருக்கு அனுப்புவதற்கு 900 காப்பி அடித்துவிட்டு மிச்சப் பத்திரிகைகளை என்ன செய்வது என்று

தவிக்கத் தேவையில்லை. கிடைக்கவில்லை என்று பெறுநர் பொய் சொல்ல முடியாது.

டிஜிட்டல் சொல்யூஷன்ஸ் கம்பெனியைச் சேர்ந்த நாக்(ராஜ்) ரவி ஆறாயிரம் ரூபாயில் ஃபேக்ஸ் மெஷின், பிரின்ட்டர், காப்பியர், ஸ்கானர் எல்லாம் சேர்த்துக் கொடுப்பதற்கு பேட்டன்ட் உரிமம் வாங்கியிருக்கிறார். இணையம் சார்ந்த தொழில்நுட்பத்தின் விரிவாக்கமாக, அடுத்த ஆண்டு வெப்காஸ்டிங் முறையில் கல்யாணத்தை நெட்டில் ஒளிபரப்புவதற்கான ஏற்பாடுகள் செய்து... முகூர்த்தத்துக்கு வரமுடியவில்லை யென்றாலும் வலையில் கண்டு களிக்கலாம். தாலி கட்டும் சமயத்தில் கம்ப்யூட்டருக்கு அட்சதை போடலாம். கல்யாணச் சாப்பாடு அனுப்ப முடியாது. அதற்குப் பதில் அருகில் உள்ள உடுப்பி ஓட்டலுக்கோ, சரவண பவனுக்கோ, கோமள விலாஸுக்கோ, சங்கீதாவுக்கோ, வஸந்த பவனுக்கோ ப்ரீபெய்ட் வவுச்சர் அனுப்பிவிடலாம்.

மணமகனும் மணமகளும் சந்தித்துக் கொள்ளாமலேயே இன்டர்நெட்டில் கல்யாணம் ஒன்று நடந்ததாகப் படித் தேன். சாந்தி முகூர்த்தத்தைத் தவிர, மற்றதெல்லாம் வலையில் சாத்தியம். Lawnmower Man போன்ற சயின்ஸ் ஃபிக்ஷன் திரைப்படங்களில் அதுவும் சாத்தியம்!

**ஒ**ரு நண்பர் தன் கல்யாணத்துக்கு வலை அழைப்போடு ஆக்டன் நாஷின் (Ogden Nash) மேற்கோள் ஒன்றையும் அனுப்பியிருந்தார்.

To keep your marriage brimming
With love in the loving cup
Whenever you're wrong, admit it;
Whenever you're right, shut up.

இதை அனுப்பிய மணமகன் நிச்சயம் தி.பி முதல் சில வருஷங்களைச் சமாளித்துவிடுவார். நாஷின் வரிகளை தமிழில் முயன்று பார்த்தேன்...

'இல்லற இன்பத்துக்கு
இதுமட்டும் கத்துக்கொள்
தப்பென்றால் ஒத்துக்கொள்
சரியென்றால் பொத்திக்
கொள்!'

ஆக்டன் நாஷ்



ஃபெர்ன்



ஜான் க்ரிபின்



**அ**மெரிக்க கவிஞர் ஆக்டன் நாஷ் (1902-1971) மென்கவிதைகள் பல எழுதினவர். 'கதவு - தப்பான பக்கத்தில் எப்போதும் ஒரு நாய் இருக்கும் இடம்', 'சாக்லெட் மோகம் அதிகம், சாராயம் வேகம் அதிகம்' (candy is dandy, but liquor is quicker)... இதுபோன்ற அவரது மேற் கோள் வாக்கியங்களும் பிரசித்தம்.

தமிழில் மென்கவிதைகள் தொகுப்பு ஒன்று தேவைப்படுகிறது. 'கையும் காலும் தூக்கத் தூக்கும் ஆடிப்பாவை' (குறுந்தொகை)யிலிருந்து, கானா பாட்டு வரை சேகரிக்கலாம். காளமேகப் புலவ ருக்கு தனி அத்தியாயமே தேவைப்0படும். அது போல் மகாகவியின் 'லிமெரிக்'கு களுக்கும்!

'சொந்தத்தில் கார், கொழும்பில் காணி,
சோக்கான வீடு, வயல், கேணி,
இத்தனையும் கொண்டுவந்தால்
இக்கணமே வாணியின்பால்
சிந்தை இழப்பான் தண்ட பாணி!

வாசகர்கள் மாத இறுதிக்குள் அனுப்பும் லிமெரிக்குகளில் பிரசுரிக்கத் தேர்ந்தெடுத்து, புத்தகப் பரிசளிக்கிறேன் ('குறுமென்பா' என்று தலைப்பிட்டு கார்டுகளில் மட்டும்!).

**'சி**ல்வியா' தொடர்கதையின் இறுதியில் கணேஷ் 'deep simplicity' பற்றிக் குறிப்பிட்டது நினைவிருக்கலாம். 'இது

என்ன, கொஞ்சம் விளக்கமாகச் சொல் லுங்களேன்' என்று கேட்ட ஏராளமான வாசகர்களின் (மொத்தம் 3 பேர்) வேண்டுகோளுக்கிணங்க...

பூகம்பமோ, சுனாமியோ, ஸ்டாக் மார்க்கெட் வீழ்ச்சியோ அனைத்தையும் நிர்ணயிப்பது கேயாஸ் என்னும் குழப்பவியல். பிரபஞ்சத்தின் குழப்பங்களையும் சிக்கலான அமைப்புகளையும் ஆதாரமாக ஆராயும்போது, அவை அனைத்திலும் ஓர் எளிமை இருப்பதை முர்ரே ஜெல்-மான் (Murray Gell - Mann) என்பவர் கண்டு சொல்லியிருக்கிறார். 'நம்மைச் சுற்றியுள்ள உலகின், உயிர்களின் சிக்கல் மேற்பரப்பில் குழப்பம்; அடித்தளத்தில் எளிமை' என்றார்.

உதாரணமாக, ஃபெர்ன் என்னும் இந்த இலை அமைப்பை இயற்கையில் சந்தித்திருப்பீர்கள். இதை ஒரே ஒரு fractal மூலம் வரையலாம். நம் டி.என்.ஏ மூலக்கூறும் இப்படித்தான், ஒரு சில எளிய விதிகளின் விரிவாக்கம்.

மேல் விவரம் வேண்டுவோர் ஜான் க்ரிபின் (John Gribbin) புத்தகத்தை நாடலாம். பெங்குவின் வெளியீடு.

### எ.பி.க

ராசம்மாக் கிழவி
சுறுசுறுப்பான மனுஷி
வயசு தெரியாத தோற்றம்
காய்கறிகள் வாங்கி
ஊர்மனைக்குள் வியாபாரம்
செய்வாள்
தலையில் கடகத்துக்கு மேல்
காற்செருப்பு.
'ஏன் ஆச்சி செருப்பைப் போடலே?'
என் சின்ன மகள் கேட்டாள்.
'வெயில் கடுமையெண்டாப்
போடலாம் நெடுகப் போட்டுத்
திரிஞ்சா கெதியிலை தேஞ்சு போம்
பிள்ளை!

- **சோ.பத்மநாதன்** (நினைவுச் சுவடுகள்)
**(கடகம் - சும்மாடு; கெதியிலை - வேகமாக)**

டெல்லியில் 1965-ம் ஆண்டு கஸ்தூரிரங்கன், இந்திரா பார்த்தசாரதி, லா.சு.ரங்கராஜன், தி.ஜானகிராமன், என்.எஸ்.ஜகந்நாதன், கே.ஸ்ரீனிவாசன், க.நா.சுப்ரமண்யம், கே.எஸ்.ஸ்ரீனிவாசன் போன்றவர்கள் வசித்து வந்தோம். கஸ்தூரிரங்கன் ஒரு பத்திரிகை தொடங்க விரும்பினார். ‘கணையாழி’ என்று பெயரிட்டார். ஆகஸ்ட் 15-ம் தேதியன்று, முதல் இதழ் வெளிவந்தது. இரண்டாம் இதழிலிருந்தே ஆரம்ப எழுத்தாளனான என்னை எழுதச் சொன்னார். ‘ஸ்ரீரங்கம் எஸ்.ஆர்’ என்ற பெயரும் சூட்டினார்.





42 ஆண்டுகள் கழிந்த பின், போன வாரம் கஸ்தூரிரங்கன், இ.பா., லா.சு.ரங்கராஜன், நான் நால்வரும் சந்தித்து அந்தத் தினங்களை நினைவுகொண்டோம். கணையாழியின் தங்க காலத்தில், தமிழகத்தின் அத்தனை கவிஞர்களும், கதாசிரியர்களும் எழுதினார்கள். சிறந்த இலக்கிய, அரசியல் கட்டுரைகள் வெளிவந்தன. எஸ்.எஸ்.வாசன், கருணாநிதி, காமராஜர் போன்றோரின் பேட்டிகள் வந்தன. எம்.ஜி.ஆர். ஆரம்பித்த புதுக் கட்சி பற்றி கட்டுரை எழுதியிருந்தார் ப.சிதம்பரம். ஆரோக்கியமான சர்ச்சைகள் கொண்ட கடிதங்கள் வெளிவந்தன. சிறு பத்திரிகை என்று ஒரு புதிய பாகுபாட்டில் இன்று வெளிவரும் அத்தனை பத்திரிகைகளுக்கும் முன்னோடிகளில் ஒன்றாக இருந்தது கணையாழி.





நாளடைவில், கஸ்தூரிரங்கன் தொடர்ந்து நடத்தச் சிரமப்பட, கணையாழியை தமன் ப்ரகாஷ் பொறுப்பேற்றுச் சில ஆண்டுகளாக வெளியிட்டு வருகிறார். ‘கௌரவ ஆலோசகர்’ என்று அடியேன் பெயர் அதில் போட்டிருந்தாலும், ஒருவேளை முகவரி தவறிவிட்டதால் காப்பி அனுப்புவதில்லை.
கஸ்தூரிரங்கன் தொடர்ந்து பத்திரிகை நடத்துவதில் உற்சாகம் காட்டவில்லை. அவருடைய கவலைகள் திசை திரும்பி, கிராமத்தில் வேலைவாய்ப்பும் கல்வியும் பரப்ப, ‘ஸ்வச்சித்’ என்று ஓர் அமைப்பைத் துவங்கியுள்ளார்.

கணையாழி நிறம் மாறி, குணம் மாறி இன்னும் வந்துகொண்டுதான் இருக்கிறது எனக் கேள்விப்பட்டேன். பத்திரிகைகள், சினிமா போன்றவை காலப்போக்கில் இவ்வாறு மாறுவது தவிர்க்க முடி யாதது. இன்றைய ‘வெகு ஜனப்’ பத்திரிகைகளின் பழைய இதழ்களைப் புரட்டிப் பார்த்தால், மாற்றம் புரியும். மாறாத பத்திரிகை என்று தேடினால், ஸ்ரீரங்கம் கோயில் வாக்கியப் பஞ்சாங்கம் ஒன்றைத்தான் உடனே சொல்ல முடிகிறது.
நேஷனல் ஜியாக்ரஃபி, ரீடர்ஸ் டைஜஸ்ட், டைம் போன்றவைகூட மெள்ள, அடையாளம் இழக்காமல் மாறியிருக் கின்றன. இன்றைய அமுதசுரபி, கலைமகள், மஞ்சரிகளின் அந்தக் காலத்து வடிவங்களை ஒப்பிட்டுப் பார்ப்பதும் சுவாரஸ்யமாக இருக்கும். யாராவது இதில் எம்.ஃபில் செய்திருக்கிறார்களா, தெரியவில்லை.
பத்திரிகைகள் மாறுவதற்கு மூன்று காரணங்கள்...
1. ஆசிரியர் மாற்றம் 2. முதலாளி மாற்றம்
3. கால மாற்றம்.
‘மீண்டும் கணையாழி’ என்று ஒரே ஒரு மெகா இதழ் கொண்டுவரலாமா என்று கொஞ்ச நேரம் பேசிவிட்டு, பெருமூச்சு விட்டுவிட்டுப் புறப்பட்டோம்.




If you’re yearning for the good old days, just turn off the air conditioning என்னும் Griff Niblackி பொன்மொழி நினைவுக்கு வந்தது.

‘அம்பல’த்தில் குறுந்தொகையின் எளிய அறிமுகம் எழுதிவருகிறேன். சில பாடல்கள் பிரமிக்க

வைக்கின்றன. உதாரணம், 130-ம் பாடலின் எளிய வடிவம் இது.
நிலம் தோண்டிப் புகுந்துகொள்ளவில்லை
வானில் ஏறிச் செல்லவில்லை
கடல் மேல் நடந்து செல்லவில்லை
நாடு நாடாக, ஊர் ஊராக
வீடு வீடாகத்
தேடினால் கிடைக்காமலா போவார் காதலர்?
வெள்ளிவீதியாரின் இந்தப் பாடல் இரண்டாம் நூற்றாண்டில் இல்லாமல் நேற்று எழுதப்பட்டது என்று சொன்னாலும் நம்பலாம்.
சங்க காலச் சொற்கள் பல இன்று வழக்கொழிந்துவிட்டன. பல பொருள் மாறிவிட்டன.
கீழ்க்காணும் பத்து சங்க கால வார்த்தைகளின் அர்த்தங்கள் (அடைப்புக் குறிக்குள் மூன்றில் ஒன்று) உங்களுக்குத் தெரியுமா எனப் பரிசோதித்துப் பாருங் கள். சரியான விடை இறுதியில்.
1. எழுதாக் கற்பு - (பெண்களின் நற்குணம், கருமை, வேதம்.)
2. புலத்தல் - (வெறுப்பது, கலைப்பது, கலக்குவது.)
3. வரைவு - (சித்திரம், பரிசம், மலைப் பகுதி.)
4. ஆடு - (ஒரு சாதுவான மிருகம், வெற்றி, நடனம்.)
5. ஐயர்- (புரோகிதர், தலைவர், அரசர்.)
6. முருங்குதல் - (கோபிப்பது, சிதைவது, வளைவது.)
7. ஞாழல் - (நாணல், கொன்றை, தாமரை.)
8.கறங்கல் - (ஒலித்தல், கமறல், நீக்கல்)
9. மகிழ்னன் - (சந்தோஷமானவன், மகிழம்பூ அணிந்தவன், மருத நிலத் தலைவன்.)
10. தலைபோதல் - (முடிதல், இறந்துபோதல், காணாமற்போதல்.)
உலகக் கோப்பை கால்பந்து போட்டியில், தென் அமெரிக்க நாடுகள் முன்னே வராதது எனக்கு வருத்தமே! குறிப்பாக, கால்பந்துக் கவிஞர்கள் அர்ஜென்ட்டினா, பிரேசில்! இத்தாலி ஆரம்பத்தில் தவித்து, பிற்பாடு ஆட்டத்தை உயர்த்திக்கொண்டது.
ஜிடேன் சிவப்பு அட்டை வாங்கியதும், இறுதியாட்டம் பைத்தியக்கார பெனால்ட்டி ஷூட் அவுட்டில் தீர்மானிக் கப்பட்டதும் சோகமே!
இந்த ஆட்டம் தொடர்பான சிறந்த கார்ட்டூன் அவார்ட், தி ஹிந்துவின் சுரேந்தருக்குப் போகிறது.
இ.சி.ஆர். ரோட்டிலோ, ஐடி சூப்பர் ஹைவேயிலோ பண்ணை வீடுகளின் நீண்ட சுவர்களைக் கடந்து செல் வீர்கள். அந்தச் சுவர்களில் நம்மைப் பிடிவாதமாகத் தொடர்ந்து வரும் சுவர் எழுத்துக்களில் கலைஞர், அம்மா, கேப்டன், தளபதி என்று கட்சிப் பாகுபாடில்லாமல் நம்மோடு வரும். ஒவ்வொரு எழுத்தும் ஐந்துக்கு ஐந்து சீரான உயர, அகலத்துடன் உள்ளன. சுவர்களில் எழுதுபவர்களைப் பற்றி யோசிக்கிறேன். அழகான எழுத்துக்களை எப்படி சுவரின் நீள, அகலத்துக்கேற்ப நெருக்கமோ, பெருக்கமோ இல்லாமல் உத்தேசிக்கிறார்கள் என்று வியக் கிறேன்.
இந்த நாட்களில் சுவரெழுத்துக் கலை நலிந்து வருகிறது. இப்போதெல்லாம் வினைல் வந்துவிட்டது. ஒரு ஃப்ளாப்பியிலோ சி.டி-யிலோ கொடுத்துவிட்டால், அரை நாளில் பிரமாண்டமான பிரின்ட்டர்களில் புடவைபோல் அச்சடித்து, விளிம்புகளில் வளையம் வைத்துக் கொடுத்துவிடுகிறார்கள். அவற்றை போர்டுகளின் பின்புறம் மடித்து, இழுத்து இறுக்கக் கட்டினால் முடிந்தது வேலை! மெய்வருத்தமே கிடையாது. ஒவ்வொரு பேனரிலும் அழகழகான மாடல்கள், கவனம் கலைக்கும் சுந்தரிகள்.
சுவரெழுத்துக் கலைஞர்களுக்கு நகரத்தில் சில சதுர அடிகளே மிச்சம் உள்ளன. ஜெமினி பார்சன் காம்ப்ளெக்ஸ் அருகில் சில சதுர அடிகள். வள்ளுவர் கோட்டம் தாண்டினதும் சில. அவ்வளவுதான்!
இந்தக் குறுகிய இடத்தில் புதுப்படங்களை அறிவிக்க வேண்டும். வாரப் பத்திரிகைகள் அலற வேண்டும். பிறந்த நாள், இறந்த நாள், மறந்த நாள் வாழ்த்துக்கள் தெரிவிக்க வேண்டும். சிரம ஜீவனம் தான்.
இவர்களுக்கு ஆறுதலாக ஒரு வெண்பா தர, நண்பர் நவகாளமேகனைக் கேட்டபோது...
வினைல்போர்டு வந்து வியாபாரம் போனால்
நினைந்து வருந்த வேண்டாம் நண்பா - வினைல்போர்டு
அலுத்துப்போய் மீண்டும் அதேவடிவில் உந்தன்
எழுத்துக்குத் தேவை வரும்.
சங்க கால விடைகள் :
1.வேதம், 2.வெறுப்பது, 3.பரிசம், 4.வெற்றி, 5.தலைவர், 6.சிதைவது, 7.கொன்றை, 8.ஒலித்தல், 9.மருத நிலத் தலைவன், 10.முடிதல்.
9-லிருந்து 10 வரை சரியென்றால், உங்களுக்கு ‘சங்கராசு’ என்று பட்டப் பெயரும், ஒரு கிராம் தங்கக் காசும், ஆரோக்யா நாலரைப் பால் ஒரு பாக்கெட்டும் வாங்கிக்கொள்ளவும். (நிறைய நீர் சேர்த்துக் காய்ச்சவும்.)

எ.பி.ஹை

சந்தை
இரைச்சலிலும்
தனியாய்க் கேட்கிறது
(அவளது)
வளையோசை.

**- வடுவூர் சிவமுரளி**



இன்டர்நெட் மூலம் ஒருவர் பாட்டெழுத, ஒருவர் இசையமைக்க, பிறிதொருவர் பாட, இன்னொருவர் ஒலிப்பதிய... கூட்டுமுயற்சியாக தமிழ், மலையாளம், இந்தி மொழிகளில் மெல்லிசைப் பாடல்கள் blogswara.com வலைமனையில் மிதக்கின்றன. பாட்டுகளின் தரம் முன்னேபின்னே இருந்தாலும், கேட்டு முடிக்க அலையகலமும் (பேண்ட்வித்) பொறுமையும் வேண்டும் என்றாலும், இந்த முறையின் நூதனம் என்னைக் கவர்கிறது.

இன்றைய திரைப்படப் பாடல்களே இப்படித்தான் உருவாகின்றன. இயக்குநர் சிச்சுவேஷன் சொல்வார்; இசையமைப்பாளர் ஒரு மெட்டமைப்பார். அது 'தானானே', 'ஷலாலாலா' வடிவில் ஆர்மோனியமோ, கீ போர்டோ தொடர, டேப்பில் தரப்படும். இது கவிஞருக்கு அனுப்பப்படும். அவர் அதற்கேற்ற பாடல் வரிகளை எழுதி அனுப்புவார். கவிஞரும் இசையமைப்பாளரும் சந்திக்கக்கூடத் தேவையில்லை. இசையமைப்பாளர் பாடிப் பார்ப்பார். அங்கங்கே வார்த்தைகள் இடிக்கிறது என்பார். உடனே, உதவி டைரக்டர்களில் ஒருவர் அந்த வரிகளை எடுத்துக் கொண்டு லொங்குலொங்கென்று 'ஷட்டில்' அடிப்பார். திருப்தி வந்தபின்தான், ரிக்கார்டிங் நடக்கும். ஒவ்வொரு பாடகரும், பாடகியும், 'லலலல்லாஆஆஆ... ஷாபாஷாபா...' பெண்களும் தனித்தனியே வந்து அர்த்தராத்திரியில்கூட ட்ராக்கில் பாடிவிட்டுப் போய்விடுவார்கள். இசையமைப்பாளர் சாவகாசமாக பூ தொடுப்பது போல் மெட்டை அழகுபடுத்துவார். ஆடியோ ரிலீஸுக்கு டாட் (ஞிகிஜி) கொடுக்கும்வரை அதை நோண்டிக்கொண்டே இருப்பார்.






பில் ப்ரைசன்

மார்ட்டின் ரீஸ்



பெரும்பாலும் இப்படித்தான், இன்று திரை இசை அமைக்கப்படுகிறது. உதவியாளர்கள் செய்வதை, 'ப்ளாக் ஸ்வரா'வில் இன்டர்நெட் செய்கிறது.

ஒரு முக்கியமான வேறுபாடு... பாட்டோ, மெட்டோ இயக்குநருக்குப் பிடிக்கவில்லை என்றால், தயங்காமல் நிராகரித்துவிடுவார். அவர்களும் சளைக்காமல் மாற்று ட்யூன் போடுவார்கள். மாற்று வரிகள் தருவார்கள். இம்மாதிரியான தணிக்கை, நிராகர அபாயம் இல்லாத நிலையில், 'ப்ளாக் ஸ்வரா' போன்ற முயற்சிகள் ஆயாசம் தரும் வாய்ப்பு அதிகம். பொழுதுபோகவில்லையென்றால் கேட்டுத்தான் பாருங்களேன்.



சமீபத்தில் நம் விண்வெளி மற்றும் ஏவுகணை முயற்சிகளுக்கு இரண்டு பெரிய பின்னடைவுகள். ஒரிஸ்ஸா பாலசோரிலிருந்து 'அக்னி' ஏவுகணை ஏவப்பட்டு, இலக்கை அடையாமல் கடலில் விழுந்தது. 'இன்சாட்' செயற்கைக்கோளுடன் செலுத்தப்பட்ட ஜி.எஸ்.எல்.வி. ராக்கெட், விண்வெளியில் குறைப் பிரசவமாகி விழுந்தது. அக்னிப் பரீட்சையில் செலவுக் கணக்கு இல்லை. இன்சாட் விழுந்ததில்

நஷ்டம் 250 கோடி.
அக்னி, ஹைதராபாத்தில் பாதுகாப்பு அமைச்சரவையின் டி.ஆர்.டி.ஓ. ஆராய்ச்சி சாலையின் முயற்சி. பாரத் டைனமிக்ஸ், ஹெச்.ஏ.எல். உதவியிருக்கிறார்கள். டாக்டர் கலாம் டி.ஆர்.டி.ஓ. (ஞிஸிஞிளி) தலைவராக இருந்திருக்கிறார்.
இன்சாட், பெங்களூர் ஐ.எஸ்.ஆர்.ஓ நிறுவனம், அதன் ஸ்ரீஹரிகோட்டா செலுத்தகத்திலிருந்து அனுப்பிய ஜி.எஸ்.எல்.வி. முயற்சி! இம்மாதிரியான தோல்விகளில் ஒவ்வொரு முறையும் அத்தனைக் கோடி நாட்டுக்கு (நீரும் நானும் கட்டும் வரிப்பணம்) விரயமாகிறது.
இதற்காகப் பொறுப்பேற்றுக்கொண்டு, யாருக்காவது வேலை போயிற்றா? எதுவும் கிடையாது. கிரையோஜெனிக் இன்ஜின் வேலை செய்யவில்லை, பூஸ்டர் பற்றிக்கொள்ளவில்லை என்று ஏதாவது டெக்னிக்கலாக மழுப்புகிறார் கள். தீபாவளி லட்சுமி வெடி வெடிக்காதது போலச் சொல்லிவிட்டு, 'அடுத்த முறை சரிபண்ணிவிடுவோம்' என்று சொல்லி, இன்னும் 200 கோடிக்கு பட்ஜெட் போடுகிறார்கள். விண்ணில் செலவழிப்பதற்குப் பதில், மண்ணில் அப்பாவி மக்களைக் கொல்லும் தீவிரவாதிகளைப் பிடிக்க அதிகம் செலவழிக்கலாம்.
நமக்கு இதெல்லாம் தேவையா என்று நான் கேள்வி எழுப்பவில்லை. 'அக்னி' போன்ற ஏவுகணைகள் இருபது முறையாவது தொடர்ந்து வெற்றிகரமாக ஏவப்பட்டால்தான், அதைப் பயன்படுத்த ராணுவம் சம்மதிக்கும். அப்படிச் சம்மதித் தாலும் அவற்றை மற்றவர் மேல் ஏவாமல் இருப்பதற்காகத்தான் இத்தனை பாடுபடுகிறோம். இதில் உள்ள முரண்பாடு உங்களுக்குப் புரியும். Deterrant தேவைதான், உடன் accountability என்னும் தார்மிகப் பொறுப்பு கம்மி என்றுதான் சொல்கிறேன்.
சீனாவில் எப்படிச் சாதிக்கிறார்கள் என்று கேட்கத் தோன்று கிறது.




'அலைகள்
பூக்கள்
குழந்தை
நண்பர்கள்
கவிதையும்கூட
அவ்வப்போது
அலுத்துப்போகிறது'
என்று சொல்லும் கனிமொழி, சென்ற தேர்தல் பிர சாரத்தின்போது தமிழகமெங்கும் தன் தந்தையுடன் சுற்றுப்பயணம் செய்தபோது, மக்கள் முகங்களில் கண்ட ஆர்வத் தையும் எதிர்பார்ப்பையும் நம்பிக்கையையும் பார்த்துப் பிரமிப் பாக, ஏன் பயமாகக்கூட இருந்தது என்கிறார். கொதிக்கும் மத்தியான வெயிலில், தலைவரின் ஒரு செகண்ட் தரிசனத் துக்காகக் காலையிலிருந்து காத் திருக்கும் இளைஞர்களையும், புதுசணிந்து வாசலில் வந்து நிற்கும் பெண்களையும் கவனித்து, ஒரு நீண்ட கவிதையாக எழுதியிருக்கிறார். படித்துப் பார்த்தேன். அலுக்கவில்லை.
அரவிந்தன் வழக்கம் போல் அட்டை போட்டு, Bill Bryson-¡ 'A Short History of Nearly Everything' என்ற புத்தகத்தை அன்பளித்தார். ஸ்பானிஷ் மொழியில் இளங்கலை படிக்கிறார்.
'தமிழ்க் கவிதைகளை ஸ்பானிஷில் மொழிபெயர்ப்பது எளிது. அங்கிருந்து இறக்குவதுதான் கஷ்டம். அதில் reflexive verbs ஏராளம்' என்றார்.
இப்படி யாராவது உண்மையாகவே ஸ்பானிஷ் படித்து, தமிழில் உலவும் நெருடாபுருடாக்களைத் தெளி வாக்கலாம்.
ப்ரைசனின் புத்தகத்தில், மறுபிறவி பற்றி அறிவியல் என்ன சொல்கிறது என்பதற்குச் சுவாரஸ்யமான விடை கிடைக்கிறது.
நம் பிரபஞ்சம் முழுவதும் தனிமங்களின் அணுக்களால் ஆனது. மனித உயிர் என்பதே ஒரு மாலிக்யுல் நீண்ட கூட்டணுத் தொகுதி தான். அணுக்களுக்கு அழிவே இல்லை. பிரபஞ்சம் ஆரம்பித்ததிலிருந்து அப்படியே இருக் கின்றன. மார்ட்டின் ரீஸ் (Martin Rees) சொன்னபடி, ஒரு அணுவின் வாழ்நாள் குறைந்தபட்சம் 1035. அதாவது, 10-க்குப் பின் 34 சைபர் போட்டுக்கொள்ளவும். அத்தனை வருஷங்கள்!
நாம் இறந்துபோய் எரித்தாலோ, புதைத்தாலோகூட நம் உடலின் அணுக்கள் காற்றிலோ மண்ணிலோ கலந்துவிடுகின்றன. இடமாற்றம் நிகழ்கிறது. அவ்வளவுதான்! அணு, அளவில் அழிவதில்லை. சைபர் டிகிரி செல்ஷியஸ் உஷ்ணத்தில், ஒரு கன செண்டிமீட்டர் காற்றில் அதாவது, ஒரு சர்க்கரை க்யூப் அளவில் இருக்கும் அணுக்களின் எண்ணிக்கை எத்தனை பில்லியன் தெரியுமா? 45 பில்லியன்பில்லியன்!

ஒரு பில்லியன் என்பது நூறு கோடி. இத்தனை அணுக்களில் ஒரு பகுதி, நாம் இறக்கும்போது மறுசுற்று வருகிறது. சில இலை தழை தாவரமாகவோ, பிராணிகளாகவோ மாறலாம். சில, மனிதர்களிடமே திரும்பி வரலாம். எனவே, நம் முன்னோர்களின் புராதன அணுக்களில் சில பில்லியன்கள் நம்மிடம் இருந்தே தீரும். நம் ஒவ்வொருவருக்குள்ளும் கொஞ்சம் ஷேக்ஸ்பியர், கொஞ்சம் கௌதம புத்தர், கொஞ்சம் கம்பன், கொஞ்சம் பீத்தோவன் அணுக்கள் இருக்கின்றன என்றால் அது மிகையல்ல; பொய்யல்ல! என்ன, பாரதி இன்னும் 'ரீசைக்கிள்' ஆகியிருக்க மாட்டார். அதற்குச் சில நூறு ஆண்டுகள் ஆகலாம்.
அணுக்களுக்கு அழிவில்லை என்றால், யாருமே இறப்பதில்லை; மீண்டும் பிறக்கிறோம்... தாவரமாக, உயிரின மாக, மனிதராகப் பிரித்துக் கொடுக்கப்படுகிறோம். அஷ்டே!




'இம்சை அரசன் 23-ம் புலிகேசி' திரைப்படத்துக்கு கர்நாடகத்தில் எதிர்ப்புத் தெரிவித்து, அதைத் தடை செய்யச் சொன்னார்களாம். காரணம், புலிகேசி கர்நாடக மன்னனாம். அவனைக் கேலி செய்வது தகாதாம். மறுப்புத் தெரிவித்தவர்கள் சரித்திரத்தைச் சரியாகப் படித்துப் பார்க்கலாம்.
கடம்பர்களை வென்று சாளுக்கிய சாம் ராஜ்யத்தை கி.பி. 543-ல் நிறுவியவன் முதல் புலிகேசி. கி.பி 610-642-ல் ஆண்ட இரண்டாம் புலிகேசி அதை விஸ்தரித்தான். மாமன்னன் ஹர்ஷருடன் போரிட்டு வென்றான். பல்லவ மன்னர்களான நரசிம்மவர்மன், மகேந்திரவர்மன்களுடன் போராடி முதலில் ஜெயித்து, பிறகு தோற்றான். பாதாமியைத் தலைநகராகக் கொண்டு கர்நாடகம், ஆந்திரம் உள்ளிட்ட தக்காணம் முழுவதையும் ஒரு கட்டத்தில் ஆண்டான். அதன்பின் சாளுக்கிய சாம்ராஜ்யம் மெல்ல அழிந்தது. புலிகேசி பேசியது கன்னடமா, தெலுங்கா, சம்ஸ்கிருதமா என்பதுகூட ஆராய்ச்சிக்குரியது.
எப்படியும் சிம்புதேவனின் 23-ம் புலிகேசிக்கும், சாளுக்கிய அரசர்களுக்கும் ஸ்னானப்ராப்தி கூடக் கிடையாது.
வடிவேலுவின் படத்துக்கு எதிர்ப்புத் தெரிவிப்பதற்கு ஆழமான காரணம், சரித்திரமல்ல! கர்நாடகாவில் அவ்வப்போது தமிழர்கள் மேல் எதிர்ப்பு தெரிவிக்கக் காரணங்கள் தேடிக் கொண்டே இருப்பார்கள். நல்ல மழை பெய்து அங்கே அத்தனை அணைகளும் நிரம்பியுள்ள வேளையில், ராஜ்குமார் மறைந்த துக்கம் வடிந்துவிட்ட வேளையில்... பாவம், 'புலிகேசி'தான் கிடைத்தான்.




**வி**கடன் அலுவலகத்தார் 'The Complete Cartoons of Newyorker' புத்தகத்தை எனக்கு அனுப்பியிருந்தார்கள். 1925-லிருந்து 2004 வரை, 80 வருடங்களாக 'நியூயார்க்கர்' பத்திரிகையில் வந்த கார்ட்டூன்களிலிருந்து தேர்ந்தெடுத்து, சுமார் 4 சதுர அடி, 655 பக்க மகா மெகா புத்தகமாகத் திரட்டித் தந்திருக்கிறார்கள். எடுத்துப் படித்தால் முதுகு பிடித்துக்கொள்ளும் என்று படுக்கையில் வைத்துப் படித்துப் பார்த்தேன்.

நியூயார்க்கர், 1925-ல் ஹெரால்ட் ராஸ் என்பவரால் துவக்கப்பட்ட பத்திரிகை. இதன் கார்ட்டூன்கள் உசத்தியான நகைச்சுவை உணர்வுக்குப் பெயர்போனவை. ஜேம்ஸ் தர்பர், பெண்ட்லி, எஸ்.ஜே.பெரல்மான், இ.பி. வைட், டோரத்தி பார்க்கர் போன்றநகைச்சுவையாளர்கள் அதில் எழுதினார்கள். ஜான் அப்டைக், புத்தக விமர்சனங்கள் செய்தார். ஜே.டி.சாலிங்கரின் ஓர் அரிய குறுநாவலுக்காக முழு இதழையும் ஒருமுறை ஒதுக்கினார்கள். அந்த அளவுக்கு மரியாதையும் தரமும் மிக்க பத்திரிகையாக மிளிர்ந்தது.




1925-ல் நியூயார்க்கரை நிறுவி, 1951-ல் தான் இறக்கும் வரை 1,399 இதழ்களுக்கு ஆசிரியராக இருந்த ராஸ், பள்ளிப் படிப்பைப் பாதியில் நிறுத்தியவர். பல பத்திரிகைகளில் பணிபுரிந்து கிடைத்த அனுபவத்தில் தொடங்கிய நியூயார்க்கர், இன்று உலகின் நிரந்தர சிறந்த பத்திரிகைகளில் ஒன்று.

நியூயார்க்கர் கார்ட்டூன்களைப் புரிந்துகொள்வதற்குக் கொஞ்சம் சிந்திக்க வேண்டும். அவை கிச்சுகிச்சு வகையல்ல; புன்னகை வகை. சிந்தித்த பின், அதில் உள்ள சிறப்பை உணரும்போது, சிரிப்பு வரும். பல கார்ட்டூன்கள் பெரிசாக, நுணுக்கமாகப் படம் போட்டிருந்தாலும், அடியில் ஒரு வரியோ, அரை வரியோதான் வாசகம் இருக்கும். சில சமயம் வார்த்தைகளே இல்லாது, படம் மட்டும் சிரிக்கவைக்கும்.

சில உதாரணங்களை இந்தப் பக்கங்களில் கொடுத்துள்ளேன். அடுத்து வரும் சில இதழ்களிலும் கொடுக்கிறேன்.

ராஸ் யாரைப் பற்றிச் செய்தி எழுதுவதாக இருந்தாலும், முதல் காரியமாக ஆசிரியர் குழுவிடம் இரண்டு வார்த்தைதான் கேட்பாராம்... 'யார் அவர்?'

கார்ட்டூன்களை வாராவாரம் தேர்ந்தெடுக்க ஆசிரியர் குழுவில் ஐந்து மணி நேரம் விவாதம் நடக்கு மாம்.

பாரம்பரியமிக்க விகடன்கூட இம்மாதிரியான ஒரு குண்டுப் புத்தகம் போடலாம்.

**'ப**ணம் சந்தோஷம் தராது; சந்தோஷம் பணம் தராது!' - இதைச் சொன்னவர் கிரவுச்சோ (Groucho) மார்க்ஸ். காமெடியன்.

'பணம் அன்பைத் தராது' - இதைச் சொன்னவர் ஜான் லெனன்.

பீட்டில்ஸ் பாடகர். மார்க்ஸின் அவ்வப்போதைய வாசகங்களிலும், லென்னனின் அவ்வப்போதைய பாடல்களிலும் உள்ள ஒற்றுமைகளைத் தேடிக் கண்டுபிடித்து ஒரு புத்தகம் போட்டிருக்கிறார்கள்.

பிற உதாரணங்கள்...

'வாழ்க்கை சுருக்கமானது. இன்று வாழ்வோம். நாளை வீட்டுக்காரர் வாடகை கேட்டு வந்துவிடுவார்!' - மார்க்ஸ்.




'வாழ்க்கை சுருக்கமானது. பிடிவாதத்துக்கோ, சண்டை போடவோ நேரமில்லை நண்பனே!' - லென்னன்.

'இது எனக்கா தோன்றியது என்று வியப்பாக இருக்கிறது! அப்படி ஒரு பிரமாதமான ஐடியா தோன்றியது.' - மார்க்ஸ்.

ப்ளேபாய் (பேட்டியில்) - "அந்த eolian cadences (நீண்ட சந்தமிக்க வரிகள்) உங்களுக்கு எப்படித் தோன்றின? எப்படி அமைத்தீர்கள்?"

**லென்னன்:** "எனக்கு அதெல்லாம் தெரியாது. கேட்பதற்குப் பறவைச் சத்தம் போல ஒலித்தது. அதனால் அமைத்தேன்!"

லென்னனுக்கும் மார்க்ஸுக்கும் வாழ்க்கை முறைகளில் தொடர்பு எதுவும் இல்லாவிட்டாலும், ஒருவர் வாழ்வில் சொன்ன, எழுதிய அனைத்தையும் ஒப்பிட்டால், யாரையும் யாருடனும் ஒப்பிட முடியும் என்பதையே இந்தப் புத்தகம் நிரூபிக்கிறது.




**க**ல்லூரிப் பாட நூல்களையே வெளியிட்டு வந்த எஸ்.விஸ்வநாதன் கம்பெனியார், முதன்முதலாக 'In search of Technology' (தொழில்நுட்பத்தைத் தேடி) என்ற, பாடமல்லாத புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார்கள். ஐ.ஐ.டி. படித்துவிட்டு, முருகப்பா நிறுவனத்தில் பணிபுரிந்த ஏ.சிவகுமார், தன் தேடல்களை ஒரு இன்ஜினீயரின் பார்வை நுட்பத்துடன் எழுதியிருக்கும் ஆங்கிலப் புத்தகம் இது. ஒவ்வொரு அத்தியாய முடிவிலும், தான் கற்றுக்கொண்ட படிப்பினைகள், கண்டறிந்த விஷயங்களைச் சுருக்கமாகத் தந்திருப்பதால், அவற்றைப் படிப்பதே ஒரு நிறைவு தருகிறது.

உதாரணம், 'ஓர் உண்மையான, ஆக்கப்பூர்வமான நிறுவனத்தில் விமர்சனங்கள் சரியான முறையில் எடுத்துக் கொள்ளப்படும், விமர்சித்தவர்களை அடுத்த விவாதங்களில் தவிர்ப்பதன் மூலம்!'

இந்தப் புத்தகத்தை எஸ்.வி. தமிழிலும் வெளியிடலாம்!

**பா**ரதிராஜா, நானா படேகரையும் புதுமுக நாயகிகளையும் வைத்து, இந்தியில் ஒரு திரைப்படம் எடுப்பதில் பிஸியாக இருக்கிறார். அதை, மாதிரி பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பாரதிராஜாவின் மென்மையான கதை சொல்லும் திறமையும், இந்திக்காரர்களின் அநாயாசமான, இயல்பான நடிப்பும் நூதன மாகக் கலந்துள்ளன. படம் மிகவும் எதிர்பார்க்கப்படுகிறது.



சிவாஜி கணேசன் சிலை திறப்பு விழாவுக்கு ஷூட்டிங் கட்டாயங்களால் செல்ல முடியாத பாரதிராஜா, சிவாஜியை 'முதல் மரியாதை'யில் இயக்கிய அனுபவத்தை வியப்புடன் நினைவுகொண்டார். ஆணோ, பெண்ணோ... பாரதிராஜா டைரக்ட் பண்ணும்போது தன் எல்லா பாத்திரங்களையும் நடித்துக் காட்டும் வழக்கம் உள்ளவர். பல நடிகர்களுக்கு இந்த முறை சங்கடப்படுத்துமாம். சிலர் அதற்கு எதிர்ப்புகூட தெரிவித்திருக்கிறார்களாம். நடிகர் திலகம் சிவாஜியிடம், 'உங்களுக்குப் போய் நான் சொல்ல வேண்டியதில்லை' என்று பாரதிராஜா சொன்னபோது, 'இல்லைப்பா! நீ நடிச்சுக்காட்டு. நான் அப்படியே செய்றேன்' என்றாராம் சிவாஜி. 'நூற்றுக்கணக்கான படங்களில் நடித்து முடித்த பின்னும், அத்தனை பெரிய நடிகருக்கு இருந்த கற்றுக்கொள்ளும் ஆர்வமும், நேரம் தாழ்த்தாமல் படப்பிடிப்புக்கு வரும் குணமும் மறக்க முடியாதவை' என்றார்.

**வி**கடன் 23.7.06 இதழ் க-பெ. பகுதியில், பத்மநாதனின் கவிதையில், 'கடகம்' என்ற சொல்லுக்குச் 'சும்மாடு' என்ற விளக்கம் தவறு என்று, யோகன் பாரிஸ் மின்னஞ்சல் செய்துள்ளார். ஈழத்தில் கடகம் என்று குறிப்பிடுவது, பொருள்களைச் சுமக்க பாவிக்கும், பனையோலையால் இழைத்து அதன் வெளிப்பகுதிக்குப் பனை நாரால் மேலிழைப்பு செய்து, வாய்ப் பக்க விளிம்பில் தடித்த நார் வைத்த பெட்டி. அது இன்றும் பாவனையில் உள்ளதாம் (பாவனை - பயன்பாடு).

எபிக



கண்ணனைக் காதலிப்பதாக
நடன அரங்கேற்றத்துக்கு
ஏற்பாடு செய்து
ஊரை அழைத்தவர்கள்தாம்
நமது காதலை
அரங்கேறவிடாமல்
தடுக்கிறார்கள்.

- **நெல்லை கண்ணன்** (காதல் செய்யாதவர்கள் கல்லெறியுங்கள்)

**ஆ**று வார்த்தைகளில் ஒரு கதை எழுத முடியுமா என்று ஹெமிங்வே சவால்விட்டு, 'விற்பனைக்கு - குழந்தைக் காலணிகள், எப்போதும் அணியாதது' (For sale. Baby shoes. Never worn.) என்று எழுதி, பிரமிக்கவைத்தார். அதைத் தொடர்ந்து ஜான் அப்டைக், நார்மன் மெய்லர் போன்றவர்களும் ஆறு வார்த்தைக் கதைகள் எழுதினர்.

தமிழில் எனக்குப் பிடித்த ஆறு வார்த்தைக் கதை - 'ஒரு ஊர்ல ஒரு நரியாம், அதோட சரியாம்!'

உலகிலேயே மிகச் சிறிய விஞ்ஞானப் புனைகதையை எழுதியவர் மைக்கேல் இ ப்ளேக். அவரது இந்தக் கதை, உலகின் பல தொகுப்புகளில் வந்திருக்கிறது. அசிமாவ்கூட அதைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். இந்தக் கதையை மொழிபெயர்க்க எனக்கு ஐந்து செகண்ட் ஆனது.

கதையின் தலைப்பு... ‘டெலிபதிக்காரர்களுக்கான விஞ்ஞானக் கதை’. அதன்பின், கதை? ம்ஹூம், எதுவுமில்லை! வெற்றுத் தாள்தான்.

‘டெலிபதி’ என்பது எண்ணங்கள் மூலம் பேசிக்கொள்ளும் திறமை என்பது தெரிந்து யோசித்தால், இந்தக் கதையின் புத்திசாலித்தனம் புரியும்.



உலகிலேயே மிகச் சிறிய திகில் கதை எது?

உலகின் கடைசி மனிதன் தனியாக ஓர் அறையில் உட்கார்ந்திருந்தான். கதவு தட்டப்பட்டது.

இதன் திருத்தங்கள் பலவற்றில் எனக்குப் பிடித்தது...

உலகின் கடைசி மனிதன் தனியாக ஓர் அறையில் உட்கார்ந்திருந்தான். கதவு பூட்டப்பட்டது.

**கு**றுமென்பா போட்டியில் ஆர்வமாகக் கலந்துகொண்ட வாசகர்கள் அனைவருக்கும் பாராட்டுக்கள். உங்கள் கார்டுகள் அனைத்தையும் படித்தோம். சிறந்த பாக்களைத் தேர்ந்தெடுக்க, நான் அமைத்த விதி இதுதான்... லிமெரிக் வடிவம், இலங்கையின் மகாகவி வழி பண்ணிக் கொடுத்த வடிவத்தை (ஐந்து வரிகளில் 1, 2, 5 வரிகளின் இறுதியில் ஒரு எதுகையும், 3, 4 வரிகளில் மற்றொரு எதுகையும்) பின்பற்ற வேண்டும். நகைச்சுவை வேண்டும். இந்த நிபந்தனையின் கீழ் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து லிமெரிக்குகள் இங்கே!

இந்த ஐந்தில் முதலாவது... பிரில்லியன்ட்! இதை அனுப்பிய கும்பகோணம், சீனிவாச நகரைச் சேர்ந்த கனகமூர்த்திக்குப் பாராட்டுக்கள்!

(இவர்கள் ஐந்து பேருக்கும், சுஜாதா கையெழுத்திட்ட ‘கற்றதும்... பெற்றதும்...’ புத்தகம் பரிசாக அனுப்பிவைக்கப்படுகிறது. -ஆ-ர்)

‘**கொ**டுமைகள் இருவகை
சொல்லால் வருவது செயலால்வருவது
ஆனால் இரண்டும் சேர்ந்தது
பல்லால் வருவது’

ஆக்டன் நாஷின் அற்புதமான, சுருக்கமான வரிகளுக்கு முழு நியாயம் செய்ய இயலாமல், இப்படித்தான் என்னால் மொழிமாற்ற முடிகிறது. இந்த மேட்டரை எதற்குக் கொண்டுவருகிறேன் என்றால்... சமீபத்தில் வடமேற்கு ஓரத்தில் இருந்த கடைவாய்ப் பல் முணுமுணுவென்று வலிக்கத் தொடங்கியது. டாக்டர் அரவிந்திடம் சென்று காட்டியபோது, மாத்திரை எழுதிக் கொடுத்து, ‘இரண்டு நாள் பாருங்களேன்’ என்றார். வலியை மறக்கச் சிந்தனைவசப்பட்டேன்.

சுமேரியா, சிந்துவெளியின் ஹரப்பா நாகரிகத்திலிருந்து பல்வலியும், அதற்கான சிகிச்சை முறைகளும் இருந்திருக்கின்றன. எகிப்திய பாப்பைரஸ்களில் எழுதப்பட்டிருக்கின்றன.

மனிதன் பல்லால் பட்ட அவதி, சொல்லால் பட்ட அவதிக்கு மிக முந்தையது. பொய்ப் பல் வைப்பது இந்தியாவிலும், சீனாவிலும் கி.மு. 300-லிருந்து இருந்து வருகிறது.

கி.மு. 500-லேயே சீனாவிலும் இந்தியாவிலும் பற்பசை பயன்பட்டு வந்திருக்கிறது. நவீன பற்பசை 19-ம் நூற்றாண்டில் துவங்கியுள்ளது. 1824-ல் பீபாடி என்பவர், முதன்முதலாக பற்பசையில் சோப்பு சேர்த்தார். ஜான் ஹாரிஸ் சாக்கட்டிப் பொடி சேர்த்தார். 1873-ல் கோல்கேட் நிறுவனம், பற்பசையை ஜாடிகளில் தந்தது. நவீன பற்பசையை ட்யூப்களில் தந்தவர் வாஷிங்டன் ஷெஃபீல்ட். பல் தேய்க்கும் பிரஷ்கூட சீனர்கள் ஆதிகாலத்திலிருந்தே பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். அவர்கள் பன்றி ரோமத்தை பிரஷ்ஷாகப் பயன்படுத்தினார்களாம். நவீன பிரஷ், 1885-ல் அமெரிக்காவில் தயாரிக்கப்பட்டது. டூபாண்ட் நிறுவனம்தான் 1924-ல் நைலான் பிரஷ்களைக் கொண்டு வந்தது.




கவனம் கலைக்க, இந்த சுவாரஸ்யமான தகவல்களைப் படித்துக்கொண்டு இருந்தபோது... ம்ஹூம்! என் பல் வலி மெள்ள மெள்ள அதிகரித்தது.

நவீன பல் மருத்துவம் தனி இயலாக சென்ற நூற்றாண்டிலிருந்துதான் துவங்கியிருக்கிறது. அதற்கு முன் பொதுமருத்துவர்களே பல் பிடுங்கி வந்தார்களாம். சில சமயம், முடி வெட்டகங்களிலும் பல் பிடுங்கியுள்ளதாகச் சரித்திரக் குறிப்புகள் உள்ளன.

இந்தத் தகவல்களிலும், என் பல் வலி குறையவில்லை. நடுராத்திரியில் வலி அதிகமாகி, ஓநாய்கள் துரத்துவது போலக் கனவு கண்டு, காலையில் முதல் காரியமாக ஓடிப் போய், ‘பிடுங்கிவிடுங்கள்’ என்றேன்.

இப்போதெல்லாம் பல் பிடுங்கும்போது வலி இருப்பதில்லை. அதற்கு முன் மரத்துப் போக, கூரையில் தரப்படும் ஊசிதான் வலிக்கிறது. அந்த ஊசி வலிக்காமல் இருக்க, முன் மரப்புக்காக ஒரு ஊசிகூடப் போடுகிறார்கள்.

எழுபது ஆண்டுகள் என்னுடன் வாழ்ந்த பல்லை ஏழே நிமிஷங்களில் நீக்கி, ட்ரேயில் ‘ப்ளங்க்’ என்று போட்டபோது, அதை வாஞ்சையுடன் பார்த்து, ‘போய் வா, நண்பா!’ என்று விடைகொடுத்தேன். இன்னும் கொஞ்ச காலம் தாழ்த்தியிருக்கலாம். ஆனால், நாஷ் சொன்னது நினைவுக்கு வந்தது...

‘Some tortures are physical
And some are mental
But the one that is both
is dental’.

**இ**ளையராஜாவின் திருவாசகம் சிம்பொனியை அளித்த சாந்தோம் தமிழ் மையம், Mozart Meets India என்னும் 60 நிமிட ஆல்பத்தை வெளியிட இருக்கிறார்கள். கர்னாடக சங்கீதத்தின் சங்கராபரணம், சிந்துபைரவி, காபி, பிலஹரி, பந்துவராளி, ஹம்ஸாநந்தி போன்ற ராகங்களை மேற்கத்திய இசையுடன் இழையூடவைத்து, பாம்பே ஜெயஸ்ரீ, ஓ.எஸ்.அருண், கத்ரி கோபால்நாத், எம்பார் கண்ணன், ஏ.கே.தேவி, எல்.கிஷோர்குமார் போன்ற வர்களுடன், 75-க்கும் மேற்பட்ட வாத்தியக் கலைஞர்கள் பங்கேற்கும் நிகழ்ச்சி ஒன்றை ஃபாதர் ஜகத் காஸ்பர்ராஜ் ஏற்பாடு செய்திருக்கிறார். இதற்கு இசையமைத்த நெல்லை ஜேசுராஜின் பெயரை இனி அடிக்கடி கேட்கப்போகிறோம். இது கர்னாடக சங்கீதத்தின் குவி மையமான மியூஸிக் அகாடமியில் ஒலிக்கவிருக்கிறது. ஒரு மியூஸிக் வீடியோவும், ஓப்பெராவும் அளிக்கவும் திட்டமிட்டுள்ளார்கள்.




இசை, நாடகம், நாட்டியம், சினிமா துறைகளில் தென்னாட்டின் எல்லாக் கலைஞர்களும் சென்னையில்தான் குவிந்திருக்கிறார்கள். எண்ணற்ற திறமைகள் இருக்கின்ற இப்படிப்பட்ட நகரத்தில், performing arts-க்கென்று தனிப்பட்ட ஆடிட்டோரியம் இல்லை. மியூஸியம் தியேட்டரில் கட்டைகளையெல்லாம் நீக்கி, அமைப்பைக் கலைத்து மாற்ற வேண்டும். நாரத கான சபா, மியூஸிக் அகாடமி அரங்கங்களில் அகோஸ்டிக்ஸ் சரியில்லை. கலைவாணர் அரங்கம் பராமரிப்பில்லை. ராணி சீதை ஹால் சின்னது. இமேஜ் ஆடிட்டோரியம் மற்றும் சில தனியார் பணக்காரப்பள்ளிகளின் அரங்கங்கள் சிறப்பாக உள்ளன. பதவி உயர்வு கொடுத்து மாற்றலாம். சம்மதிப்பார்களா என்று தெரியவில்லை.

கலைஞர் மனசு வைத்தால், நிகழ் கலைக்கென்றே மும்பை, டில்லியில் உள்ளது போல ஓர் அருமையான தனியரங்கத்துக்கு இடமும், நிதியும் ஒதுக்கலாம். இயல், இசை, நாடக மன்றமும், தனியார் பங்கீடும் சேர்ந்து ஒரு ட்ரஸ்ட் அமைத்து இதை நடத்தலாம். சிட்னி ஓப்பெரா ஹவுஸ் போல... கான்சர்ட் ஹால், ஓப்பெரா ஹால், நாடக அரங்கம், ப்ளே ஹவுஸ் என்னும் சிற்றரங்கம், ஸ்டூடியோ என்று திட்டம் போட்டுக் கட்டினால், உலகமே நம்மை நோக்கிப் பாடி ஆட ஓடி வரும்.




நன்றி: நியூயார்க்கர்

**லெ**பனான் தாக்குதல் பற்றிய கார்ட்டூன்களில் என்னைச் சிந்திக்கவைத்தது மேலே உள்ள கார்ட்டூன், பக்கத்தில் வழக்கம்போல் ஒரு நியூயார்க்கர் ரத்தினம்!



பாடநூல் பகல் சத்துணவு முட்டை
பயணிக்க சைக்கிள் பஸ் அனுமதி அட்டை
இத்தனையும் இலவசத் திட்டத்தில்
எமக்கு என்றானக் கட்டத்தில்
ஏன் வைத்தீர், தேர்வெனும் முட்டுக் கட்டை!

- **கனகமூர்த்தி,** கும்பகோணம்



நெல்களத்தில் கதிரடிக்கும் தாய்
நுரையேப்பக் கள்வழியும் அப்பன் வாய்
பண்ணை வண்டி
போவதைக் கண்டு
பசியில் விரல் சூப்பும் சேய்!

- **ம.ஞானசேகரன்,** பாண்டிச்சேரி



தனிவீடு ரொக்கம் நகை புதுவண்டி
துணிமணி பாத்திரம் குடம் தோண்டி
அழகான மனைவி
இருந்தாலும் நினைவில்
ஹனிமூன் கவலையில் பாண்டி!

-**ஆர்.பிரகாஷ்,** திருச்சி



இட்ட கட்டளை, அன்பாய் விட்ட தூது
பயனேதும் தராத போது
புலன் விசாரணை, புது ஊழல் வந்து
பல மிரட்டல்களால் நொந்து
பட்டபின் கட்சி தாவினான் சேது!

- **எஸ்.கௌரிலக்ஷ்மி,** ஸ்ரீரங்கம்



யு.எஸ் போனான் துரை
ஏதும் இல்லை குறை
ஆனால் கறுத்தான்
தொப்பை சிறுத்தான்
சோத்தைப் போட்டு நிறை!

- **கணேசகுமாரன்,** நாகப்பட்டினம்

## புத்தன் மனைவி கேட்கிறாள்...

உச்ச நீதிமன்றத்திலும் உயர் நீதிமன்றத்திலும் மூத்த வழக்கறிஞராகப் பணிபுரியும் க.துரைசாமி அவர்களைச் சென்ற வாரம் சந்திக்க நேர்ந்தது.

அவர், டாக்டர் மு.வரதராசனாரின் மாணவர் என்று தெரிந்ததும், வழக்கு விஷயங்களைப் புறக்கணித்துவிட்டு மு.வ-வைப் பற்றிக் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டு இருந்தோம். டாக்டர் மு.வ. அறக்கட்டளை சார்பாக, தான் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஏப்ரல், 1995-ல் ஆற்றிய சொற்பொழிவுகள் கொண்ட புத்தகத்தை எனக்களித்தார். டாக்டர் மு.வ-வைப் பற்றி ஆசிரியர், அறிஞர், அறவோர் என்கிற மூன்று பாகுபாடுகளில் பல சுவையான சம்பவங்களை விவரித்துள்ளார்.




புத்தகத்தின் இறுதியில், துரைசாமி மாணாக்கராக இருந்தபோது எழுதிய கட்டுரையின் கையெழுத்து வடிவத்தை, மு.வ-வின் திருத்தங் களுடன் கொடுத்திருக்கிறார். ஒரு தமிழ்ப் பேராசிரியர் இந்த அளவுக்குச் சிரமம் எடுத்துக்கொண்டு, வரி வரியாகப் படித்துத் திருத்தங்கள் கொடுத்திருந்தது வியக்கவைக்கிறது. இறுதியில் அவர், 'இது ஒரு கட்டுரை. இதில் முக்காற் பங்கு ஒரு நிகழ்ச்சிக்கு விளக்கம் பொருந்தாது - மு.வ.' என்று எழுதிவிட்டு, 10-க்கு 1 மதிப்பெண் போட்டிருக்கிறார். நல்லவேளை, நான் மு.வ-விடம் தமிழ் படிக்கவில்லை.

டாக்டர் மு.வ-வை 'திருக்குறள் தெளிவுரை'க்காக மட்டும்தான் பலர் நினைவுகூர்கிறார்கள். அவர் சிறந்த மொழி நூல் ஆராய்ச்சியாளர், இலக்கிய ஆய்வாளர், திறமையான துணைவேந்தர், கல்வியாளர், நாவலாசிரியர் போன்ற விஷயங்களையெல்லாம் மெள்ள மறந்து கொண்டு இருக்கிறோம். அவரது 'கரித்துண்டு', 'கள்ளோ காவியமோ', 'கி.பி.2000' போன்ற புத்தகங்களை மாணவப் பருவத்தில் படித்துள்ளேன். இன்றும் அவை பாரி நிலையத்தில் மறுபதிப்பில் உள்ளன என்றே எண்ணுகிறேன். 'சமைத்துப் பார்', 'பிரபலமானவர்களின் விலாசங்க'ளைவிட தமிழில் மிக அதிகம் பதிப்புகள் கண்ட நூல் - கழகத்தின் திருக்குறள் தெளிவுரை. நவீன தமிழ் இலக்கியத்தில் நாவல்கள் பற்றி எம்.ஃபில் போன்ற பட்டங்களுக்கு ஆய்வு செய்பவர்களுடைய கட்டுரைகளின் முதல் அத்தியாயத்தில், கட்டாயமாக மு.வ. இருப்பார்.

'ஆமையும் முயலும் என்ட்ரன்ஸ் தேர்வு எழுதின. முயல் 88 மார்க் வாங்கி இருந்தது. அதற்கு சீட் கிடைக்கவில்லை. ஆமை 81. ஆமைக்குதான் சீட் கிடைத்தது. ஏன் சொல்லு?' என்று எஸ்.எம்.எஸ். அனுப்பிய மகானுபாவரை நாலு நாளாகத் தேடிப் பிடித்தேன். 'எதனால், சொல்லும்? மண்டை வெடித்துவிடும்' என்று கேட்ட தற்கு, 'ஆமை முன்பு ஒருமுறை ஈசாப் கதையில், பந்தயத்தில் ஜெயித்துள்ளதால் ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் சீட் கிடைத்த தாம்!' - இப்படியா கடிப்பார்கள், அநியாயம்!

இந்தக் கடி ஜோக்குகளை இரண்டு அல்லது மூன்று வகைப்படுத்த முடிகிறது.
பெரும்பாலானவை இங்கிலீஷ், தமிழ்க் குழப்பங்களைச் சார்ந்தவை. இன்னும் சில அரைகுறை ஆங்கில வகை. மற்றவை, வார்த்தைகளின் இரட்டை அர்த்தங்கள் வகை! ஒவ்வொன்றுக்கும் இங்கே உதாரணம் கொடுத்துள்ளேன்.
ஆதாரமாகப் பார்த்தால், இவை அனைத்தும் Act of Creation-ல் ஆர்தர் கோஸ்லர் சொன்னபடி, இரண்டு தனிப்பட்ட, சிரிப்பற்ற வாக்கியங்கள் ஒன்றுடன் ஒன்று குறுக்கிடும்போது சிரிப்பு பிறக்கிறது. ஆங்கிலத்தின் sick jokes தமிழில் பிரபலமாகவில்லை. MAD, Playboy போன்றவை அதைத் தொடங்கிவைத்தன. இது கிளைத்துப் பிரிந்து, நெட்டில் ஆயிரக்கணக்கில் 'சிக் ஜோக்ஸ்' இருக்கின்றன.
'மம்மி, மம்மி...' என்று ஆரம்பிக்கும் உப பிரிவிலேயே நூற்றுக்கணக்கில் உள்ளன.
இரண்டு உதாரணங்கள்...
"மம்மி, மம்மி... ஜிம்மி தின்ன மாட்டேன்னுச்சே, அந்த சோறை என்ன பண்ணீங்க?"
"சும்மாரு! தட்டுல வெச்சதைச் சாப்பிடு!"
"மம்மி, மம்மி... நான் ஏன் நொண்டணும்?"
"சும்மாரு! இல்லே, அந்தக் காலையும் வெட்டிடுவேன்!"
நல்லவேளை, நாம் கடிப்பதோடு நிறுத்திவிட்டோம்!







'எது முக்கியம்? ஆயிரம் ஆசைகளை நிறைவேற்றுவதா அல்லது ஒரே ஒரு ஆசையை வெல்வதா?' என்ற கேள்வியை எழுப்புகிறது, சமீபத்தில் நான் பார்த்த லதாக்கிய மொழிப் படம். பெயர் சம்சாரா.
'இமாலய மலைத் தொடரின் மடியில் உள்ள லடாக்கில், ஒரு பௌத்த மத மோனாஸ்டரியில் கட்டுப்பாடாக வளர்ந்த ஓர் இளம் பிட்சு, புத்தரின் வாழ்வை இந்த நவீன யுகத்தில் வாழ்ந்து பார்க்க விரும்புகிறான். மூத்த துறவிகள் சம்மதம் தர, நதியைக் கடந்து நகரத்துக்கு வருகிறான்; காதலிக்கிறான்; திருமணம் புரிகிறான்; பிள்ளை பிறக்கிறது; விவசாயம் செய்கிறான்; வியாபாரம் செய்கிறான்; ஏமாற்றப்படுகிறான்; மற்றொரு பெண்ணுடன் தொடர்புகொள்கிறான்... இப்படி வாழ்வின் அத்தனை இன்ப - துன்பங்களையும் அனுபவித்துவிட்டு, மீண்டும் துறவறத்துக்குத் திரும்புகிறான்.
மனைவி அவனை வழிமறித்து, 'நீ புத்தனாகி ஞானம் பெற்றுவிட்டாய். இந்த யசோதராவையும் ராகுலனையும் எண்ணிப் பார்த்தாயா?' என்று கேட்டுவிட்டு அவனை வழியனுப்புகிறாள்.' (வைரமுத்து இதே கருத்தை ஒரு கவிதையாக எழுதியிருக்கிறார்).
இந்தப் படத்தின் டைரக்டர் 'பான் நளின்' ஒரு குஜராத்தி. ஆவணப் படங்கள் நிறைய எடுத்தவர். இவரது முதல் முழு நீள திரைப்பட முயற்சி இது. ஜெர்மனி, இத்தாலியைச் சேர்ந்த சர்வதேசத் தயாரிப்பாளர்கள். ஷான் கூ, கிறிஸ்டி சுங் என்கிற இரு சிறந்த சீன இளம் நடிக, நடிகையர்; மூச்சை நிறுத்தும் படப்பிடிப்பு; லதாக்கிய மொழி யில் இருந்தாலும், எனது டிரைவருக் கும் எளிதாகப் புரிந்த திரைக்கதை. எல்லாம் சேர்ந்து ஓர் அற்புத மாலை அனுபவத்தைத் தந்தது.
கார்லாவி வாரி, சன்டான்ஸ், கனடா போன்ற பல திரைப்பட விழாக்களில் விருதுகள் பெற்ற படம் இது. 'ஸ்டுடியோ 5' திரை அரங்கில், மெதுவான நதியோட்டம் போலச் சென்ற இந்தப் படத்தை ஆழ்ந்து ரசித்தது நிறைவாக இருந்தது.
நல்ல படங்களை, சென்னை இருமல் இல்லாமல் பார்க்கிறது.

கண்டதும்... கேட்டதும்..?!

**மா**ம்பழ சீஸன் முடியப்போகும் தறுவாயில் ஒரு ‘லாட்டரல் திங்க்கிங்’ கேள்வி...

ஒரு கூடையில் பத்து மாம்பழங்கள் இருந்தன. நாங்கள் பத்து பேர் ஆளுக்கொரு மாம்பழம் எடுத்துக்கொண்ட பின்னும், கூடையில் ஒரு மாம்பழம் இருந்தது. எப்படி?

விடை கடைசியில்.



**ஆ**சிரியர் சாவி அவ்வப்போது எதிர்பாராத புதுமைகள் செய்வார். வி.ஜி.பி. கோல்டன் பீச்சில் ஒரு தங்கச் சாவியை ஒளித்துவைத்து, ஆயிரக்கணக்கானவர்களை மணலைத் துழாவித் தேடச் சொன்னார். டிரைவ்-இன் ஓட்டலில் எனக்கும் ஓவியர் ஜெயராஜுக்கும் ஒரு நேர்காணல் ஏற்பாடு செய்தார். அந்நாளில் ஒரு குட்டி எழுத்தாளனான எனக்கு அத்தனை பெரிய முக்கியத்துவம் தந்திருந்தார். என்னை மட்டும் இல்லை... பல இளைஞர்களை ஊக்குவித்தவர் சாவி. மாலன், வஸந்த், அரஸ் போன்றவர்கள் உடனே ஞாபகம் வருகிறார்கள்.

மார்ச் 1979-ல் இளம் எழுத்தாளர்களான சுப்ரமண்ய ராஜுவையும் பாலகுமாரனையும் ‘குங்குமம்’ இதழ் ஒன்றைத் தயாரிக்கும்படி சொன்னார் சாவி. நான் அப்போது பெங்களூரில் இருந்தேன். அந்த இதழுக்கு கமல்ஹாசனைக் கதை எழுதச் சொன்னார்கள் (‘ஒட்டுதல்’). என்னை உடனே அனுப்பும்படி ஒரு கவிதை கேட்டார்கள். நான் ஒரு இன்லேண்டு லெட்டர் வாங்கி, போஸ்ட் ஆபீஸிலேயே உட்கார்ந்து, ‘கோயிலுக்குப் பக்கத்தில் கார் துடைக்கக் காத்திருப்பாய்’ என்று துவங்கி, குழந்தைகள் தினத்தைப் பற்றி ஒரு மரபுக் கவிதை எழுதி, ‘உடன் கவிதை’ என்று குறிப்பிட்டுத் தபாலில் சேர்த்தேன். அது ‘உடல் கவிதை’ என்ற தலைப்பில் பிரசுரமாயிற்று. (முழுக் கவிதை 50-ம் பக்கத்தில்.) இப்போதுகூட சிலர், ‘உங்களுடைய உடல் கவிதை இன்னும் ஞாபகம் இருக்கு’ என்று சொல்கிறார்கள். கவிதைக்கும் டைட்டிலுக்கும் பொருத்தமில்லை என்பதை யாரும் கவனிக்கவில்லை.



இப்படி தற்செயலாகப் பெயர் மாறுவது பலருக்கு நிகழ்ந்திருக்கிறது. அண்மையில், மால்குடி சுபாவைத் தொலைக்காட்சி பேட்டி ஒன்றில், ‘மால்குடி என்ற பெயர் எப்படி வந்தது? சொந்த ஊரா?’ என்று பேட்டியாளர் கேட்க, “நான் ‘மால்காடி’ (சரக்கு வண்டி) என்கிற ஒரு இந்தி நாட்டுப்புறப் பாட்டில் பிரபலமானேன். அங்கே என்னை ‘மால்காடி சுபா’ என்றே அழைத்தனர். ‘வால்பாறை, வட்டப் பாறை...’ மூலம் தமிழுக்கு அறிமுகமானபோது, மால்காடியை மால்குடி என்று மாற்றிவிட்டார்கள். பின்பு அதுவே நிலைத்துவிட்டது” என்றார்.

இப்போது கூட என்னை அன்பர்கள் பீச்சில் சந்திக்கும்போது, “மே ஐ நோ ஹூ யு ஆர்?” என்று எதற்கோ இங்கிலீஷில் கேட்பார்கள். “ஐ எம் ஜஸ்ட் எ நோபடி” என்பேன். சிலர், “இப்ப என்ன எழுதறீங்க?” என்று கேட்பார்கள். சிலர், “கண்டதும் கேட்டதும்... அருமையா இருக்கு சார்” என்பார்கள். முன்பெல்லாம் திருத்திக்கொண்டு இருந்தேன். அது அவர்கள் மனதில் பதியாது என்பது தெரிந்து, இப்போதெல் லாம் மையமாகப் புன்ன கைத்து, “அப்படியா! ரொம்ப சந்தோஷங்க” என்று விலகிவிடுகிறேன். அதேசமயம், நான் எழுதும் ஒவ்வொரு வரியையும் உன்னிப் பாகப் படித்து, சைக்கோ அனலைஸ் செய்பவர் களும் நிறையப் பேர் இருக்கிறார்கள். அவர் களையும் எப்போதாவது சந்தித்தால், சரேல் என்று எண்ணெய் தடவிய மின்னல் போல விலகி விடுவேன்.

**ஜி.**எஸ். பாலகிருஷ்ணனின் புதல்வர் ஜி.பி.பிரபாத், சத்யம் கம்பெனியில் பெரிய வேலையில் இருக்கிறார். அவர் ஆங்கிலத்தில் சிறந்த எழுத்தாளரும்

ஆவார். அவரது இரண்டாவது ஆங்கில நாவல் மேல்நாடுகளிலும், இந்தியாவிலும் வெளிவந்திருக்கிறது. அமேஸானில் கிடைக்கும். பெயர் Eimona.

இந்திய ஆங்கில நாவல் உலகம் இப்போது பெங்காலிகளின் பேட்டை என்று சொல்லலாம். ருஷ்டிகளும் விக்ரம்சேத்துகளும் சிருஷ்டித்து விட்டு வைத்ததை முகர்ஜிகளும், சாட்டர்ஜிகளும் ஆக்கிரமித்துக் கொண்டுஇருக்கிறார்கள். சில பார்ஸிகளும் எழுதி வருகிறார்கள். இந்தத் துறையில் ஆர்.கே. நாராயணனுக்குப் பிறகு ஒரு தமிழர் பெரிதாக வராத குறையை இந்த நாவல் போக்குகிறது.

"இவங்க ஒண்ணுமே போட மாட்டாங்க போலன்னா தோணுது! பாட ஆரம்பிச்சுட வேண்டியதுதான்!"




எளிய ஆங்கிலம். இன்றைய தினங்களின் 'கண்டதே காட்சி, கொண் டதே கோலம்' என்னும் அலட்சிய அவலப் போக்கையும், பணத் தேடலையும், பாசாங்கு வாழ்க்கையையும் கூர்ந்து கவனித்து, நகைச் சுவையும் எள்ளலும் கலந்த நடையில், தள்ளி நின்று கவனிக்கும் ஒரு வயதான பாத்திரத்தின் பார்வையிலிருந்து எழுதியிருக்கிறார். தாத்தா தாங்க முடியாமல் பேத்தியை அழைத்துக் கொண்டு காணாமல் போய்விடுகிறார். யாருமே கவலைப்படுவதில்லை. டி.வி-யில் இது பற்றி பேட்டி கொடுப்பதற்குப் போகும் முன், புது டிரஸ் வாங்கிக் கொள்கிறாள் அந்தப் பெண்ணின் தாய். இந்த 'டைஸ்டோப்பிக்' (dystopic) எதிர்காலம் இப்போதே நம்மிடையே வந்துவிட்டது என்கிறார் பிரபாத்.

**ச**ரவணா போவதற்குள் மழை வந்துவிட்டது. ஏவி.எம். ராஜேஸ்வரியில், கம்பர் விழாவில் நுழைந்தேன். 'பேசுவது மானம், பேணுவது காமம், கூசுவது மானுடரை நன்று நம கொற்றம்' என்று பேச்சாளர் முழங்கிக்கொண்டு இருக்க, உள்ளே செல்லும் வழிநடையில் வைத்திருந்த மினி புத்தகக் கண்காட்சியில் கொஞ்சம் மேய்ந்தேன். அமுத நிலையம் வெளியிட்ட 'பழமொழி அகராதி', தெ.பொ.மீ-யின் 'தமிழ்த் தொண்டு', 'தொல்காப்பியம் பொருளதிகாரம் ஆங்கில மொழிபெயர்ப்பு', 'தமிழ் எழுத்தின் வரி வடிவம்', முனைவர் சிவகாமியின் 'சங்கத் தமிழியல்', கி.வா.ஜ-வின் 'புது டயரி' போன்ற புத்தகங்கள் முன்னூற்று சொச்சத்துக்குக் கிடைத்தது. மழை நின்றுவிட்டது. கம்பரை அப்புறம் விசாரிக்கலாம் என்று வெளி வந்தேன். பல ஆங்கிலப் புத்தகங்களுக்கு ஆரம்ப விலையே 300 என்னும்போது, தமிழ்ப் புத்தகங்கள் எவ்வளவு சல்லிசானவை, தமிழிலேயே இன்னும் எத்தனை படிக்கவேண்டி இருக்கிறது என்கிற விஷயம் பிடரியில் உறைத்தது.




வண்டிக்காரன்: "சாமி! சித்த அந்தப்புறம் மறைவாப் போய் நிக்கிறீங்களா? குதிரையைப் பிடிச்சு வண்டியிலே பூட்டிடறேன்... உங்களைக் கண்டுட்டுத்தானுங்க அது இப்படி ஓடுது!"

உதாரணம், நம் பழமொழிகள்...

**உழுகிற மாடு பரதேசம் போனாலும், அங்கும் ஒருவன் கட்டி உழுவான்!**

**உளவு இல்லாமல்,களவு இல்லை.**

**சமாசாரம் தெரியாமல், அமா வாசைக்குப் போகிறான்.**

**சந்நியாசியைக் கடித்த நாய்க்குப் பின்னாலே நரகமாம்; சந்நியாசிக்கு முன்னாலே மரணமாம்!**

**நரிக்குட்டிக்கு ஊளை பழக்க வேண்டுமா?**

**மலையத்தனை சாமிக்கு கடுகத் தனை கற்பூரம்!**

இப்படி, தமிழனின் பட்டறிவும் நகைச்சுவையும் தெறிக்கும் 10,760 பழமொழிகளின் அகரவரிசைத் தொகுப்பு. மழைக்கும் கம்பனுக்கும் நன்றி!

**இ**ந்த வாரம் நியூயார்க்கர் கார்ட்டூன் களுக்குப் பதில், நம் தமிழ்நாட்டில் நியூயார்க்கர் தரத்தில் கார்ட்டூன்கள் வரைந்த மூன்று சித்திரக்காரர்களை விகடன் பிரசுரங்களிலிருந்து உதாரணம் தர விரும்புகிறேன். தாணு, ராஜு, கோபுலு. தாணுவும் கோபுலுவும் அவர்கள் தகுதிக்கும் திறமைக்கும் ஏற்ப இலக்கிய உலகத்தால் கொண்டாடப் படாவிட்டாலும், இருவரும் நம்மிடையே இருப்பது பெருமைக்குரியது. ராஜு கடைசி காலத்தில் ரொம்ப கஷ்டப்பட்டு இறந்திருக்கிறார் என்பது முன்னுரையில் தெரியும்போது, அவரது நகைச்சுவைக்கு ஒரு சோக இழை கூடுகிறது.

**மாம்பழ விடை:** பத்து பேரில் கடைசி நபர் கூடையோடு எடுத்துக் கொண்டார்.

### எ.பி.க



**பு**த்தகமே சாலத் தொகுத்தும் பொருள் தெரியார்
உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும் - மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்
தேற்றும் புலவரும் வேறு.

**- நாலடியார்.**

(பொருள்: நிறைய புத்தகங்களைச் சேர்த்து வீடெல்லாம் நிரப்பினால், அதைப் போற்றுபவர் வேறு. அவற்றை அர்த்தம் புரிந்து பாராட்டுபவர்கள் வேறு வகை.)

### உடல் கவிதை



*(சர்வதேச குழந்தைகள் வருடம்)*

**கோ**யிலுக்குப் பக்கத்தில் கார் துடைக்கக் காத்திருப்பாய்
கூட்டமுள்ள ஹோட்டல்களில் சாப்ட்டவுடன் ப்ளேட் எடுப்பாய்
பாயின்றிப் படுத்திருப்பாய் பிளாட்பாரத்தில் குளிப்பாய்
பட்டரையில் வெட்டிரும்பால் பகல் இரவாய்த் தட்டிடுவாய்
சாயங்கால சமுத்திரத்தின் அருகில் சுண்டல் விற்பாய்
சந்துகளில் இருட்டில் பெண்களுக்காய் ஆள் பிடிப்பாய்
காஜா அடிப்பாய் கட்டடத்தில் கல்லுடைப்பாய்
கார் அடியில் படுத்திருந்து கறுப்பாய் எழுந்திருப்பாய்
மேஜை துடைப்பாய் மேட்டினியில் இடிபடுவாய்
மெதுவாக என்னிடத்தில் கருப்பிலே சீட்டு விற்பாய்
கூஜா எடுத்துப் போய் குடிதண்ணீர் கொணர்வாய்
கூட்டத்தில் கரைந்து பாக்கெட்டைக் கத்தரிப்பாய்
ராஜாவே உனக்கென்றே நாங்கள் இவ்வருஷம்
ராஜ்ஜியம் முழுவதுமே விழாவெடுக்கப் போகின்றோம்
திரைப்படங்கள் எடுப்போம் தின்பண்டம் தந்திடுவோம்
தீவிரமாய் உன்நிலைமை உயர்த்துவது பற்றி
வரைபடங்கள் வரைந்து வாதாடிப் புகைபிடித்து
வருங்காலக் கனவுகளை வண்ணங்களாய்த் தருவோம்
குறைப்பட்டுக் கொள்ளாதே கொஞ்ச நாள் பொறுத்திரு
கூட்டங்கள் கூட்டி குளிர்சாதன அறைக்குள்
சிறைப்பட்டு சிந்தித்து சீக்கிரமே முடிவெடுப்போம்.
சில்லறையாய் இல்லை போய்விட்டு அப்புறம் வா!

## ஒன்றும் இல்லை’யில் எல்லாம் உண்டு!

**வி**கடன் 6.08.06 இதழில், ‘பிரபஞ்சத்தில் அணுக்களுக்கு அழிவில்லை’

என்னும் பில் ப்ரைசனின் கருத்தைச் சரியாகப் புரிந்துகொண்டவர்கள் பலர் பாராட்டுக் கடிதங்கள் அனுப்பியிருந்தார்கள். பக்கம் பக்கமாகக் கட்டுரைகள்கூட எழுதி அனுப்பியிருந்தார்கள். நன்றி!

ப்ரைசன், பிரபஞ்சத்தின் ஆரம்ப கணத்தை விவரித்து எழுதியிருக்கிறார். Big bang என்று அவர் சொல்லும் ஆரம்ப வெடித் தத்துவம் இப்போது அறிவியலாளர்களால் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டு இருக்கிறது. ஜோதிகா- சூர்யா திருமணத்தைக் கொஞ்ச நேரம் மறந்து, அதைக் கவனிப்போம்.

ஒரு புரோட்டான் என்பது எத்தனை சிறியது? அதன் ‘ட்’டன்னாவின் புள்ளியின் பரிமாணத்தில் 500,000,000,000 புரோட்டான்களை அடக்க முடியும். அல்லது, ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு எத்தனை செகண்டுகள் உள்ளனவோ, ஏறத்தாழ அத்தனை புரோட்டான்களை அடக்க முடியும்.



இந்த புரோட்டானை 100 கோடி பாகமாக்கினால் ஏற்படும் அவ்வளவு சிறிய இடைவெளியில், ஒரு அவுன்ஸ் மேட்டர் என்னும் பருப்பொருளைஅடைத் துப் பாருங்கள்... நீங்கள் ஒரு பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கத் தயார்! பரிமாணமற்ற அத்தனை சிறிய இடத்தில் பிரபஞ்சத்தின் அத்தனை பருப்பொருள்களின் சாத்தியங்களும் அடர்ந்திருந்த அந்த ஆரம்ப கணத்தை ‘ஒருமித்த கணம்’ (சிங்குலாரிட்டி - singularity) என்கிறார்கள். அதிலிருந்து, காரணமின்றி திடீரென அத்தனை சக்தியும் வெடித்துச் சிதறிப் பரவியது.




இதைத் தள்ளி நின்று யாரும் பார்த்திருக்க முடியாது. காரணம், தள்ளி நிற்க இடம் எதுவும் இருந்திருக்காது. ‘ஸ்பேஸ்’ என்னும் விண்வெளியே அந்தச் சிதறலின்போது உண்டானதுதான். அந்தக் கணத்துக்கு முன் என்ன இருந்தது என்றும் சொல்ல முடியாது. காரணமும், காலமும் அப்போதுதான் துவங்கியது!

மனசில் எண் ணிப் பார்க்கக் கஷ்டமாக இருக் கிறதல்லவா? நம்மாழ்வார் முயற்சி செய்திருக்கிறார். ‘ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று...’ பிரபஞ்சம் அப்படித்தான் ஆரம்பித்தது என்கிறது காஸ்மாலஜி. ‘ஒன்றும் இல்லை’யில் இருந்து ‘எல்லாம் உண்டு’ என்கிற மாறுதல் நிகழ்ந்த ஒரு மந்திர உபஉபஉப கணத்தின் பிரிவில்தான் ஈர்ப்பு விசைகள் தோன்றின. இயற்பியல் விதிகள் தோன்றின. முதல் நிமிஷத்தில் பிரபஞ்சம் பல கோடி நூறாயிரம் மைல்கள் பரவிவிட்டது. இன்றுவரை விரிவடைந்துகொண்டே இருக்கிறது. அந்த பில்லியன் டிகிரி உஷ்ணத்தில், முதலில் ஹைட்ரஜன், ஹீலியம் போன்ற எளிய தனிமங்கள் தோன்றின. ஆரம்பித்த மூன்று நிமிடங்களில் மற்ற அத்தனை தனிமங்களும் உண்டாகிவிட்டன. இவை தான் பிரபஞ்சத்தில் இன்றும் புழக்கத்தில் உள்ளன. எதற்கும் அழிவே கிடையாது. ஒன்று மற்றொன்றாக மாறுவதுதான் பருப்பொருள் சக்தியாக, சக்தி பருப் பொருளாக... இதையெல்லாம் எப்படிக் கண்டுபிடித்தார்கள்? பக்கத்தில் இருந்து பார்த்தது போலச் சொல்கிறார்களே, எப்படி?

அந்த ஆரம்ப கணத்தின் இன்றைய விளைவுகள், விண்வெளியில் எங்கு நோக்கினும் ஒரு காஸ்மிக் மைக்ரோ வேவ் பின்புல வெளிச்சமாகத் தெரிகிறது. நட்சத்திரங்கள் அனைத்தும் விலகி விலகிச் செல்வதற்கு அத்தாட்சியாக, விண்வெளியில் தூரத்து நட்சத்திரங்களின் ஒளியை ஸ்பெக்ட்ராஸ் கோப் மூலம் பார்க்கும்போது, ரெட் ஷிஃப்ட் என்ற நிற மாலையின் சிவப்பு நிற இடமாற்றம் இருப்பது தெரிகிறது. இதிலிருந்து ஆரம்ப கணத்தைக் கணக்கிட்டு இருக்கிறார்கள். இன்றைக்கு ஏறத்தாழ 13.7 பில்லியன் (200 மில்லியன் முன்னே பின்னே இருக்கலாம்) ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்ததாம். (பில்லியன் என்பது 100 கோடி மில்லியன் 10 லட்சம்.)

இதை மற்றொரு சமயம் நான் விளக்கும் முன், மாணவர்களுக்கு ஒரு போட்டி... சிவப்பின் இடமாற்றம் red shift பற்றித் தமிழில் இரண்டு பக்கத்தில் தெளிவாகவிளக்கும் சிறு கட்டுரைக்கு (தபால் உறை மீது 'ரெட் ஷிஃப்ட்' என்று சிவப்பில் எழுதி அனுப்பவும்) வேறு என்ன, கையெழுத்திட்ட புத்தகப் பரிசுதான்! புத்தகம், என்னுடைய 'கடவுள் இருக்கிறாரா?'



'இருக்கிறார்' என்கிறார், 'கீதாசார்யன்' விய, ஆவணி (ஆகஸ்ட் 2006) இதழில், 'அந்தணர் அல்லாதார் அர்ச்சகர் ஆகலாமா?' என்கிற சிந்தனையைத் தூண்டுகிற கட்டு ரையை எழுதியிருக்கும் ஸ்ரீவைஷ் ணவச் சுடராழி டி.ஏ.ஜோசப் (ஆம்!).

'கல்லாய் கட்டையாய் சுண்ணாம்பாய் உலோகக் கலவை யாய் இருக்கும் ஒரு பொருளை, இறைவன் வந்து குடியேறும் வாசஸ்தலமாக மாற்றிக் காட்டியவன் இந்தியன். வேதங்களில் விதிக்கப்பட்ட சில மந்திரங்களை உச்சா டனம் செய்வதால், தெய்வம் மனிதன் செய்த விக்ரஹத்தில் இறங்கி நிலை பெறும். அதற்குப் புலனடக் கமும் எளிய வாழ்க்கையும் அமைந்த அர்ச்சகர்கள் தேவை" என்கிறார் ஜோசப். "பொறாமைப்படுகிற அளவுக்கு அர்ச்சகர் பணி செல்வமும் செல்வாக்கும் போகங்களும் கொழிக்கும் துறை அல்ல. அது அவர்களுக்கே தெரியும். அப்படி இருக்கையில், அதன் மேல் கண் விழக் காரணம் என்ன? காரணம் இருக்கிறது. அது என்ன என்றும், அதன் விளைவு என்ன என்றும் அடுத்த மாதம் எழுதுகிறேன்' என்று 'தொடரும்' போட்டு விட்டார் இந்த பாண்டிச்சேரிக்காரர். காத்திருக்கிறேன்.

வெள்ளிக்கிழமை, ஃபாதர் ஜகத் காஸ்பர்ராஜ் நண்பர்கள் மையம் மூலம் வெளியிட்ட மேற்கத்திய, கர்னாடக இசை கலந்த குறுந்தகட்டின் வெளியீட்டு விழா, காலஞ்சென்ற எம்.பி.ஸ்ரீனிவாசன் அவர்களுக்கு நினைவு அஞ்சலியாக, சென்னை யூத் காயர் வழங்கிய சுத்த தன்யாசியுடன் துவங்கியது. ஸ்ரீனிவாசன் தான் அந்த சென்னை இளைஞர் காயர் குழுவை நிறுவியவர். பல ஆண்டுகளுக்கு முன், கார்ப்பரேஷன் பள்ளிப் பிள்ளை களுக்கு இசைப் பயிற்சி கொடுத்து, இனிய ஒத்திசைவுடன்பாடும்படி கற்றுக் கொடுத்தார். அந்த டேப் தூர்தர் ஷனில் இருக்கும். 'தென்னங்கீற்றுச் சோலையிலே சிட்டுக் குருவி பாடுது, தன் பெட்டைத் துணையைத் தேடுது' என்ற 'தாகம்' திரைப் படப் பாட்டு உங் களில் சிலருக்கு நினைவிருக்கலாம். மலையாளத்தில் பல படங்களுக்கு இசை அமைத்தவர் அவர். அந்த வகை மெல்லிசை இன்றைய தமுக் கடியில் அமுக்கப்பட்டுவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

காயர் மியூஸிக் எப்போதாவது குறைந்த அளவில் பெருங்காயம் போல ஏ.ஆர்.ரஹ்மான் போன்றவர்களால் அரிதாகப் பயன்படுத்தப்பட்டு வரு கிறது. 'திருடா திருடா' படத்தில் ஷாகுல்ஹமீது பாடிய 'ராசாத்தி' என்ற பாட்டின் பின்னணி இசையில் முழுக்க முழுக்க ஒத்திசைக் குரல்களைப் பயன்படுத்தினார். காயர் முயற்சிகளுக்கு ஆதிகாரணர் எம்.பி.ஸ்ரீனிவாசன். விழாவில் அம்பிகா சோனி, தயாநிதி மாறன், முதல்வர் கலைஞர், கனிமொழி, என்.ராம், பாம்பே ஜெயஸ்ரீ போன்றோர் கலந்துகொண்டது சிறப்பு. கனிமொழி யின் உலக அமைதி நாடும் கவிதை இசையமைத்துப் பாடப்பட்டது.



சினிமா பத்திரிகை

ஸாட்டர் டே ஈவினிங் போஸ்ட் என்னும் அமெரிக்க வாரப் பத்திரிகை இப்போது வருவதில்லை. என் மாணவ நாட்களில், எம்.ஐ.டி. ஹாஸ்டல் ரீடிங் ரூமுக்கு வரும் அதன் இதழ்கள் பல வற்றைப் பார்த்திருக்கிறேன். அகலமாக அட்லாஸ் சைஸில் இருக்கும். பிரிட்டிஷ், அமெரிக்க முன்னணி எழுத்தாளர்கள் அத்தனை பேரின் கதைகளும் வரும். ஜோக்குகள் தரமாக இருக்கும். குடும்பப் பத்திரிகை. ஏறத்தாழ 150 ஆண்டுகள் வெளிவந்து, ஒரு கட்டத்தில் 30 லட்சம் பிரதிகள் விற்றாலும், உற்பத்திச் செலவையும், சம்பளங்களையும் சமாளிக்க முடியாமல் நஷ்டப்பட்டு, 1969-ல் நின்றுபோனது.

போஸ்ட்டில் என்னால் மறக்க முடியாத பகுதி, நார்மன் ராக்வெல்லின் அட்டைப் படச் சித்திரங்கள். அமெரிக்க மத்தியதர வாழ்வின் கவிதைக் கணங்களை, அதன் புன்னகை மாறாமல் தத்ரூபமாக வரையப்பட்ட படங்கள். (spartacus.schoolnet.co.uk/USA saturday.htm என்னும் வலைப் பக்கத்தில் அதன் சரித்திரம் உள்ளது.)

இப்படி எல்லாச் சிறப்புகளும் இருந்தும் நின்றுபோன பத்திரிகைகளில் மற்றொன்று 'லைஃப்'.

**நீதி:** கால மாறுதலுக்கேற்ப வேஷம் மாறவில்லை என்றால், நன்று போகும் பத்திரிகைகளும் நின்று போகும்.

**எ.பி.க.**

உன் கவிதையை நீ எழுது
எழுது உன் காதல்கள் பற்றி கோபங்கள் பற்றி
எழுது உன் ரகசிய ஆசைகள் பற்றி
நீ அர்ப்பணித்துக்கொள்ள விரும்பும் புரட்சி பற்றி எழுது
உன்னை ஏமாற்றும் போலிப் புரட்சியாளர்கள் பற்றி எழுது
சொல்லும் செயலும் முயங்கி நிற்கும் அழகு பற்றி எழுது
நீ போடும் இரட்டை வேடம் பற்றி எழுது
எல்லோரிடமும் காட்ட விரும்பும் அன்பைப் பற்றி எழுது
எவரிடமும் அதைக் காட்ட முடியாமலிருக்கும்
தத்தளிப்பைப் பற்றி எழுது
எழுது உன் கவிதையை நீ எழுது
அதற்கு உனக்கு வக்கில்லை என்றால் ஒன்று செய்
உன் கவிதையை நான் ஏன் எழுதவில்லை என்று
என்னைக் கேட்காமலேனும் இரு.

**- பசுவய்யா**

## மணிரத்னமும் ஷங்கரும் மாற்றிக் 'காட்டினார்கள்'!

**சென்**ற வார, நண்பர்கள் மைய குறுந்தகட்டு இசை விழாவுக்குச் சில பின்குறிப்புகள்...







மைய அரசின் கலாசார அமைச்சர் அம்பிகா சோனி தன்னைச் சுற்றிலும் ஒலித்த சங்கத் தமிழ் புரியாமல் மையமாகக் கேட்டுக்கொண்டு இருந்தார். சென்னை சிம்பொனி ஆர்கெஸ்ட்ராவுக்காக ஒரு பெரிய அரங்கம் அமைப்பதற்கு மைய அரசு நிதி உதவுவது பற்றி கலைஞர் பேசும்போது, அம்பிகா புன்னகைக்க, 'இசை விழா அல்லவா... அம்மையார் இசைந்து விட்டார்' என்று கலைஞர் சொன்னார். உடனே எழுந்த கரவொலி கேட்டு, அருகில்இருந்த என்.ராமை அம்பிகா திரும்பிப் பார்க்க, அவர் கலைஞர் சொன்னதை மொழி பெயர்க்க, உடனடியாகப் புன்னகை ரத்து செய்யப்பட்டது.

நான்கு மணி நேரம் மகளுக்காகப் பொறுமையுடன் வீற்றிருந்து (செமி ஃபைனல் நன்றி உரையே அரை மணி!), இறுதியில் கலைஞர், "இப்ப நான் பேசலாமா?" என்று துவங்கிய அந்த ஆயாச நேரத்திலும், அவரது வழக்கமான நகைச்சுவை மிளிர்ந்தது.

அதைவிட ஆச்சர்யம், 'மனோகரா' திரைப்படத்தின் 'பொன்னும் மணியும் மின்னும் வைரமும்' என்கிற நீண்ட வசனத்தை அவர் நினைவுகொண்டு வார்த்தை தவறாமல் சொன்னது.

அறிஞர் அண்ணா, கலைஞர் காலத்தில் திரைப்படங்களுக்கு எழுதப்பட்ட வசனங்களில் ஓசை நயம் முக்கியமானதாக இருந்திருக்கிறது. கே.ஆர்.ராமசாமி, சிவாஜி கணேசன் போன்றவர்கள் அவற்றை அழுத்தமாக,



தெளிவாக உச்சரிக்கும்போது, தமிழ் விளையாடும். தற்போதைய படங்களில் அந்த அளவுக்கு வசனம் கேட்கப் பொறுமை இல்லை. அம்மாதிரி வசனங்களை parody பண்ணினால் பார்க்கிறார்கள் (உதாரணம்: இம்சை அரசன்).

இன்றைய திரைப்படங்களில் சொந்தக் குரலில் பேசுபவர்கள் அரிதாகிவிட்டார்கள். கதாநாயகிகள் அனைவருக்கும் ஓரிரு பெண்கள்தான் குரல் கொடுக்கிறார்கள். ஐஸ்வர்யா ராய், அசின், ஆரோக்யா நாலரைப் பால், தங்க நகை, நல்லெண்ணெய் எல்லாவற்றுக்கும் இவர்களே கதாநாயகிகள். பலர் தமிழ் படிக்காதவர்கள். படித்திருந்தாலும் ல, ள, ன, ண குழப்பம் உள்ளவர்கள். (கேள்விக்கு கேல்வி, பணத்துக்கு பனம்). உச்சரிப்பு சுத்தமாக வராததாலேயே பேச்சைக் குறைக்க வேண்டிஉள்ளது. முன்பெல்லாம் மற்ற மொழி நடிகைகளான கண்ணாம்பா, சரோஜாதேவி, எம்.வி.ராஜம்மா, பானுமதி, அஞ்சலிதேவி போன்றவர்கள் சொந்தக் குரலில் பேசினார்கள். இன்றைய கதாநாயகிகளுக்கு டப்பிங் தியேட்டரே தெரியாது.

'காட்டு! பேசாதே!' என்பதுதான் இன்றைய மந்திர வார்த்தை. இந்தப் போக்கை முதலில் கொண்டுவந்தவர் மணிரத்னம். அவர் வரவுக்குப் பின், வசனம் காட்டப்பட்டுவிட்டால், நீட்டப்பட வேண்டிய அவசியமின்றி சுருண்டுகொள்கிறது. ஷங்கரும் அதிகம் எழுதவிட மாட்டார். முக்கியமான காட்சி புரியாமல் போய்விடுமோ என்ற சந்தேகம் இருக்கும்போது மட்டும் சற்று நீட்டச் சொல்வார்.

'இந்தியன்' படத்தில் தாத்தாவின் லஞ்சம் பற்றிய டி.வி. காட்சி; 'முதல்வன்' இன்டர்வியூ காட்சி, 'அந்நியன்' நேரு ஸ்டேடியம்... இப்போது 'சிவாஜி' படத்தின் மொட்டை மாடிக் காட்சி இவற்றில் நான் எழுதிய நீண்ட வசனங்கள் பொதுவாக எனக்கு நினைவு வருகின்றனவே தவிர, வார்த்தைக்கு வார்த்தை அவற்றை என்னால் திருப்பிச் சொல்ல முடியாது.

இன்றைய தினங்களில் கவிஞர்கள்தான் தங்கள் கவிதைகளைப் பார்க்காமல் முழுசாக ஒப்பிக்கிறார்கள். பிறர் கவிதைகளை..? பட்டிமன்றப் பேச்சாளர்கள்!




சென்ற ஆண்டின் சிறந்த அமெரிக்கக் கட்டுரைகளின் தொகுப்பையும், சிறந்த சிறுகதைகளின் தொகுப்பையும் என் மகன் வாங்கிவந்து கொடுத்தான்.

ஒவ்வொரு வருடமும் இம்மாதிரியான தொகுப்பு தமிழில் வர வேண்டும் என்று எழுதி வருகிறேன். தமிழில் வெளிவரும் சிறு பத்திரிகைகள் அத்தனையும் எனக்குக் கிடைக்கின்றன. அவற்றில்இருந்து இம்மாதிரியான தொகுப்பு தயாரிக்க இயலவில்லை. கட்டுரைகள் அனைத்திலும் கவிதை நெஞ்சம், போஸ்ட் மாடர்னிசம் போன்ற வார்த்தைகளைப் போட்டுக் குழப்புகிறார்கள்.

அமெரிக்கக் கட்டுரைத் தொகுப்பைப் பாருங்கள்; அவற்றின் வீச்சு பிரமிக்கவைக்கிறது. 'தகவல் கடலில் திக்குமுக்காடுவது' பற்றி ஒரு கட்டுரை, 'சிஸ்டர் பெரனாடெட்டின் குலைக்கும் நாய்' என்று ஒரு கட்டுரை, மறதி பற்றி, தேகப் பயிற்சியின் தீமைகள் பற்றி, சிறுசிறு மௌனங்கள் பற்றி, காலத்தின் சின்னச் சின்ன அறைகள் பற்றி, பிரெஞ்ச் சமையல் பற்றி, ரோபாட்டுகளுடன் இரவு உணவு உண்பது பற்றி.

இந்தக் கட்டுரைகள் அமெரிக்காவின் பல்வேறு சிறு பத்திரிகைகளிலிருந்தும், கல்லூரி இதழ்களிலிருந்தும் எடுக்கப்பட்டு, அருமையான அறிமுகக் கட்டுரையுடன் வருஷா வருஷம் வருகிறது.

ஹூம்... ஆதங்கத்தில் ஒரு சிக் ஜோக்:

“அம்மா! இந்த வருஷம் நாம மட்டும் ஏன் ஆகஸ்ட்லயே தீபாவளி கொண்டாடறோம்?”

“சும்மாரு! உங்கப்பாவுக்கு உடம்பு சரியா இல்லை!”

அதே போல, இரண்டு டஜன் கதைகளின் தொகுப்பைக் கவனிக்கும்போது, சங்க கால இலக்கியம் சம்பிரதாய வடிவிலிருந்து வெகு தூரத்தில் சென்றுவிட்டதாகத் தெரிகிறது. ஆனால், சிறுகதை இலக்கியம் இன்னும் உயிருடன் உள்ளது. தமிழில் அது வழக்கொழிந்து வருகிறது. என் மாதிரி ஒன்றிரண்டு பேர்தான் பிடிவாதமாகக் கதையை விரிவாக எழுத விரும்புகிறவர்கள்.

**எ.பி.க.**

கண்ணீரைப் படைத்தது
கடவுளின் தவறா
ஆனந்தப்பட்டு
அதை வடிக்காமல்
அழுது வடிக்கும்
மனிதனின் தவறா?

- **நீலமணி** (ஃ சிற்றிதழ் தொகுப்பு)

## என்னை உலுக்கிய படம்!

**செ**ன்ற இதழில் குறிப்பிட்டிருந்தபடி, எம்.பி.ஸ்ரீனிவாசனின் இசையில் அந்தச் ‘சிட்டுக் குருவி’ பாடல் வந்த படம் ‘தாகம்’ அல்ல; ‘பாதை தெரியுது பார்’ என்று திருச்சி டாக்டர் லக்ஷ்மிநாராயணன் எனக்கு உடனே போன் செய்திருந்தார். வாசகர்கள் பலரும் அதைக் குறிப்பிட்டிருந்தார்கள்.

‘பாதை தெரியுது பார்’ பற்றி நானே கணையாழியின் இரண்டாவது இதழில் எழுதியுள்ளேன். காலத்தின் நினைவுகளின் சின்னச் சின்ன அறைகளில் தூசி தட்டி எடுக்கும்போது, இப்படிச் சில தவறுகள் நிகழ்ந்துவிடுகின்றன. சில ஆழப் பதிந்து விடுகின்றன.

‘பொம்மரில்லு’ படத்தில்...



ஆழப் பதிந்த நினைவுகளில் ஒன்று சித்ரா தியேட்டர்.

1955-ல் நான் எம்.ஐ.டி. படித்துக்கொண்டு இருந்தபோது, சித்ரா என்று ஒரு தியேட்டர் சிந்தாதிரிப்பேட்டை தொடங்கும் பாதையில் இருந்தது. அந்தத் தியேட்டரில்தான் முதலில் பிளாக் டிக்கெட் வாங்கி ஏமாந்தேன். (படம்: எம்.ஜி.ஆரின் அலிபாபாவும் நாற்பது திருடர்களும்!)

அங்கேதான் ஒருமுறை, வேறு ஏதோ பாஷை சினிமா ஓடுகிறது என்று தெரியாமல் டிக்கெட் வாங்கிவிட்டு,

கூட்டமே இல்லாததைப் பார்த்து விலகிப் போவதாக இருந்தேன். அப்புறம், கொஞ்சம் உட்கார்ந்துதான் பார்க் கலாமே என்று தீர்மானித்தேன். அது ஒரு பெங்காலிப் படம். பெயர்கூட பிற்பாடுதான் தெரிந்தது.

'பதேர் பாஞ்சாலி' (பாதையின் கானம்)! இன்று உலக சினிமா வின் மிகச் சிறந்த படங்களில் ஒன்றாகக் கருதப்படும் படம்.

பாஷை தெரியாதபோதிலும், அந்தப் படம் என்னை அப்படியே உலுக்கிவிட்டது. இப்படியெல்லாம் இந்தியாவில் படம் வருகிறதா என்று ஆச்சர்யப்படவைத்தது. சுப்ரோதோ மித்ராவின் கேமராவும், பண்டிட் ரவிஷங்கரின் பின்னணி இசையும், மழையில் நனைந்து ஜுரம் வந்து இறந்துபோகும் துர்காவும், அவளுக்கு நகரத்திலிருந்து ஆசை ஆசையாக ஆடைகள் வாங்கி வரும் ஏழைத் தகப்பனும், அவள் திருடிய நகையைக் குளத்தில் தூக்கி எறியும் சிறுவன் அபுவும், பல்லில்லாத பாட்டியும், அவள் மரணமும், ஏழ்மையின் கவிதைகளின் மறக்க முடியாத சித்திரிப்புகள்.

இந்த ஆண்டு ஆகஸ்ட் 26-ம் தேதி, பதேர் பாஞ்சாலி வெளிவந்து 51 ஆண்டு நிறைவுபெறுவதை, கான் விழாவில் கொண்டாடினார்கள். ஒரு புதிய வலைமனை திறந்திருக்கிறார்கள். www.worldofray.com.


'பதேர் பாஞ்சாலி' படத்தில்...

சத்யஜித் ரே

சத்யஜித் ரே அந்தப் படத்தை எடுப்பதற்குப் பெண்டாட்டி நகை களையும், புத்தகங்களையும் விற்று இன்ஷ்ரன்ஸில் கடன் வாங்கி, கொஞ்சம் எடுத்துப் போட்டுக் காட்டிய பின், மேற்கு வங்காள அரசு உதவியிருக்கிறது. அவர்களுக்கே நம்ப முடியவில்லை, இதற்கு இப்படிப்பட்ட வரவேற்பு கிடைக்கும் என்று! பதேர் பாஞ்சாலியின் வெற்றிக்குப் பிறகு, சத்யஜித் ரே நல்ல வேலையை ராஜினாமா செய்துவிட்டு, 1956-ல் 'அபராஜிதோ' (தோல்வி அற்றவன்), 1959-ல் 'அபுர்சன்சார்' (அபுவின் உலகம் - ஷர்மிளா டாகூர் அறிமுகமான படம்) எடுத்தார். மூன்றும் பிபூதிபூஷன் பட்டாசார்ஜியின் நாவலைத் தழுவி எடுக்கப்பட்ட படங்கள். கான், வெனிஸ், பெர்லின், எடின்பரோ, நம் ஜனாதி பதியின் தங்க மெடல் என்று வாங்காத அவார்டுகளே இல்லை.

இதில் ஆச்சர்யம்... பட்டாசார்ஜி 'பதேர் பாஞ்சாலி' படத்தைப் பார்த்து விட்டு, "ப்ச்... சரியாவே எடுக்கலை" என்றாராம்.

நீதி: எல்லோரையும் திருப்திப்படுத்த முடியாது!

தமிழின் பல சங்க கால வார்த்தைகள், மற்ற திராவிட மொழிகளில் அன்றாட வார்த்தைகளாக உள்ளன என்பதை அம்மொழிகளின் திரைப்படங்களைப் பார்க்க நேரும்போதெல்லாம் யோசிப்பேன்.

சித்தார்த் ஏற்பாடு செய்திருந்த 'பொம்மரில்லு' (பொம்மை வீடு - சித்தார்த், ஜெனிலியா, பிரகாஷ்ராஜ், பாஸ்கர், தேவி பிரசாத்) என்பதில், இல்லு என்ற சொல் நம் இல்லத்திலிருந்து அனுப்பியது. அதே போல இன்றைய தெலுங்கில் நச்சி என்ற வார்த்தை, விரும்புதல் என்ற பொருளில் பயன்படுகிறது. 'நீர்க்கோல வாழ்வை நச்சி' என்ற கம்பராமாயணப் பாடலில் உள்ள நச்சுதல் அது.

மனை நம்மிடம் அழைப்பிதழ்களில் மட்டுமே மிஞ்சியுள்ளது. அதைக் கன்னடத்துக்கு அனுப்பிவிட்டு, வீட்டைக் கட்டிக்கொண்டோம். அகமும் புறமும் மலையாளத்தில் இன்று அன்றாட வார்த்தைகளாகி, நம் உள்ளேயிருந்து வெளியே போய்விட்டன.

அதெல்லாம் இருக்கட்டும்... படம் எப்படி இருந்தது?

பாஸ்கர் என்பவரின் முதல் படமாம். முதல் காட்சியிலேயே, ‘குழந்தையை நடக்க அழைத்துச் செல்லும்போது தடுக்கினால், மன்னிப்பீர்கள் அல்லவா... அந்த மாதிரி, பிழைகள் பொறுத்தருள்க!’ என்று இரண்டு கைகளையும் தூக்கிவிடுகிறார். தெலுங்கில் இந்தப் படம் சூப்பர் ஹிட் என்கிறார்கள். எல்லாக் காட்சியையும் இரண்டு மூன்று தடவை பேப்பர் கிழியும் வரை அடிக்கோடிட்டு நிறையப் பேசி, உரக்கப் பேசி, பின்னணி சங்கீதம் என்பதை இடைவிடாமல் ஒலிக்கவைத்து, ரிச்சாக எடுத்தால்தான் தெலுங்கில் போகும் என்கிறார்கள். (தென் மொழிகளில் ‘அப் தக் சப்பன்’ போன்ற படங்கள் வருவதற்கு சான்ஸே இல்லையா?)

இந்தப் படம் ‘காஸினோ’வில் நன்றாக ஓடிக்கொண்டு இருந்தபோதே சட்டென்று எடுத்துவிட்டார்கள் என்று சித்தார்த் சொன்னார். காரணம், தமிழில் ரீமேக்க இதை வாங்க அடிதடியாம்!

**இ**றுதியாக...

இலவச ரிங்டோன்களுடன் எனக்கு வந்த சில எஸ்.எம்.எஸ். வாசகங்கள்...

* சுதந்திரமாகப் பிறந்தோம்; இன்கம்டேக்ஸால் இறந்தோம்!

* டாய்லெட் பேப்பரை விரயம் செய்யாதீர்கள்; இரண்டு பக்கத்தையும் பயன்படுத்துங்கள்!

* எனக்கு அதிர்ஷ்டத்தைத் துரத்து வதிலேயே நிறைய தேகப் பயிற்சி கிடைக் கிறது!

* மன்னிக்கவும், நான் வேற்றுக் கிரக மனிதர்களுடன் நட்பு வைத்துக்கொள்வ தில்லை.

* கடும் உழைப்பு எதிர்காலத்துக்கு நல்லது; சோம்பேறித்தனம் நிகழ்காலத்துக்கு!

* First the engagement ring, then the wedding ring, then the suffering!

* நீ மிகவும் தனிப்பட்ட ஆசாமி, மற்ற எல்லோரையும் போல!

இனி, எனக்கு ஜனவரி 2007 வரை யாரும் எஸ்.எம்.எஸ். அனுப்ப வேண்டாம்.




படத்தின் அழைப்பிதழ்...

வானிலிருந்து குண்டு மழை... வன்னியிலிருந்து இலக்கியம்!

திரிபு உணர்ச்சி, உளச் சோர்வு, மனநோய், உளச் சிதைவு () இப்படி உளவியல் சார்ந்த ஏறத்தாழ 2,000 ஆங்கிலக் கலைச் சொற்களுக்குத் தமிழ்ச் சொற்கள் தந்திருக்கிறார் டாக்டர் டி.சீனிவாசன் (விஜயா பதிப்பகம்). தமிழில் அறிவியல் புத்தகங்கள் எழுத விரும்பும் எவரும் முதலில் தன் துறைக்கான கலைச்சொல் அகராதி இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். இல்லையேல், அதை முதலில் தயாரித்து வெளியிடுவது மிக முக்கியம். அதில், சரளமான எளிய தமிழ் வார்த்தைகளை மறுபயன்படுத்தினால், அவை நடைமுறைக்கு வரும். டாக்டர் சீனிவாசனின் அகராதியில் பெரும் பாலும் சரளம் இருக்கிறது. சில வேளை, personal adequacy போன்ற சொற்களுக்குத் ‘தற்போதுமை’ என்னும்போது சற்று நிரடுகிறது. நான் ‘சொந்தத் திருப்தி’யுடன் திருப்திப்பட்டு இருப்பேன்.



வந்தே மாதரம் பாடுவதா, கூடாதா என்ற கேள்வி, சென்ற வாரம் நாடு முழுதும் ஊடாடியது. 'வந்தே மாதரம்' பிறந்தது தேசபக்திப் பாடலாக அல்ல என்பதையும், அதில் இருக்கும் அன்னை முதலில் துர்க்கை தான் என்பதையும் ஏற்கெனவே அறிந்தவர்களுக்கு...

இந்தப் பாடலை பாரதியார் இரண்டு முறை தமிழில் 'ஜாதீய கீதம்' என்ற தலைப்பில் மொழிபெயர்த்திருக்கிறார். 'சுஜலாம் சுபலாம் மலையஜ சீதளாம் சச்ய ச்யாமளாம் மாதரம்' என்பதை முதலில் அவர், 'இனிய நீர்ப் பெருக்கினை...' என்று ஆரம்பித்துத் திருப்திப்படாமல்,



'குளிர் மணி நீரும்
நயம்படு கனிகளும்
குளிர்பூந்தென்றலும்
கொழும்பொழிற் பசுமையும்
பாய்ந்துநன் கிலங்குவை
வாழிய அன்னை' என்கிற அவரது இரண்டாவது 'வர்ஷன்' கவித்துவம் நிறைந்தது.

'அறிவு நீ தருமம் நீ உள்ளம் நீ அதனிடை
மருமம் நீ உடற்கண் வாழ்ந்திடும் உயிர் நீ
தோளிடை வன்பு நீ நெஞ்சகத்து அன்பு நீ
ஆலயம் தோறும் அணிபெற விளங்கும்
தெய்வச் சிலையெலாம் தேவி இங்குனதே'

என்று பரிபாடல் ரேஞ்சுக்குப் போயிருந்தாலும், பிற்பட்ட பாடல்கள் காளி மாதாவைக் குறிப்பிட்டதால் நீக்கப்பட்டன.

இப்போது இதன் அரசியல் புரிகிறதா?

(இந்தியாவில் அரசியல் கலக்காத பத்து விஷயங் களைக் கண்டுபிடிப்பவருக்குப் புத்தகம் பரிசு!)



லண்டனில் வாழும் எழுத்தாளர் இரவி அருணாசலம், இலங்கையில் வன்னி பிரதேசத்தைச் சேர்ந்தவர். தன்னுடைய 'காலம் ஆகி வந்த கதை' என்கிற புத்தகத்தைக் (விடியல்) கொடுத்துச் சிறிது நேரம் கதைத்து விட்டு, லண்டனில் வாழ்ந்தும் தமிழ் படிக்கும் தன் இரட்டை மகன்களுடன் புறப்பட்டுச் சென்றார். அவருடைய இளமைக்கால நினைவுகளைச் சார்ந்த சிறுகதைகள் போல இருக்கும் சித்திரங்கள் இந்தப் புத்தகத்தில் உள்ளன. 'என் எழுத்தின் வலிமை என்ன வென்று எனக்குப் புரிகிறது. ஞாபகம். அதுவே வலிமை. யாவற்றையும் துண்டாக, துணுக்காக, நுண்ணியக் குறிப்பாக நான் ஞாபகம் கொள்கிறேன். ஞாபகம்தான் என் வலிமை. அதுவே எனக்குக் கொடுமை. நாள்தோறும் நான் நோவால் துடித்துப் போகிறேன். அந்த வலியைத் தந்தது ஞாபகம்!'

பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி தன் முன்னுரையில் குறிப்பிட்டது போல, 'இரவியினது படைப்பு போராட்டக் கால அனுபவங்களின் வெளிப்பாட்டின் யாதேனும் முக்கியத்துவத்தை உடையதாக உள்ளதா என்று பார்க்க' நானும் விரும்பினேன். போராட்டக் கால அனுபவங்கள், சென்ற 35 ஆண்டுகளாக ஈழத்திலிருந்து வெளி வரும் இலக்கியப் படைப்புகளில் இருந்தே தீரும். சில சமயம், இந்தப் புத்தகத்தில் போல மறைமுகமாக; சில சமயம், செல்வி சிவரமணி கவிதைகளில் போல நேரடியாக!



தாக்கம் புத்தகத்தில் உள்ளதோ இல்லையோ, அதைத் தயாரிப்பதில் இருந்திருக்கிறது என்பது தெரிந்தது. வன்னிக் காட்டில் டென்ட் ஜெனரேட்டர் போட்டு, டி.டி.பி. கம்ப்யூட்டர் எல்லாம் வைத்துத் தயாரிக்கப்பட்ட புத்தகமாம். காரணம், வானிலிருந்து குண்டு வீழ்ச்சி.

இன்றும் யுத்த கால இரவின் நெருக்கடிகளில் அங்கிருந்து இலக்கியம் பிறப்பது, வற்றாத ஆச்சர்யங்களில் ஒன்று. உண்மையான இலக்கியத்துக்கு

மனத்திலோ, வனத் திலோ யுத்தம் ஒன்று தேவையோ!

சூர்யா, ஜோதிகாவின் high profile திருமணத்துக்குத் தயக்கத்துடன்தான் சென்றேன். காரை அனுமதித்தார்கள். லிஃப்டிலும் ஹாலிலும் மூச்சுத் திணறும் கூட்டம் இல்லை. அன்புடன் மேடைக்கு அழைத்துச் சென்றார்கள். சூர்யாவின் எளிய ஆடையிலும் (வேட்டி, சட்டை) ஜோதிகாவின் சற்றே பரபரப்பு கலந்த பவ்யத்திலும் துளிக்கூட சினிமா இல்லை. வாழ்த்துக்கள்!
சூர்யாவை சின்னப் பிள்ளையில் பார்த்தபோது, 'இந்தப் பையன் பெரிய இன்ஜினீயராக வருவான்' என சிவகுமாரிடம் சொன்னதாக ஞாபகம். (என்னிடம் ஜோஸ்யம் கேட்க வருகிறவர்கள் கவனிக்கவும்!)

### எ.பி.க.

பலாப் பழத்தின் மணம் போயிற்று
பழஞ்சோற்றின் ருசி போயிற்று
நிலா காய்ந்த அந்நெடுநிலத்தின்
நினைவும் போயிற்று
உலா போயிற்று ஊர் போயிற்று
துலாத் தாழ்த்தி நீரள்ளியுண்ட
துறையும் போயிற்று

**- இரவி அருணாசலம்**

### நீயும் வாடா குட்டி!

**சு**ருக்கமான, உருக்கமான ஒரு கதை.



ஒரு வீட்டு வாசலில், 'இங்கு நாய்க் குட்டிகள் கிடைக்கும்' என்ற அறிவிப்பு இருந்தது. கேட் வழியாக ஒரு குட்டிப் பையன் எட்டிப் பார்த்து, வீட்டுக்காரரைக் கூப்பிட்டான். அவர் ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தார்.

'அங்கிள்! எனக்கு ஒரு நாய்க் குட்டி தருவீங்களா?'

'இதெல்லாம் ஒஸ்தி நாய். உன்னிடம் அத்தனை காசு இருக்குமா?'

'என்னிடம் எட்டணா இருக்கிறது!' என்றான்.

'போதாதே' என்றார் ஓனர்.

'சரி, நாய்க்குட்டிகளை நான் பார்க்க வாவது பார்க்கலாமா?' என்றான்.

அவர் வீட்டுக் கதவைத் திறந்து விசில் அடிக்க, சந்தோஷப் பந்துகளாக மூன்று நாய்க்குட்டிகள் சிறுவனை நோக்கி ஓடி வந்தன. அவனைப் பார்த்து வாலாட்டி, அவன் முகத்தை நக்கிக் கொடுத்தன.

சற்று தூரத்தில் நான்காவது நாய்க் குட்டி, இதைச் சோகமாகப் பார்த்துக் கொண்டு இருந்தது.

'நீயும் வா குட்டி' என்று சிறுவன் அழைக்க, 'அது பிறந்ததிலிருந்தே ஓட முடியாது. யாரும் வாங்க மாட்டார்கள்' என்றார் வீட்டுக்காரர்.

'எனக்கு அதுதான் அங்கிள் வேண்டும். என்னாலும் ஓட முடியாது' என்றான் சிறுவன், தன் சக்கர நாற்காலியில் இருந்து!

## '15 நிமிஷப் புகழ்' படுத்தும் பாடு!




'தசாவதாரம்' படத்தின் முதல் அவதாரத்தின் படப்பிடிப்பு முடிந்துவிட்ட நிலையில், இதன் கதையை தான்தான் எழுதியதாகப் பத்திரிகையில் ஒருவர் பேட்டி கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. 'தசாவதாரம்' கதையின் முழு வடிவமும் கமல் என்னும் திறமைசாலியின் மனத்தில் இருப்பதும், அது ஒவ்வொரு அவதாரமாக வெளிப்படுவதும், மாறுவதும், அழிவதும், அழிப்பதும், ஆக்குவதும் ஆக எல்லாவற்றையும் அருகில் இருந்து பார்க்கிற எனக்கு இந்தச் செய்தி வேதனை அளிக்கிறது. இம்மாதிரியான குற்றச்சாட்டுகள் கமலுக்கு அதிகம் நிகழ்வதற்கான காரணத்தை யோசிக்கிறேன்.

'சண்டியர்' தலைப்புக்கு மறுப்பு, 'மும்பை எக்ஸ்பிரஸ்' இங்கிலீஷ் வார்த்தைக்கு மறுப்பு, 'வசூல் ராஜா'வில் எம்.பி.பி.எஸ்ஸுக்கு மறுப்பு என இதற்கெல்லாம் ஆதார காரணங்களாகத் தமிழ்நாட்டின் சமூக அடையாளங்களைப் பார்க்க முடிந்தாலும், இவ்வகை இம்சைகளை ஹாலிவுட்டிலும் பாலிவுட்டிலும் எப்படிச் சமாளிக்கிறார்கள் என்பதையும் பார்க்க வேண்டும். எந்தப் படம் வந்தாலும், அதுதான் எழுதினதுதான் என்று யாராவது கொண்டாடும் அபாயம் அங்கேயும் இருக்கிறதே! இதைச் சமாளிக்க, இரண்டு எளிய வழிகள் உள்ளன. ஒரு திரைக்கதையை எழுதியவுடன், திரைக்கதை எழுத்தாளர்கள் சங்கத்தில் ஒரு காப்பி கொடுத்தால், பதிவுசெய்துகொள்வார்கள்.

Writers Guild of America-West

WGA Intellectual Property Registry

7000 W. Third Street Los Angeles, CA 90048

(323) 782-4540, Fax (323) 782-4803

இந்த முகவரிக்கு அனுப்பினால், அவர்கள் தேதி முத்திரை குத்திப் பதிவு எண் கொடுத்துவைத்திருப் பார்கள் (கட்டணம் உண்டு).

மற்றொரு முறை, பாலிவுட்டில் பழக்கத்தில் உள்ளது. அந்தத் திரைக் கதையை ஒரு கவரில் போட்டு, அரக்கு முத்திரைவைத்து, தனக்கே பதிவுத் தபாலில் அனுப்பிக்கொள்ள வேண்டும். அதைப் பிரிக்காமல் தேதி முத்திரை சகிதம் வைத்திருக்க வேண்டும்.




பிற்காலத்தில் யாராவது அந்தக் கதையைக் கட்டித் தழுவிவிட்டார்கள் என்று சந்தேகம் வந்து குற்றம் சாட்டும்போதுதான், அதை கோர்ட்டில் பிரித்துக் காட்ட வேண்டும் பரபரப்புக்காக இவ்வகைச் செய்தி களை வெளியிடும் பத்திரிகைகளுக்கும் பிரித்துக் காட்டிவிடலாம். இப்படி ஒரு நடைமுறை இங்கு ஆரம்ப நிலையில் இருக்கிறது. இது வந்தால்தான், கமல் போன்றவர் களுக்குத் தலை வலிகளைத் தடுக்க முடியும்.

ராமாயணக் கதையையே தான் எழுதியது என்று சொல்பவர்கள் இருக்கிறார்கள். காரணம், எல்லோருக்கும் 'பதினைந்து நிமிஷப் புகழ்' தேவை... சரிபார்க்காமல் செய்தி வெளியிடும் பத்திரிகைகள் உட்பட!

**வி**கடன் 24-9-06 இதழில் வெளிவந்த 'எ.பி.ஹை' (புறா- பூனை) நா.முத்துக்குமார் எழுதியதாம். கவிஞரே போன் செய்து சொன்னார். வசந்தபாலனின் 'வெயில்' படத்துக்காக இவர் எழுதிய 'வெயிலோடு விளையாடி...' என்ற பாடல், ஜி.வி.ப்ரகாஷ் என்னும் இளம் இசை யமைப்பாளருக்குக் கட்டியம் கூறுகிறது. ஏ.ஆர்.ரஹ்மானின் 'டச்' தெரிகிறது. சகோதரி மகன். சிக்குபுக்கு ரயிலை ஆரம்பித்துக் கொடுத்தவர்!

**த**மிழில் உரைநடை நூல்கள், ஜெர்மானிய சீகன்பால்கு, இத்தாலிய வீரமாமுனிவர் காலத் துக்குப் பிறகுதான் வந்தன. 'பாட்டிடையிட்ட உரைநடை' என்று சிலப்பதி காரத்தில் இருப்பதுகூட, இன்றைய உரைநடை போல இருக்காது. பிர பந்தத்தின் ஈடு வியாக்கி யானங்களின் உரைநடை மணிப்பிர வாளத்தில் இருக்கும்.

பைபிளை தமிழில் எழுத, மதபோதகர்களுக்குச் சரளமான உரைநடை தேவைப்பட்டது. அதற்கு முன் நூல்களைச் செய்யுள் நடையில்தான் எழுதினார்கள். காரணம், ஓலைச் சுவடியும் எழுத்தாணிக் கஷ்டங்களும். 1712-ல் தமிழ்நாட்டுக்கு முதல் அச்சு இயந்திரம் வருமுன், தமிழ் நூல்கள் பெரும்பாலும் வெண்பா வடிவில் இருந்தன. வானவியல், வேதியியல், மூலிகை மருத்துவம், சோதிடவியல் போன்ற அந்தக் காலத்து அறிவியல் நூல்கள் பல வெண்பாவில் இருந்தன.

அண்மையில் எனக்கு அனுப்பப்பட்ட 'ஒலி நூறு' என்னும் நூலில், acoustics என்னும் நவீன ஒலி இயற்பியலை வெண்பா வடிவத்தில் 'அறிவியல் தமிழ்ப் புலவர்' முனைவர் தி.சே.சுப்பராமன் எழுதி, பழைய பாணிக்குத் திரும்பியிருக்கிறார். உதாரணமாக, லவுட் ஸ்பீக்கர் என்னும் ஒலிபெருக்கி எப்படி வேலை செய்கிறது என்பதை விளக்கும் வெண்பா இது...

மின்னலையை வாங்கி ஒலியலையாய் மாற்றுபொறி
தன்னை ஒலிபெருக்கி என்பரதில் - மின்புல
காந்தமிடை ஆடும் ஒலிச் சுருளும் ஊட்டுவதை
ஏந்துமிடைச் சவ்வொற்றும் காற்று.

(ஒலிச்சுருள் - voice coil; இடைச்சவ்வு - diaphragam)

இம்மாதிரி கவிதை வடிவில் அறிவியல் விஷயங் களைத் தருவதில் ஒரு நன்மை உண்டு. மாணவர்கள் ஞாபகம் வைத்துக்கொள்வது எளிது. முதலில், புரிய வேண்டும். அவ்வளவே!

**'அ**மெரிக்கா வாழ் தமிழர்களில் முதலில் சென்றவர்கள் டாக்டர்களே! அவர்கள் தற்போது வசதியாக வாழ்கிறார்கள்' என்பது அமெரிக்க தமிழ்மருத்துவர்கள் சங்கத்தின் இரண்டாவது ஆண்டு மலரிலிருந்து தெரிகிறது.

ATMA-வில் 600-க்கும் மேற்பட்ட அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். பெரும்பான்மையினர் நியூயார்க், நியூஜெர்ஸி பகுதிகளில் வாழ்கிறார்கள். அடுத்தது, ஃப்ளாரிடா. அதற்கடுத்தது, கலிஃபோர்னியா. பின், டெக்சாஸ். விஸ்கான்சினில்கூட ஓரிருவர் இருக்கிறார்கள். இவர்களில் எம்.எம்.சி-யில் படித்தவர்கள்தான் அதிகம்.

இவர்கள் அனைவரிடமும் ஒரு வேண்டுகோள்... உங்களால், திரும்ப இந்தியா வந்து செட்டில் ஆக முடியாது. காரணம், அந்த வாழ்க்கைத் தரம் இங்கே கிடைக்காது. உங்கள் பிள்ளைகள் வளர்ந்துவிட்டார்கள். அங்கே உங்களைப் பல சங்கிலிகள் கட்டிப்போட்டு இருக்கின்றன. அதனால், விடுமுறையில் தாய்நாடு வரும்போதாவது ஒரு முறை எங்கள் பொது மருத்துவமனைகளுக்கு வந்து லெக்சர் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள். முடிந்தால், ஒரு நவீன சிகிச்சையோ, ஆபரேஷனோ செய்து விட்டுச் செல்லுங் கள். உங்கள் ஊர் மாதிரி இங்கே கெடு பிடிகள் கிடையாது. நோய் சொஸ்தமானால் சந்தோஷப்படுவோம்; இல்லையா, இருக்கவே இருக்கிறது விதி!

**வி**கடன் 10.9.06 இதழில், மாணவர்களுக்கு அறிவித்திருந்த 'ரெட் ஷிஃப்ட்' பற்றிய கட்டுரைப் போட்டியில் கலந்துகொண்டவர்கள், புத்தகப் பரிசு பெற்றவர்கள் விவரம் அடுத்த இதழில்.

**எ.பி.ஹை**

*யுவதி காத்திருக்க*
*ஸ்கூட்டர் சக்கரம் மாற்றும்*
*அரை நிஜார் சிறுவன்*

**- மார்கன்**

## அந்த 6 செகண்டுகள்!

**ஒ**ரு காலத்தில் இந்தியாவில் நான்கு கார்கள், இரண்டு ஸ்கூட்டர்கள், இரண்டு மோட்டார் சைக்கிள்கள் செய்து வந்தார்கள். டில்லியிலும், பெங்களூரிலும் இருந்தபோது எனக்கு வெஸ்பா, மாருதி அலாட்மென்ட் லெட்டர் கிடைத்தது. அந்தக் கடிதத்தையே பணம் கொடுத்து வாங்கத் தரகர்கள் தயாராக இருந்தார்கள். பத்து வருஷத்தில் இந்த நிலை முற்றிலும் மாறிப்போய், இன்று இந்தியாவில் 33 வகை கார்கள், 30 வகை பைக்குகள் கிடைக்கின்றன. 'உ.ம்' என்று சொல்லி டெலிபோனை வைத்ததுமே, வண்டியைக் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார்கள். கூடவே முன்ஸீட்டில், பேங்க்கில் கடன் கொடுப்ப வரும் வந்துவிடுகிறார். டாட்டா கம்பெனி, ஒரு லட்ச ரூபாய் விலையில் மக்கள் கார் தயாரிக்கத் திட்டமிட்டிருக்கிறது. அதே சமயம், ஒரு கோடி கொடுத்தால், பிஎம்டபுள்யூ-வும் கிடைக்கிறது.




இன்றைய வாகன வளர்ச்சியின் முழுப் பயனையும் அடைவதற்கு 'மோட்டார் விகடன்' போன்ற niche பத்திரிகைகள் தேவைப்படுகின்றன. ஆங்கிலத்தில் 400, 500 ரூபாய் கொடுத்து வாங்கவேண்டியது இல்லை. அதே தரத்துக்கு ஏராளமான விஷயங்களுடன் தமிழில் 40, 50 ரூபாய்க்குள் கிடைக்கும். சென்னை, இந்தியாவின் மோட்டார் தலைநகரமாகிவிட்டது. இந்தியா முன்னேறவில்லை என்று சொல்பவர்கள், நம் சாலை விபத்துகளின் எண்ணிக் கையை யோசிக்கலாம். இதிலும் தமிழ்நாடு முன்னணியில் நிற்கிறது என்பதை மோ.வி. மாதிரி இதழிலிருந்து தெரிந்து கொள்கிறோம்.

வாசகர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டுள்ள மோட்டார் விகடன் சாம்பிள் இதழைப் பார்த்ததும் எனக்குத் தோன்றியது... ‘எல்லாவற்றையும் சொல்லிவிட்டார்களே... அடுத்த இதழுக்கு மேட்டர் இருக்குமா?’



‘சாவுக்கு இழப்பீடு தருவது என்பது நவீன வியாபார யுகத்தின் விளைவுகளில், தேவைகளில் ஒன்று!’

அப்படியொரு பிரமிப்பு!

**செ**ப்டம்பர் 11, 2001-க்குப் பிறகு, உலகின் பத்திர உணர்வு ஒரு மிகப் பெரிய பின்னடைவுக்குள்ளாகியது. நமக்கெல்லாம் தெரியும் அந்தச் சம்பவம் நிகழ்ந்து சில தினங்கள் கழித்து, பத்திரிகைகளில் ஒரு பேட்டி வந்தது. பாஸ்டன் விமான நிலையத்தில், லாஸ் ஏஞ்சலீஸ் செல்வதற்காக விமானம் ஏறி, அது அல்கொய்தா தீவிரவாதிகளால் கடத்தப்பட்டு நியூயார்க்கின் இரட்டைக் கோபுரங்களில் மோதி வெடித்துச் சிதறி, அதில் இறந்துபோன பிரயாணி ஒருவரின் மனைவியின் பேட்டி அது.

“என் கணவர், வாரம் இருமுறை அந்த ஃப்ளைட்டைப் பிடித்து, பிஸினஸ் விஷயமாக எல்ஏ செல்வார். ‘விமானத்தில் ஏறி ஸீட் பிடித்த உடனே தூங்கிவிடுவேன். இறங்கும் இடம் வரும்போதுதான் விழித்துக் கொள்வேன்’ என்பார். இந்த முறையும் அவர் அப்படியே தூங்கிப் போயிருப்பார் என்றுதான் நம்புகிறேன்” என்றார் அந்தக் கண்ணீர் நிறைந்த மனைவி.




கார் ஓட்டும்போது செல் பேச விரும்பாதவர்கள், மேலே உள்ள கார்ட்டூனுக்கு ஏற்ற வாசகத்தை உடனே எழுதி அனுப்பவும். சிறந்த வரிக்கு புத்தகப் பரிசு. கார்டில் ‘கைபேசி’ என்று குறிப்பிட்டு அனுப்பவும்.

இதை மேற்கோள் காட்டிவிட்டு, ‘ஆறு செகண்டுகள்’ என்கிற ஒரு கட்டுரையை பாலா ஸ்டீட் என்பவர் எழுதியிருக்கிறார்.

1982-ல் பான் அமெரிக்கன் விமானம் ஒன்று நியூஆர்லினன்ஸ் விமான நிலையத்திலிருந்து புறப்பட்ட உடனே மரத்தின் மேல் மோதி, ஆறு செகண்டுகள் பைலட் அதைச் சமாளிக்கத் தடுமாறியபின், தரையில் விழுந்து மோதித் தீப்பற்றிக்கொண்டு 152 பேர் இறந்துபோனார்களாம். அதில் பயணம் செய்த இரு பயணிகளின் ஆறு செகண்டு மன உளைச்சலுக்கு நஷ்ட ஈடாக, அவர்களின் பிள்ளைகளுக்குத் தலா இரண்டு லட்சம் டாலர் நஷ்ட ஈடு கொடுக்கும்படி உத்தரவிடப்பட்டதாம்.

இதைத் தொடர்ந்து கட்டுரையாளர், சாவின் கடைசி தினங்களை மனிதன் எப்படி எதிர்கொள்கிறான் என்பதைப் பற்றிச் சிந்திக்கிறார். முன்பெல்லாம் சாவின் நிழலில், மனிதன் மன்னிக்கும் மனநிலையிலோ அல்லது மன்னிப்புக் கேட்கும் நிலையிலோ இருப்பான். சினிமா கடைசி காட்சியில், வில்லன் சாகும்தறுவாயில், ‘செண்பகம், என்னை மன்னிச்சிடு!’ என்றோ, ‘தங்கப்பனைக் கொன்னது நான்தான்’ என்றோ சொல்வது ஒரு கிளிஷே காட்சி என்றாலும், பொதுவாகப் பலருக்கு அந்தக் கணத்தில் ‘படைத்தவனைச் சந்திக்கப்போகிறோம்’ என்ற பயம் வருவதாலோ என்னவோ, பாவ மன்னிப்பும் குற்ற ஒப்புதலும் கேட்கும் மனநிலை ஏற்படுவது சகஜம் என்கிறார் பாலா ஸ்டீட்.

ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட், ‘சாப்பிட்டுவிட்டு மத்தியானத் தூக்கத்தில் இருக்கும் உன் தகப்பனை ஏன்டா கொன்றாய்?’ என்று தன் நண்பனுடன் கோபித்துக்கொள்ளும்போது, ‘சாவு நெருங்குவதை மனிதன் உணரவேண்டும்’ என்பதே கருத்து.

‘சாவுக்கு இதுபோல் இழப்பீடு தருவது என்பது நவீன வியாபார யுகத்தின் விளைவுகளில், தேவைகளில் ஒன்று’ என்கிறார் கட்டுரையாளர். “நான் வாழ்ந்து சம்பாதிக்கும் இந்தச் சமூகம் மரணத்தை எப்படி அணுகுகிறது... மேம்போக்காகவா, புத்தி சாலித்தனமாகவா என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. என் முடிவுகள் திருத்தத்திற்குரியவை. அதில் ஒன்று, மரணம்! எப்போதோ, எப்படியோ அது என்னிடம் வரும்போது, அதை நேருக்கு நேராகவே சந்திக்க விரும்புகிறேன். அதற்காக என் குடும்பத்தினருக்கு நஷ்டஈடு கொடுக்கவேண்டிய நிலை வராமல் இருந்தால் நல்லது. ஆனால், அந்தச் சந்திப்பை ஒத்திப்போடவே விரும்புகிறேன்!”

அருமையான கட்டுரை. six seconds (Meridian, Best American Essays 2005)

**‘ரெ**ட் ஷிஃப்ட்’ பற்றிக் கட்டுரை எழுதி அனுப்புமாறு கேட்டிருந்ததில், 17 பேர் எழுதி அனுப்பியிருந் தார்கள். அனைவருமே ஓரளவுக்கு இந்தச் சிவப்பு இடமாற்றத்தைப் புரிந்து கொண்டு எழுதியிருந்தது எனக்கு மன நிறைவுஅளித் தது. ரெட்ஷிஃப்டை விளக்க ‘ஸ்பெக்ட்ரம்’ என்னும் நிற மாலையையும், டாப்ளர் விளைவையும், ஹபிள் மாறிலியையும் விளக்க வேண்டும். கொஞ்சம் கடினம்தான். ஆனால் முனைந்தால், தமிழில் இதை விளக்கிச் சொல்ல முடியும் என்பதற்கு உதா ரணமாக இருந்தன அந்தக் கட்டுரைகள். எழுதி அனுப்பிய அனைவருக்கும் பாராட்டுக்கள் தெரிவிக்கும் வகையில், அவர்களின் பெயர்களை இங்கு பட்டி யலிடுகிறேன்.

ஸ்ரீராம், போரூர்; மணி கண்டன், குகை, சேலம்; கிருத்திகா ஞானசுந்தர், போடிநாயக்கனூர்; பி.கலை யரசன், புதுக்கோட்டை; சுதா, குரோம்பேட்டை, சென்னை; பி.ஏ.பிரவின், நாமக்கல்; பி.வினு, பள்ளிக் கரணை, சென்னை; ஆர்.தேவராஜ், திருத்தணி; எஸ்.தினேஷ், ஈரோடு; எம்.வாசிம், மடிப் பாக்கம், சென்னை; நிகில் கார்த்திக், திருச்சி-1; சி.பால முருகன், கருமண்டபம், திருச்சி; எம்.எஸ்.ஜே.லலிதா, சேலம், வி.சுவேக், மும்பை-76; கீதாராமன், தூத்துக்குடி; சபரிஷ், நெய்வேலி; ராஜ சேகரன், அயனாவரம், சென்னை.

டாப்ளர் விளைவால் தெரியும் நிறமாலை
சேப்பில் விலகுதல் ரெட் ஷிஃப்ட்

-என்று குறள் அனுப்பிய குமரேசன், முகவரி தர மறந்துவிட்டார்.

சிறந்த கட்டுரையை எழுதியவர் போரூர் ஸ்ரீராம். இவருக்கும், மடிப்பாக்கம் எம்.வாசிம் மற்றும் புதுக்கோட்டை வைரம் மெட்ரிக்குலேஷன் ஸ்கூலைச் சேர்ந்த பி.கலையரசனுக்கும் (இந்த இருவரும் 12-ம் வகுப்பு மாணவர்கள்) ‘கடவுள் இருக்கிறாரா?’ புத்தகம் பரிசாக அனுப்பிவைக்கப்படுகிறது.

**எ.பி.க.**



நானென்பது யாரென
புரியவில்லை
வெறும் புத்தகங்களா
நண்பர்களின் சாயைகளா
அனுபவங்கள் என்று நம்பப்படுகிற
புனைவுகளா
காலத்தில் படர்ந்து திரியும்
மூதாதைகளா
எனது உடல் எதனால்
நிரப்பப்பட்டிருக்கிறது?

- **லக்ஷ்மி மணிவண்ணன்**

(‘எதிர்ப்புகள் மறைந்து தோன்றும் இடம்’ - சந்தியா பதிப்பகம்)




**அ**ப்போதெல்லாம் ப்ளஸ் டூ கிடையாது. எஸ்.எஸ்.எல்.ஸி., பரீட்சை எழுதி முடித்தவுடன், காலேஜில் 'இன்டர்மீடியட்'டில் இரண்டு வருஷம் படிக்க வேண்டும். அதன்பின் இரண்டு வருஷம் டிகிரி படிப்பு.



திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் 1952-ல் இன்டர் படித்து முடித்தவர்களின் குரூப் போட்டோவை, கர்னல் ராஜன் எனக்கு அனுப்பியிருந்தார். கையெழுத்து கேட்டிருந்தார். இதில் கடைசி வரிசையில் ஐந்தாவதாக நிற்கும் அடியேன் முக்கியமில்லை. இரண்டாவது வரிசையில் பதினொன்றாவதாக நிற்பவர்தான் முக்கியம். அவர் அப்துல் கலாம்!

அப்துல் கலாமின் அந்த நாட்களை எனக்கு நினைவிருக்கிறது. லாலி ஹாலில் மதிய இடைவேளையில் கூடியிருக்கும்போது எங்கள் அரட்டையை மௌனமாகக் கவனித்துக்கொண்டு இருப்பார். அதன் பின் பி.எஸ்ஸி., அதன்பின் எம்.ஐ.டி., வரை கல்லூரித் தோழனாக இருந்தார். பின்னர் ஐ.எஸ்.ஆர்.ஓ-வில் தும்பாவில் ரோகிணி ராக்கெட் விட்டார். பின், டி.ஆர்.டி.ஓ-வில் சேர்ந்து, நம் தேசத்தின் ஏவுகணைகளைத் தயாரித்துப் பரிசோதித்தார். டாக்டர் அருணாசலத்துக்குப் பின், டெல்லியில் பிரதமரின் அறிவியல் ஆலோசகராக நியமிக்கப்பட்டார். அவருடைய முன்னேற்றப் பாதையின் மைல் கற்களை அவ்வப்போது கவனித்து வந்திருக்கிறேன்.

குடியரசுத் தலைவர் ஆவதற்கான ஆயத்தங்கள் அப்போதே அவரிடம் இருந்தன என்று நான் சொன்னால், அது சரியல்ல! எங்களைப் போல ஒருவராகத்தான் இருந்தார். எடுத்த காரியத்தை முடித்துக் கொடுப்பதிலும், முதுகில் தட்டிக்கொடுத்து வேலை வாங்குவதிலும் வல்லவராக இருந்தார். அவர் போலச் சிறந்த ப்ராஜெக்ட் மேனேஜர்கள் பலரும் உள்ளனர். ஏதோ ஒரு தருணத்தில் எங்களைவிட்டு விலகி, கொஞ்சம் வேகமாக முன்னோடத் தொடங்கிவிட்டார்.

அன்று, திருச்சி பொன்னையா ஸ்டுடியோக்காரர் வந்து ஃபாதர்ஸ் லாட்ஜ் முன்னால் மாலையில் பெஞ்சு நாற்காலி அமைத்து, என் போன்று உயரமாக இருந்தவர்களைப் பின் வரிசைக்கு அனுப்பி, கறுப்புப் போர்வைக்குள் மறைந்துகொண்டு ப்ளேட் வைத்து மூடியை சில செகண்டுகள் திறந்து எடுத்த இந்தப் போட்டோவைப் பார்க்கும்போது எனக்குத் தோன்றுவது இதுதான்...

'அடையாளமற்ற, முகமற்ற சுமார் 100 இளைஞர்கள், வாழ்வின் விளிம்பில் மாரத்தான் ஓட்டம் போலப் புறப் பட்டோம். இன்று 55 ஆண்டுகள் கழிந்த பின் பலர் சிறந்தோம்; சிலர் இறந்தோம்; அமெரிக்கா சென்றோம்; கார்கள் தயாரித்தோம்; கவிதைகள் எழுதினோம்; டாக்டர்களானோம்; ஓட்டல்கள் வைத்தோம்; வெள்ளைக் காரிகளை மணந்தோம்; ராணுவத்தில் சேர்ந்தோம்; எழுத்தாளர் ஆனோம்; பாரத தேசத்தின் குடியரசுத் தலைவர் ஆனோம்... ஒரு சேரத்தான் புறப்பட் டோம் மாரத்தான் போல!'




அப்துல் கலாமை உயர்த்திய அந்தத் தருணம் என்ன?

பி.ஜே.பி. அரசுக்குத் தன் செக்யூலர் அடையாளங்களை நிலைநாட்ட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டபோது, காங்கிரஸின் குற்றச்சாட்டுகளை மழுங் கடிக்க நினைத்த போது, Man of the Moment ஆக அவர் கிடைத்தார். மற்றது சரித்திரம்!

இந்த போட்டோ வில் முன் வரிசை யில் உட்கார்ந்திருந்த ஆசிரியர்கள் ஃபாதர் எர்ஹார்ட், ஃபாதர் செக் வைரா, ஃபாதர் காயில், பி.ஆர்.சுப்ர மண்யம், அனந்த கிருஷ்ணன், ஃப்ரான்சிஸ் ராஜ், எல்.கே.கே. சவரி முத்து, குரியன், பானுமூர்த்தி இவர்கள் எல்லோ ருமே எங்கள் சிறப் புக்குக் காரணர்கள். அப்துல் கலாமைக் கேட்டாலும் இதைத்தான் சொல்வார்.

கல்லூரி முதல்வர் எர்ஹார்ட்டை நாங்கள் மறக்கவே மாட்டோம். நல்ல உயரம்; ஆப்பிள் நிற மூக்கு; கோடு போட்டாற் போல உதடு; ஜெர்மானியர். சுருட்டு குடிப்பார். குரங்கு வளர்ப்பார். கால் இறுதி, அரையிறுதிப் பரீட்சை முடிந்ததும் ஒரு பெரிய கறுப்பு ரெஜிஸ்டரை எடுத்துக்கொண்டு ஒவ்வொரு வகுப்பாக வருவார். ஒவ் வொருவராக நிற்கச் சொல்லி நாங்கள் வாங்கிய மார்க்குகளை நிதானமாகப் படிப்பார். நல்ல மார்க் என்றால் பாராட் டுவார். மோசம் என் றால் திட்டமாட் டார்; ஒரு முறை நிமிர்ந்து பார்ப்பார். அவ்வளவுதான்!



கலைஞர் எஸ்.எம்.கிருஷ்ணா

கிளாஸ் கட்ட டித்தால், மறுநாள் வீட்டுக்கு அவர் கையெழுத்திட்ட தபால் கார்டு வந்துவிடுமெனத் தபால்காரரைத் தேடிச் செல்ல வேண்டும். தொந் தரவு!

**ச**ஞ்சய் தத்தின் 'லகே ரஹோ (தொடருங்கள்) முன்னா பாய்' என்கிற இந்திப் படமும் (டைரக் ஷன் ராஜ்குமார் ஹிரானி) இந்த வருஷம் ஆஸ்கருக்கு அமீர்கானின் 'ரங் தே பசந்தி'யுடன் தனிப் படமாகப் போயிருக்கிறதாம்.

மிகப் பெரிய ஹிட் படம்! 'காந்தி கிரி' (காந்தித்தனம்) என்கிற புதிய வார்த்தையை அறிமுகப்படுத்தி, நகைச்சுவை கலந்து காந்தியத் தத்துவத்தைச் சொல்கிற இந்தப் படம் வெளிவந்ததும் அண்மையில் காந்தியைப் பற்றிய புத்தக விற்பனையும் பத்திரிகைக் கட்டுரைகளும் அதிகரித் துள்ளன.

'காந்திகிரி'யை முதலில் தந்தவர் நம் வடிவேலுதான் என்று நினைக்கிறேன் 'கிரி' என்ற படத்தில் அவரது மறக்க முடியாத 'இவன் எவ்வளவு நல்லவன் டானு சொல்லிட்டாங்க' காமெடி, காந்திகிரியின் வெளிப்பாடு!

சிறு பத்திரிகைகள் போல சிறு செய்தித்தாள்களும் உள்ளன. மயிலாப்பூர் டைம்ஸ், மயிலாப்பூர் டாக், அப்போலோ டைம்ஸ் மூன்றும் தவறாமல் வீடு தேடி வருகின்றன. டிஷ்யூ ஸாரியிலிருந்து இன்க்ஜெட் டோனர் வரை எதையும் வாங்கவும் விற்கவும், சமையலுக்கு ஆள் தேடவும், பரதநாட்டியமோ இங்கிலீஷோ கற்கவும், கார் ஓட்டுநர் தேவையைத் தெரிவிக்கவும், எளிய முறையில் விளம்பரம் செய்து சாயங்காலத்துக்குள் பதில் பெற உதவும் இந்த பேட்டைப் பத்திரிகைகளில், நாட்டுப் பத்திரிகைகளில் கிடைக்காத சில அருமையான கட்டுரைகளும்கூட அவ்வப்போது வரும்; ஆச்சர்யம் தரும்.

அண்மையில், 'மயிலாப்பூர் டாக்' அக்டோபர் 1-7 இதழில், டி.ஆர். ஜவஹர் எழுதிய Where Governance is a Matinee show என்கிற கட்டுரையின் தைரியத்தை பத்திரிகைகளில் நான் அதிகம் பார்த்தது இல்லை. 'ஒரு முதல்வரும், ஒரு அண்டை மாநில கவர்னரும், ஒரு மக்கள் தலைவரும் செலூலாய்டு நங்கைகள் அரைகுறை ஆடைகளில் ஆடிய நடனங்களை, தேச பரிபாலனத்தைப் புறக்கணித்து, ஐந்து மணி நேரம் உட்கார்ந்து பார்க்கவைத்தது என்றால், சினிமா தமிழ்நாட்டின் ஜெனடிக் அப்செஷன் என்று சொல்வதில் தவறில்லை. இவர்கள் எல்லாம் கலாசாரக் காவலர்களா?' என்று கேட்டிருக்கிறார். Strong words!

*எ.பி.ஹைற*

*அதிகாலை வியர்வையுடன்*
*இருவர் தள்ளுகிற வண்டியில்*
*காஷ்மீர் கார்ப்பெட் சுருள்கள்.*

**- மார்கன்**



கலைஞர் = ஐயர்!

**இ**ந்தியாவில் அரசியல் கலக்காத பத்து விஷயங்களைஎழுதச் சொல்லியிருந்தேன் வாசகர்கள் திணறியிருக்கிறார்கள் என்பது தெரி கிறது. நான்கு பேர்தான் முழுசாக முயன்றிருக்கிறார்கள். அவர்கள் பட்டியல்களிலும் உண்மையாகவே அரசியல் கலக்காதவை, கீழ்க்காணும் எட்டு விஷயங்கள்தான்:

தாய்ப்பால், மக்கள்தொகைப் பெருக்கம், சோம்பேறிகள், பிச்சைக் காரர்கள்.

**- மு.அழகரசன்,** ஓமலூர்.

பேருந்து நிலையத்தில் எடை பார்க்கும் இயந்திரத்தின் இயக்கம்.

**-வி. சுவேஹ்,** மும்பை-76

பருவக் காற்று, வெயில், சமையல் புத்தகங்கள்.

**-சு.திலகவதி,** விலியனூர்

இந்தியாவில் மட்டு மல்ல, அகில உலகிலும் அரசியல் கலக்காத ஒரே ஒரு விஷயம்? விடை: கடைசியில்...



**அ**க்டோபர் 10... ராசி புரம் கிருஷ்ண ஸ்வாமி ஐயர் நாராயண ஸ்வாமியின் நூறாவது பிறந்த தினம். ஆர்.கே.நாராயண் என்றுதான் உலகம் அவரை அறியும். ஆங்கில இலக்கிய உலகம் அவரது நூற்றாண்டு நிறைவை ஆரவாரமில்லாமல் கொண்டாடியது. 'எனது தினங்கள்' (My days)புத்த கத்தின் டீலக்ஸ் பதிப்பு ஒன்றுவெளியாகியுள்ளது. நாராயணுக்கு இந்த அமைதியான கொண்டாட் டம் நிச்சயம் பிடித்திருக்கும். 87 வயது வரை எழுதி னார். 95 வயது வரை வாழ்ந்தார். 14 நாவல்களும், நிறைய சிறுகதைகளும், கட்டுரைகளும் படைத்தார். ராமா யணம், மகாபாரதத்தை எளிய ஆங்கிலத்தில் சொன்னார்.



அவருடைய கற்பனை ஊரான மால்குடியைத் தெருத்தெருவாக ஆராய்ந்திருக்கிறார்கள். இந்தியத் தொலைக்காட்சியில் முதன்முறை யாக ஒரு உருப்படியான சீரியல் ஷங்கர் நாகின் 'மால்குடி டேஸ்'.

நாராயணின் கதைகள் எதிலும் ஆரவாரம் இருக்காது. மெல்லிய நதி நீரோட்டம் போல நகைச்சுவையும் யதார்த்தமும் இழையோடும். 1995-ல் என்று நினைக்கிறேன், அவரைப்

பேட்டி காணச் சென்றிருந்தேன். முதலில் என்னை அவர் கண்டுகொள்ள வில்லை. பட்டும்படாமலும்தான் பதிலளித்தார். அவர் அப்போது எழுதி வெளியான 'The World of Nagraj' பற்றி கேட்டபோது, 'ஓ இவன் என்னைப் படித்திருக்கிறான்' என்று கவனிக்கத் துவங்கினார். பேட்டி முடிந்ததும் 'ஏன் முதலில் விட்டேத்தியாக இருந்தீர்கள்?' என்று அவரைக் கேட்டேன். 'பலபேர் பேட்டி காண வருகிறார்கள். 'டைம்' பத்திரிகையிலிருந்து ஓர் இளம்பெண் நடுப்பகலில் தகிக்கும் வெயிலில் மெரினா கடற்கரையில் நாற்காலி போட்டு உட்காரவைத்து போட்டோ பிடிக்க வேண்டும் என்றாள். (அது டைம் பத்திரிகையில் வந்தது). நான் என்ன எழுதியிருக்கிறேன் என்று என்னையே கேட்டாள். அதனால் பேட்டி என்றால் எனக்குக் கொஞ்சம் அலர்ஜி. நீ என் புத்தகங்களைப் படித்திருக்கிறாய் என்று தெரிந்ததும் உஷாராகிவிட்டேன்' என்றார் சிரித்துக்கொண்டே. நாராயணின் 'ஸ்வாமியும் சினேகிதர்களும்' மொழி பெயர்ப்பில் விகடனில் தொடர் கதையாக வெளிவந்திருக்கிறது. தற்போது விகடன் பிரசுரம் தனி புத்தகமாக இதனை வெளியிட் டுள்ளது. இதில் வரும் ஸ்வாமி வேறு யாருமில்லை- நாராயண ஸ்வாமிதான்.

வெனிஸுலா, ஐஸ்லாந்து என்று ஏதேனும் வினோதப் பிரதேசத்தில் பிறந்திருந்தால், நோபல் பரிசு கொடுத்திருப்பார்கள். அவருடைய மேதைமையை கிரஹாம் க்ரீன் கண்டுபிடித்திரா விட்டால் இந்தியர்களே கவனிக்கத் தவறியிருப்பார்கள். 1989-ல் ராஜ்யசபாவில் அவருடைய முதல் பேச்சு மறக்க முடியாதது. பள்ளிப் பிள்ளைகள் முதுகில் புத்தகச் சுமையை குறைக்கச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்றார்

**"அ**ந்த ஆளுக்கு கல்யாணமாகி முப்பது வருஷமா பொண்டாட்டியைவிட்டு நகராம இருக்காராம்ப்பா!"

"இதுதான் அன்புன்னு சொல்வேன்."



"டாக்டர் சொல்றார், இது பராலி ஸிஸ்னு!"

சங்க காலத்தைப்பற்றி பேசும் முன் இம்மாதிரி கடி ஜோக் ஒன்று சொல்லி விட்டுத் துவங்குவது என் வழக்கம்.

இன்றைய அன்றாட வார்த்தைகள் பல, சங்க காலத்தில் வேறு அர்த்தத்தில் பயன்பட்டன. பல உதாரணங்கள் தரலாம்... கலைஞரை ஐயர் என்று சொன் னால், சங்க காலத் தில் தப்பில்லை. ஐயர் என்றால் தலைவர். சேரி என்றால் அப்போது தெரு. ஆடு என்றால் வெற்றி. கற்பு என் றால் கற்றுக்கொண்டது. 'எழுதாக் கற்பு' என்றால் வேதம்!

சிறை என்றால், இன்று நாம் உள்ளே தள்ளுகிறோம். சங்க காலத்தில் சிறைப்புறம் என்றால் வெளிப்புறம். பார்ப்பன மகனே என்பது இன்றுபோல் அன்று திட்டு வார்த்தை இல்லை. உதாரணம்: குறுந்தொகை 156.

'பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக்கற்பின் இன்சொல் உள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்தும் உண்டோ மயலோ இதுவே?'

பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன் எழுதிய இந்தப்பாடலின் பொருள் இது:

'பார்ப்பன மகனே, சிவந்த பூக்களை உடைய புரசமரத்தின் பட்டையை உரித்து தண்டோடும் கமண்டலத்தோடும் விரத உணவுண்ணும் பார்ப்பன மகனே...

உன்னுடைய வேதத்தில் பிரிந்தவர்களைச் சேர்த்துவைக்கும் மருந்தும் உள்ளதா என்ன? இல்லை மயக்கத்தில் சொல்கிறாயா இதை?'

அந்தப் பார்ப்பன நண்பன் ஆறுதலுக்காகச் சொல்லியிருக்கிறான் என்பது உங்களுக்குப்புரிந்









திருக்கும். குறுந்தொகையின் சிறப்பு இதுதான். பெரும்பாலான பாடல்களில் யார் யாரிடம் சொன்னது என்பது வெளிப்படை யாகத் தெரியாது. என்ன சொன்னார்கள் என்பது மட்டும் இருக்கும். அதி லிருந்து பாடலின் உள் குரலை கண்டுபிடிப்பது தான் இன்பம்!

**சி**வசுந்தரி போஸ், திருச்சி சீரங்கம் சூழ்நிலையில் எழுதியுள்ள The Golden Stag ஆங்கில நாவலை அனுப்பியிருந்தார். பல ஆண்டுகளாகக் கவிதையும் கதைகளும் ஆங்கிலத்தில் எழுதி வரு கிறவர் சிவசுந்தரி. ‘தங்கமான்’ புத்தகத்தை கமல்ஹாசன் லேண்ட்மார்க்கில் வெளியிட்டிருந்தார்.

தில்லை நகர், அரிஸ்டோ ஓட்டல், மலைக்கோட்டை, மெயின் கார்டுகேட் போன்ற திருச்சி ஜாக் ரஃபியை முதன்முதலாக ஓர் ஆங்கில நாவலில் பார்ப்பது நிறைவாக இருந் தது. தமிழ் நாவல்களிலேயே அகிலனின் ‘நெஞ்சின் அலை’களுக்குப்பின் திருச்சி அதிகம் வந்த தில்லை.

**அகில உலகிலும் அரசியல் கலக்காத ஒரே ஒரு விஷயம்? விடை: குழந்தையின் சிரிப்பு!**

எபிஹை

குழந்தையின் வளையல்
குமரிப் பெண்ணின் காதில்.

- **எஸ்.ரெங்கதுரை,**

(இளந்தூது ஏ.வி.சி. கல்லூரி மாணவர் இதழில் தேறிய ஒன்றே ஒன்று)



## வன்முறையையும் லஞ்சத்தையும் வெல்லக்கூடிய சக்தி?!

**ந**கராட்சித் தேர்தல்கள் எப்படி நடந்தன என்பதைத் தொலைக்காட்சி சேனல்களில் கண்கூடாகப் பார்த்து, ‘யார் தொண்டர்? யார் குண்டர்?’ என்று மண்டை காய்ந்தோம்.

போலீஸ் தரப்பில், ‘ஓரிரு இடங்களில் லேசான வன்முறைச் சம்பவங்களைத் தவிர, தேர்தல் அமைதியாகவே நடந்தது’ என்ற அறிவிப்புதான், சென்ற வாரத்தின் மிகப் பெரிய நகைச்சுவை.

பல பூத்களில் காலை ஒன்பது மணிக்குள்ளேயே கள்ள ஓட்டுகள் எல்லாம் போட்டு முடித்து, ஜில்லோ என்று காலியாக இருந்தன. நாங்கள் பயந்துகொண்டேதான் ஓட்டு போடச் சென்றோம். ஊரறிந்த ஆசாமி என்பதால், என் ஓட்டைப் போடாமல் வைத்திருந்தார்கள்.

மறுதேர்தல் வைத்தாலும் இதே தான் நடக்கும்.

தேர்தல் பாரபட்சமற்று இருப்பதற்கு முக்கியத் தேவைகள் மூன்று...

1. தேர்தல் அதிகாரிகள் மாநில அரசு அதிகாரிகளாக இருக்கக் கூடாது.

2. காகித ஓட்டு கூடாது.

3. புகைப்பட அடையாள அட்டை கட்டாயம் வேண்டும்.

## எ.பி.பா



'முன்பே வா அன்பே வா'

- **வாலி**
**'சில்லுனு ஒரு காதல்'**

மதுரையின் அசெம்பிளி தேர்தல் இவை மூன்றையும் அனுசரித்து மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களைப் பயன்படுத்தியதாலும், மைய அரசின் தேர்தல் ஆணையம் நடத்தியதாலும் எந்த வித ரகளையும் இன்றி நடந்து முடிந்தது.




'இ.வி.எம்'-களில் பத்து மணிக்குள் எல்லா ஓட்டுகளையும் போட்டுத் திணிக்க முடியாது. காரணம், அதில் ஒரு ஓட்டுக்கும் அடுத்த ஓட்டுக்கும் காலதாமதம் 'டைம் டிலே' வேண்டுமென்றே கொடுத்திருக்கிறோம். (ராஜீவ் காந்தி சொன்ன யோசனை இது.) அத்தனை ஓட்டுகளையும் போட்டு முடிக்க, எட்டு மணி நேர மாகும். அதற்குள் இயந்திரம் கைப்பற் றப்பட்டுவிட்டால், அதை மேற்கொண்டு செயலற்றதாக ஆக்கவும் ஒரு பட்டன் இருக்கிறது.

இந்திய நாட்டில் லஞ்சத்தையும் வன்முறையையும் வெல்லக்கூடியது, டெக்னாலஜி ஒன்றுதான்!

அமெரிக்கா வாழ் தமிழ் மருத்துவர் கள் பற்றிச் சில வாரங்களுக்கு முன் எழுதியிருந்தது நினைவிருக்கலாம்.

அமெரிக்காவில் வெற்றிபெற்ற குஜராத்தி டாக்டர்கள் சிலர் குஜராத் கிராமங் களுக்கு அடிக்கடி சென்று பணிபுரிகிறார்கள் என்று பைன் ப்ரூக், நியூ ஜெர்ஸியில் இருந்து மின்னஞ்சலில் கணேசன் மகாதேவன் எழுதியிருக்கிறார். குறிப்பாக, டாக்டர் ஹரேன் என்பவர் 'ட்ரௌமா கேர்' என்னும் விபத்து மருத்துவம் பற்றிக் கற்றுக்கொடுத்து, அமெரிக்காவில் உள்ளது போல் 911 சேவையை குஜராத் நகரங்களில் தொடங்க உதவிபுரிகிறாராம். 'மெடிக்கல் டூரிஸம்' என்னும் புதிய துறையும் பிரபலமாகி வருகிறதாம். தமிழர்கள்?

'இம்சை அரசன்' படத்தின் 100-வது நாள் விழாவுக்கு அழைக்க வந்திருந்த அதன் டைரக்டர் சிம்புதேவனுக்கு நான் சொன்ன அறிவுரை... 'இன்னொரு சரித்திரக் கதையை உடனே தொடாதீர்கள். நகைச்சுவையை விடாதீர்கள்!'

அதன் தயாரிப்பாளரான டைரக்டர் ஷங்கர், "அடுத்த படத்துக்கு நான் எந்த அறிவுரையும் தரவில்லை. அட்வான்ஸ் மட்டும் கொடுத்து விட்டேன்" என்றார். கெட்டிக் காரர்!

நான் குமுதம் ஆசிரியராக இருந்த காலத்திலிருந்தே சிம்புவை எனக்குத் தெரியும். மதுரையில் இருந்து 'ஹில்கூ' என்ற புனை பெயரில் ஒருவர் அனுப்பிய கார்ட்டூன்கள் தனிப்பட்டுத் தெரிந்தன. அவரை சென்னைக்கு அழைத்து அடிக்கடி கார்ட்டூன் போடச் சொன்னேன். அந்த இளைஞர் தொடர்ந்து உற்சாகமாக நிறைய வரைந்து அனுப்பினார். அதன்பின் விகடனில் வேலைக்குச் சேர்ந்தார். பல நகைச்சுவைச் சித்திரங்கள் வரைந்தார். 'இம்சை அரசன் 23-ம் புலிகேசி' என்ற தொடர் தலைப்பிலேயே விகடனில் நிறைய வரைந்திருக்கிறார்

அதன்பின், சிம்புவை 'பாண்டவர் பூமி' படப் பிடிப்பின்போது சந்தித்தேன். சேரனிடம் 'ஏ.டி' யாகச் சேர்ந்திருப்பதை அறிந்தேன். அதன்பின் டைரக்டர் ஷங்கருக்கு ஒரு கதை சொல்லி, அவருக்குப் பிடித்துப் போயிருப்பதை அறிந்தேன். மற்றது சரித்திரம்.

**அ**மெரிக்கா என்றால், இந்த வெற்றியைத் தொடர்ந்து மெர்ச்சன்ட்டைஸ் பண்ணிவிடு வார்கள். 'இம்சை அரசன்' என்று ஒரு animated cartoon படம் வரும். தயாரிப்பாளர் கள் அதையே சிண்டிகேட் பண்ணுவார்கள். கிறிஸ்துமஸுக்கு அரசன், அவன் குதிரை, ராணிகளையெல் லாம் பொம்மைகள் செய்து விற்பார்கள்.

**இ**ம்சை அரசனுக்கு முன் னோடி மதன் என்றுதான் சொல்வேன். சிரிப்புத் திருடன் சிங்கார வேலு, முன்ஜாக்கிரதை முத்தண்ணா, ரெட்டைவால் ரெங்குடு போன்ற மறக்க முடியாத பாத்திரங்களை அவர்தான் துவக்கிவைத்தார்.

**கு**முதம் ஆசிரியராக இருந்தபோது, சிங்கப்பூர், லண்டன் அமெரிக்காவுக்கு மூன்று இலவச டிக்கெட் களைப் பத்திரிகைக்குத் தருவதாக 'ஏர் இண்டியா' நிறுவனம் சொல்லிற்று. அவற்றைப் பரி சாக அறிவித்து ஒரு கவிதை, சிறுகதை, நாவல் போட்டி அறி வித்தோம். கவிதைப் போட்டியில் பரிசு பெற்ற இருவரில் ஒருவர், தாமரை. கோவையில் இன் ஜினீயரிங் படித்து முடித்த இளம் மாணவி. என்னை வந்து பார்த்தபோது, "நிறைய கவிதை எழுதுங்கள்" என்றேன். "அது என் குறிக்கோள் அல்ல; சினிமாவுக்குப் பாட்டு எழுது வதுதான் என் விருப்பம்" என்று அப்போதே சொன்னார். இப்போது வசீகரமாக எழுதி வருகிறார். நா.முத்துக்குமாரும் அவரது 'தூர்' கவிதையைப் பாராட்டியபோது இதையே தான் சொன்னார். புதுக் கவிதையில் சில்லறை இல்லை.

நோபல் சமாதானப் பரிசு இந்த வருஷம், பங்களாதேஷ் பேராசிரியர் முகமது யூனுஸுக்கும், அவர் நிறுவிய கிராமீன் வங்கிக்கும் கிடைத்திருக்கிறது. அமெரிக்க டென்னசி பல்கலைக் கழகத்தில் படித்து, பொருளாதாரப் பேராசிரியராக இருந்த யூனுஸ், தாய்நாட்டுக்குத் திரும்பி வந்து 'மைக்ரோ கிரெடிட்' என்னும் வங்கிக் கடன்முறையை பங்களாதேஷில் கொண்டுவந்தார். இப்போது அது வெற்றிகரமாக இயங்குகிறது.


தாமரை

நா.முத்துக்குமார்

முகமது யூனுஸ்

ஏழைகளுக்கு, குறிப்பாகப் பெண்களுக்கு அவர்களின் தொழில் திறமைகளுக்கும் வாழ்வு மேம்பாட்டுக்கும் தேவையான உபகரணங்கள், மாடு வாங்கவோ கோழி வாங்கவோ... ஏன், செல்போன் வாங்கவோகூட கடன் கொடுப்பது என 'கொலாட் டரல்' போன்ற உத்தரவாதம் ஏதும் தேவையின்றி, நம்பிக்கையில் ஒரு குழுவுக்குக் கடன் கொடுப்பது போன்ற திட்டம். 99 சதவிகிதம் பேர் திருப்பிக் கொடுத்துவிடுகி றார்களாம் (ஏழைகள்!).

இந்தத் திட்டம் உலகின் பல நாடுகளில் இன்று பிரபலமாகி இருக்கிறது. குறிப்பாக, துருக்கியிலும் ஆப்பி ரிக்க

நாடுகளிலும்!

இந்தியாவில் ஸ்டேட் பேங்க்கூட இம்மாதிரி சிறு கடன்கள் கொடுக்கிறது. கோவை அருகில் ஒரு கிராமக் கிளையின் அதிகாரியை ஒரு முறை சந்தித்தபோது சொன்னார்... “பணமாகக் கொடுக் கிறோம். அதுதான் தப்பு. ஒரே மாட்டை, ஒரு கிராமமே காட்டிக் கடன் வாங்கிச் செலவழித்துவிடுவார்கள்” என்றார். முகமது யூனுஸ் பணத்தைக் கண்ணில் காட்ட மாட்டார். பொருளாகத்தான் தருவார்!

### எ.பி.ஹை.



நாய்க் கண்காட்சியில் அறிவிப்பு...
‘எட்டாம் நம்பர் அல்சேஷன் மேடைக்கு வரவும்!’

**வி**கடன் 15.10.06 இதழில் அறிவித்திருந்த

‘கைபேசி’ கார்ட்டூன் போட்டியில் கலந்து கொண்டு வாசகங்கள் அனுப்பிவைத்த அனைவருக்கும் வாழ்த்துக்கள்! பின் வரும் மூன்று வாசகங்கள் ‘கற்றதும்... பெற்றதும்...’ புத்தகப் பரிசுக்குத் தேர்வு பெறுகின்றன...



**“காலை ‘கட்’ பண்ணப்போறாங்களாம்!”**

- **த.சத்தியநாராயணன்,** சென்னை-49

**“உங்க பேங்க்ல கார் லோன் வாங்கினா செல்போன் ஃப்ரீயா? அடப் போங்கய்யா..!”**

- **ஜின்னா மணிச்செல்வன்,** செம்பட்டிவிடுதி

**“இந்த மொபைல் எனக்கு ராசியே இல்லை, ஆஸ்பத்திரிக்கு வரும்போது புது செல்போன் ஒண்ணு வாங்கிட்டு வா, மறந்துடாதே!”**

- **ஆ.ராமநாதன்,** தஞ்சாவூர்-1

## இரண்டு பெண்கள்... ஒரு கேள்வி!

**சு**ஹாசினி மணிரத்னம் அழைத்திருந்த தீபாவளி மதிய உணவு நிகழ்ச்சியில் நண்பர் சாருஹாசனைச் சந்தித்து, குணமானதற்கு வாழ்த்து தெரிவித்தேன். பாரீஸில் கீழே விழுந்து, ஓரிரு எலும்புகள் உடைந்து, மண்டையில் அடிபட்டு கோமாவில் இருந்து மீண்டவர், ‘சரியாப்போச்சு!’ என்றார் சிரித்துக்கொண்டே. ‘வாழ ஆசை இருந்தால் சரியாப் போய்விடும்!’ என்றேன்.



பேரன் நந்தாவிடம், ‘உனக்கு சினிமாவில் ஈடுபாடு உண்டா?’ என்று கேட்டேன். மணிரத்னம் போலத் தலை யாட்டிவிட்டுச் சுருக்கமாக, ‘இக னாமிக்ஸ், கீய்ன்ஸ்’ என்றான். வயது 12 இருக்கும்.

நடிகை ரேவதியையும்அங்கே சந்தித்தேன். திருவனந்தபுரத்தில் ஸ்ரீவித்யாவின் இறுதி அஞ்சலி நிகழ்ச்சிக்குச் சென்றுவிட்டு திரும்பி இருந்தார். கேரள அரசு ஸ்ரீவித்யாவின் உடலை மக்கள் பார்வையில் அஞ்சலி செலுத்த வைத்து ராஜ மரியாதைகளுடன் தகனம் செய்தார்களாம்.

மறைந்த நடிகர் சத்யன் முதல் அத்தனை முன்னணி நடிகர்களுடனும் முதலில் கதாநாயகியாக, பிறகு அம்மாவாக, ஏறத் தாழ 400 மலையாளப் படங்களிலும் 200 தமிழ்ப்படங்களி லும் நடித்திருந்த ஸ்ரீவித்யாவை காரைக்குடியில் ‘கண்டுகொண்டேன்’ படப்பிடிப்பின்போது ஒரு முறை சந்தித்திருக்கிறேன்.

தபு, ஐஸ்வர்யாராய் போன்ற சக நடிகைகளுடன் அதிகம் பேசாமல் தன்பாட்டுக்கு புத்தகம் படித் துக்கொண்டு இருந்தார். தன்முறை வந்தபோது திறமையாக நடித்துக் கொடுத்துவிட்டு புத்தகத் துக்குத் திரும்பிவிடுவார்.

நான் பத்தாவது படித்தபோது, என் தந்தையார் மின்சார இலாகாவில் பி.ஆர்.ஓ-வாக இருந்தார். எங்களை ஃபிலிம் ஷூட்டிங் பார்க்க, ஜெமினி ஸ்டுடியோவில் அனுமதி வாங்கி அனுப்பிவைத் திருந்தார்.



லலிதா- பத்மினி நடனம் ஆடுவதைப் படம் பிடித்துக்கொண்டுஇருந் தார்கள். வைஜயந்திமாலாவின் தாய் வசுந்தரா நடித்த படம்... பெயர் ஞாபகமில்லை. திரும்பத் திரும்ப ஒரே அசைவைப் பல முறைஎடுத் ததால் அலுத்துப்போய் திரும்பி வந்துவிட்டோம். பத்மினிக்கு அப்போது 16 வயது இருக்கலாம். ‘வேலைக்காரி’யின் ‘ஓரிடம் தனிலே’ துவங்கி பல படங்களில் இந்தசகோ தரிகள் நடனம் மட்டும் ஆடினார்கள். என்.எஸ்.கே.யின் ‘மணமகள்’ படத்தில் கதாநாயகி அந்தஸ்து பெற்றபின், ஜெமினி கணேசன், சிவாஜி கணேசன், எம்.ஜி.ஆர், என்.டி.ஆர், இந்தியில் ராஜ்கபூர் வரை எல்லா மொழிகளிலும் எல்லாக் கதா நாயகர்களுடனும் இவரும் 252 படங்களில் நடித்தவர். மெள்ளமெள்ள குணசித்திரப் பாத்திரங்களிலிருந்து கதாநாயகி, அண்ணி, அம்மா அப்புறம் பாட்டி என்ற இயல்பாக வயது முதிர்ந்து ஓய்வு பெற்றார்.

ஸ்ரீவித்யாவின் சாதனைக்கு ஈடான சாதனைகள் படைத்த பத்மினி, அண்மையில் இறந்தபோது தமிழக அரசு ஒரே ஓர் இரங்கல் செய்திக்குப் பின் ஏன் கண்டு கொள்ளவே இல்லை என்று வியப்பாக இருக்கிறது.

‘கலையுலகம் எங்களைப் புகழலாம், நாங்கள் கலையுலகைப் புகழ மாட்டோம்!’ என்பதுதான் கோட்பாடா அல்லது கேரள அரசு கலைஞர்களை வேறு விதமாக மதிப்பிடுகிறதா?

தீபாவளி சிறப்பு நிகழ்ச்சிகள் தொலைக்காட்சியில் பட்டாசு, பட்டாடை

போல ஒரு சாஸ்வதம் பெற்றுவிட்டதைக் கவனித்தீர்களோ?

அதிகாலை செம்பொனார்கோயில் அல்லது மதுரைக் கலைஞர்களின் நாகஸ்வரம். அதன்பின் சிறப்புப் பட்டிமன்றம்... கு.ஞானசம்பந்தன், சாலமன் பாப்பையா, திண்டுக்கல் லியோனி இவர்கள் மூவரும் கட்டாயம் இருப்பார்கள். பட்டிமன்றத்துக்கான தலைப்புகளிலும் அதிகம் வேறுபாடுகள் இருக்காது. ‘இல்வாழ்வில் மகிழ்ச்சிக்கு காரணம், கணவனா - மனைவியா?/ உறவினர்களா குழந்தைகளா?’, ‘அதிகம் செலவழிப்பது ஆணா - பெண்ணா?’ இப்படிப் பத்து தலைப்புகளில்அடங்கி விடும்.



அதன் பின் தொடர்வது புதுவரவு. புதுப் படங்களின் முன்னோட்டம். புது நடிகைகள் மத்தாப்புவிடுவது.

நடிக நடிகையரிடம் கேனத்தனமான கேள்வி - பதில்கள். உதாரணம்... பேட்டி காணும் பெண் (சினிமாவில் நடிக்க முயன்றுகொண்டு இருப்பவர்) தலையை கோதிக்கொண்டு ‘முதல் ஷாட் எடுக்கறப்ப எப்படி இருந்துச்சு உங்களுக்கு?’ நடிகை, தன் தலையை கோதிக்கொண்டு, ‘இட் வாஸ் லவ்லி. அட் த சேம் டைம் டென்ஷன் இருந்திச்சு, பெரி டைரக்டர் முன்னால பண்றோம் சொல்லி. ஐ வாஸ் வெரி வெரி நெர்வஸ்!’ இரண்டு பேரும் கைகொட்டிச் சிரிக்க இப்படி பெரும்பாலும் ஆங்கிலத்தில் பதில்கள். அதன்பின் இந்தியத் தொலைக்காட்சிகளில் முதன்முறையாக டப்பா படங்களின் பரேடு துவக்கம்!



பேராசிரியர் ஞானசம்பந்தனுடன் இந்தப் பட்டிமன்றங்களைப் பற்றி பேசி இருக்கிறேன். பட்டிமன்ற/வழக்காடுமன்றக் கலாசாரம் தமிழ் நாட்டுக்கென்றே தனிப்பட்டது. மாரியம்மன் திருவிழாக்களில்கூட பட்டிமன்றம் என்பது ராத்திரி கட்டாயம் இருக்க வேண்டுமாம்.

கோஷ்டியாக ஒரு கிரிக்கெட் டீம் போல ஒட்டிப் பேச - வெட்டிப் பேச இரண்டு டீமையும் சேர்த்துக்கொண்டு வேனில் செல்வார்களாம். விடிய விடிய நடக்குமாம். தெருக்கூத்தின் நவீன வடிவம்தான் பட்டிமன்றம் என்று தோன்றுகிறது.

பட்டிமன்ற நடுவர்களுக்கு சில புதிய தலைப்புகள் தர விரும்புகிறேன். ‘நல்ல மழை பெய்யத் தேவை, மேகமா - யாகமா?’, ‘நல்ல முகச் சவரம் செய்யத் தேவை, பிளேடா - க்ரீமா?’

வாசகர்கள் கார்டில் புதிய தலைப்புகள் எழுதி அனுப்பலாம். சிறந்த தலைப்பை அனுப்புபவர் ஆணா - பெண்ணா/மாணவரா - மாணவியா?

பார்க்கலாம்!

களப்பாள் குமரன் அவர்கள் எழுதிய ‘தள்ளுபடி அம்மன் துணை’ என்கிற (ஆம், அதுதான் தலைப்பு!) சிறுகதைத் தொகுதியை ரசித்துப் படித்தேன். ஒவ்வொரு கதையும் ஒரு பெரிய நாவலின் கதைச் சுருக்கம் போல எழுதப்பட்டு கதை சொல்லும் உத்தி நவீன சிறுகதையின் இலக் கணங்களை மீறினாலும், ரசிக்க முடிந்தது. சென்னைக்குப் பிழைப்புத் தேடி வரும் இளைஞன் குப்பு, வேலை கிடைக்காமல் துணிக் கடை வாசலில் நின்றுகொண்டு ‘ஐயா வாங்க, அம்மா வாங்க, ப்ளீஸ் கம் சார், மேடம் ப்ளீஸ்’ என்று உள்ளே வாடிக்கை மக்களை அழைக்கும் வேலையில் துவங்கி, சேல்ஸ்மேனாகி படிப்படியாகத் தானே கடை ஒன்று துவக்கும் அளவுக்கு முன்னேறி, சிறப்புத் தள்ளுபடியில் விற்கும் தந்திரங்களைப் பயன்படுத்தி விரிவடைந்து, நாலே பக்கங்களில் கோடீஸ்வரனா கிறான்.

தன்னுடைய சொந்த கிராமமான சந்தைக்குப்பையில் அம்மன் கோயில் கட்டுகிறான். இறுதியில்... ‘அடையாறில் ஐந்து நட்சத்திர ஓட்டல் வாசலில் ஏ.ஸி. கார் வந்து நின்றது. அதன் முதலாளி குப்பு என்கிற குஷ்பு கன்னா, கருப்புக் கண்ணாடியுடன் இறங்கி நின்றது கண்கொள்ளாக் காட்சி. காரின் பின் கண்ணாடியில் கண்ணைப் பறிக்கும் வண்ணத்தில் ‘ஸ்ரீ தள்ளுபடி அம்மன் துணை’ என்று எழுதப்பட்டிருந்தது.’

விலை ரூபாய் 15. ஆசிரியர், பூண்டி புஷ்பம் கல்லூரியில் விரிவுரையாளர். ‘கற்க கணிப்பொறி’, ‘கன்னி முத்தம்’ (காதல் கவிதைகள்) போன்ற பிற நூல்களையும் எழுதியுள்ளார் என்பது கடைசிப் பக்கத்திலிருந்து தெரிகிறது.

எ.பி.பொ

அந்தப் பெண்ணுக்கு பதினெட்டு பாஷைகள் தெரியும். அதில் எதிலும் ‘மாட்டேன்’ என்று சொல்லத் தெரியாது!’

**- டோராத்தி பார்க்கர்**

## பரிதாபத்துக்குரிய அங்காடி மகளிர்!

**‘மெ**ட்டலர்ஜி’ என்னும் உலோக வியலை, உலகின் இரண்டாவது மிகப் புராதனமான தொழில் என்பார்கள். முதல் எது? சொல்லவே வேண்டாம்.

போலீஸ் அதிகாரியும் சென்னை மாநகராட்சியில் விழிப்பு உணர்வு (விஜிலென்ஸ்) அதிகாரியுமான வி.சித் தண்ணன் டி.எஸ்.பி, தான் தொகுத்த Immoral Traffic Prostitution in India என்கிறபுத்தகத்தைக் கொண்டுவந்து கொடுத்தார். ஐடி என்றால் இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி மட்டும் இல்லை; இம்மாரல் டிராஃபிக் என்னும் பரத்தமை, கொத்தடிமை, குழந்தைகள் மேல்... பெண்கள்மேல் பலாத்காரம், அவர்களைக் கடத்தல் போன்ற பல ஒழுங்கீன மீறல் குற்றங்களைக் குறிக்கும் சொல் ஐ.டி. இவற்றைப் பற்றிய எல்லாத் தகவல்களையும் விவர மாகத் தயாரித்து அளித்திருக்கிறார்.



இதன் சரித்திரம் என்ன, காரணங்கள் என்ன, சட்டம் இதை எப்படி நோக்குகிறது, சமூகம் எப்படிப் பார்க்கிறது, பல்வேறு நாடுகளில் இது எப்படி நடத்தப்படுகிறது, கடத்தப்படுகிறது, தண்டிக்கப்படுகிறது, சிறையில் அவர்களை எப்படி நடத்த வேண்டும் (அமெரிக்காவில் விலை மாதரை அழைப்பதுகூடக் குற்றம்) இப்படிப் பல விவரங்களை ஒரு போலீஸ் அதிகாரியின் நுட்பத்துடனும், சமூக அக்கறை சார்ந்த அனுதாபத்துடனும் தொகுத் தளித்திருக்கிறார். Prostitution என்பதற்கு The sale of sexual services for some form of remune- ration,usually money. ஏதாவது ஒரு வகை கூலிக்காக, பெரும் பாலும் பணத்துக்காகச் செய்யப்படும் பாலியல் சேவையின் விற்பனை என்று பொதுவாக அறுதியிடும் போது, சமூகத்தில் பலர் செய்யும் காரியங்களை, பல வியாபாரங்களை இதன் கீழ் கொணர்ந்து ஐ.டி. சட்டம் 1956-ன் கீழ் உள்ளே தள்ளலாம். ஆபாசப் படம் போடுபவர்கள், எடுப்பவர்கள், ஆபாசக் கதை எழுதுபவர்கள் யாரையும் அழைத்துப் போகலாம்.

குறுந்தொகை போன்ற சங்க நூல்களில் உள்ள பரத்தையர்களை உரைகாரர்கள் இற்பரத்தை, சேரிப்பரத்தை என்று பாகுபடுத்தினாலும், எந்தப் பாடலிலும் பொருளுக்காக சினேகம் தந்தவர்களாகக் காட்டப்படவில்லை. உண்மையாகவே மனைவியைப் போல சம அந்தஸ்து விரும்பி தலைவனுடன் அன்பு செலுத்திய பரிதாபத்துக்குரிய, மாதவியின் முன்னோடி களாகத்தான் தெரிகிறார்கள். பத்துப்பாட்டில் ஒன்றான மதுரைக் காஞ்சியில், அங்காடி மகளிர் என்றும் பொதுமகளிர் என்றும் விவரிக்கப்படும் பெண்கள் மெள்ளப் பேசி, அழகுற நடந்து, கைதட்டி அழைத்து கல்லா இளைஞரோடு கலந்து மகிழ்வதாகக் குறிப்புகள் உள்ளன.



*‘கழனி மரத்து விளைந்துகு தீம்பழம்*
*பழன யானை கதூஉம் ஊரன்*
*எம்மில் பெருமொழிகூறித் தம்மில்*
*கையும் காலும் தூக்கத் தூக்கும்*
*ஆடிப்பாவை போல*
*மேவனசெய்யும் தன் புதல்வன் தாய்க்கே’*

‘வயலை அடுத்துள்ள மரத்தில் முதிர்ந் திருக்கும் இனிப்பான பழங்களை யானை கவ்விக்கொள்ளும் நாடன், என் வீட்டில் பெரிசாகப் பேசிவிட்டுத் தன் வீட்டுக்குப் போனபின், கையும் காலும் தூக்கத் தூக்கும் கண்ணாடிக்கு எதிரில் பிம்பம் போல, தன் புதல்வனுடைய தாய்க்கு விரும்பியதைச் செய்வான்!’ - என்று பரத்தை சொல்வதாக உள்ள இந்த ஆச்சர்யமான குறுந்தொகைப் பாடல், அந்தப் பெண்ணின் சமூக நிலையைக் காட்டுகிறது. இன்றுகூட இது பொருந்தும். இந்தப் பாடலில், யானை இனிய பழங்களைக் கதுவும் நாடன் என்றும், புதல்வன் தாய் என்றும் ஆலங்குடி வங்கனார் சொல்லியிருப்பதில் உள்ள ‘ஸப் டெக்ஸ்ட்’டை யோசித்துப் பாருங்கள்.

பெங்களூரில் இருந்தபோது, டி.சி.பி. கார்த்திகேயனுடன் சென்று, ஒருமுறை விலைமாதரை பேட்டி காண விரும்பினேன். “வாங்க, ஒரு ரெய்டு போகலாம்!” என்றார்.

சிக்பேட்டை சந்துகளில் அந்தப் பெண்ணரசிகளையும், அவர்களைப் பயன்படுத்தும் தரகர்களையும் தேடிச் சென்றோம். போலீஸ் ரெய்டு வருகிறார்கள் என்று முன்னாலேயே தகவல் போயிருக்க வேண்டும்.

நாங்கள் போனபோது, திருப்பதி பெருமாள் படத்துக்குச் சூடம் காட்டிக்கொண்டு இருந்தார்கள்.

“இது என்ன இடம்?” என்றேன், அங்கே ‘ப்ரஜாவாணி’ படித்துக் கொண்டு இருந்தவரிடம்.

“ரீடிங் ரூமு. லைப்ரவரி” என்றார்.

கார்த்திகேயன், “அப்படியா... புஸ்தகம் எல்லாம் எங்கே?”

“அலமாரிக்குள் இருக்கிறது” என்றார் ப்ர வா.



“திறந்து காட்டு!”

“சாவி இல்லையே!”

தன்னுடன் வந்திருந்த இன்ஸ்பெக்டரிடம், ‘ஒடி’ என்று கட்டளையிட்டார் கார்த்திகேயன், கன்னடத்தில். ‘ஒடி’ என்றால் உடை.

“பௌகே ஹத்து கண்டெகே பன்னி திறடான்னா!” என்று இன்ஸ்பெக்டர் உதைத்துத் திறந்தபோது, அந்த அலமாரிகளுக்கு உள்ளே ஒளிந்திருந்த பெண்கள் வெளிப்பட்டனர். சிலர் ஜன்னல் வழியாகக் குதித்து, மொட்டை

மாடியில் ஓட, அவர்களைத் துரத்திப் பிடித்தார்கள்.

பெரும்பாலும் தெலுங்குப் பெண்கள். அவர்களில் தமிழ் பேசும் ஒருத்தி, “உங்க புக்ஸ் எல்லாம் படிப்பேங்க” என்று சொன்னது எனக்கு அதிர்ச்சியாக இருந்தது.

போலீஸ்காரர்களுக்கும் விலைமாதர்களுக்கும் இடையே ஒருவகையான (Camaraderie) நட்புறவும் பரிவும் இருப்பது, மறுநாள் கோர்ட்டில் அவர்களை ஒப்படைக்கும்போது தெரிந்தது. “சௌக்கியமா இருக்கீங்களா பசவ ராஜு? உங்க பெண்ணுக்குக் கல்யாணம் ஏதாவது நிச்சயமாச்சுங்களா? ஏன் இவ்வளவு ஜல்தி ரெய்டு வந்துட்டிங்க..? ஆறு மாசம் ஆகும்னீங்களே? மாஜிஸ்ட் ரேட்டுகிட்ட ஒரு வாரத்துக்கு மேல தண்டனை வேண்டாம்னு சொல்லு ராஜா, பொழைப்பு கெட்டுப்போயிரும்” என்று சிரித்துக்கொண்டே அந்தக் கலைந்த தலை, கலைந்த உடைப் பெண் தூக்கமற்ற கண்களுடன் கேட்டுக் கொண்டபோது, எனக்குக் கண்ணீர் முட்டியது.

தண்டனை போதாது என்பதை விட, தண்டிக்க வேண்டியவர்கள் யார் என்பதில்தான் குழப்பம். இந்தப் பெண்களைத் தண்டிப்பதால் இந்தக் குற்றமோ, எய்ட்ஸ் பரவலோ குறைந்துவிடும் என்று சொல்ல முடியவில்லை. கிராமத் தில் இவர்களுக்கு ஆசை காட்டிக் கூட்டி வரும் ஆண்களையும், நகரத்தில் கேட்டு வரும் ஆண்களையும்தான் போட்டுத்தள்ள வேண்டும். அது சட்டப்படி சாத்தியமில்லை. அதைச் செய்ய இயலாத ஓர் இளம்பெண் ஐ.பி.எஸ் அதிகாரி, புதிய முறையைக் கையாண்டார். இந்தப் பெண்களைப் பிடித்து கோர்ட்டுக்குக் கொண்டுவரு வதற்குப் பதிலாக, மொட்டையடித்துப் பள்ளிக்கு அனுப்பினார், முடி வளரும் வரையாவது படிக்கட்டுமே என்று! அதற்கு அவருக்கு உரிமை இல்லை என்று ஒரு என்.ஜி.ஓ. மறியல் செய்ய, மாற்றப்பட்டார்.

பிபிசி-யிலோ, சிஎன்என்-னிலோ சோனேகாச்சி விலைமாதர்களைப் பற்றிய ஒரு டாகுமென்ட்டரி பார்த்தது ஞாபகம் வருகிறது. சாயங்காலம் தொழிலை ஆரம்பிப்பதற்கு முன் எல்லாப் பெண்களையும் நிறுத்தி வைத்து ஆரத்தி எடுக்கிறார்கள். எப்படி? வேண்டாம், சொல்ல மாட்டேன்!

### எ.பி.ஹை



கம்ப்யூட்டர் லேபில் வசந்தகாலம்
ஒரு மானிட மென்பொருளைக்
காதலிக்க நேரம்.

**- அலெக்ஸேய் ஆண்டயேவ்**

### எ.பி.பொ



‘வாயைத் திறக்காமல் ஒன்றுமே தெரியாத முட்டாள் போலத் தோன்றுவது, வாயைத் திறந்து அதை ஊர்ஜிதம் செய்வதைவிட மேல்!’

**- மார்க் ட்வெய்ன்**

## காஷ்மீர் பிரச்னைக்கு என்னதான் தீர்வு?

**செ**ன்ரியு என்பது சமூகத்தை விமர்சிக்கும் குறும்பா. பெரும்பாலும் இன்று தமிழிலே ஹைக்கூ என்று எழுதப்படுவதெல்லாம் சென்ரியுக்கள்தாம்!

உண்மையான ஹைக்கூ அரிதானது. காட்சியாகப் பார்த்த ஒரு பரவசக் கணத்தின் பதிவு. சிபியின் ஹைக்கூ ஓர் உதாரணம்!

உலகிலேயே மிகச் சிறிய விஞ்ஞானக் கதையை சில வாரங்களுக்கு முன் கொடுத்திருந்தேன். உலகிலேயே மிக நீளமான விஞ்ஞானக் கதை எது என்று திருக்காட்டுப்பள்ளி சூசைராஜ் கேட்டிருந்தார். அதை நானே முன்பு எழுதியிருக்கிறேன். 'மன்னிக்கவும், இது கதையின் ஆரம்பம் அல்ல' என்ற தலைப்பில், அந்தக் கதை எனது விஞ்ஞானச் சிறுகதைகளின் தொகுப்பில் உள்ளது.

**எ.பி.ஹை**

நல்ல மழை
காற்றின் கைங்கர்யத்தில்
வீட்டின் முற்றத்திலும்.

**- சிபி**



**எ.பி.சென்ரியு**

குழந்தை
அவனுக்கு
ஒரு நிமிடம்
அவளுக்கு
வாழ்க்கை.

**-ஆண்டாள் பிரியதர்ஷினி**



'மிக நீண்ட' அறிவியல் புனை கதைகள் எழுதப் பலர் முயன்றிருக்கிறார்கள். அந்த முயற்சிகளில் எனக்குப் பிடித்தது - ஸ்பேஸ் கேட் (விண் பூனை) என்பவரின் ஐடியா. இந்தக் கதையை, சில நண்பர்களை அமரவைத்து வாசித்துக் காட்டவும். தனியாக அச்சில் படிப்பதில் அத்தனை 'த்ரில்' இருக்காது. சரி, கதைக்குப் போகலாமா?



"அதோ" என்று அறிவித்தார் புரொபசர். "கால யந்திரத்தைத் தயார் செய்து முடித்து விட்டேன்!"

"அப்படியா புரொபசர்?" என்றான் அவருடைய உதவியாளன். "பரிசோதனை பண்ணிப் பார்க்கலாமா?"

"நல்ல ஐடியா! கடந்த காலத்தில் பத்து செகண்டுகள் பின் செல்லுமாறு முதலில் சோதித்துப் பார்க்கிறேன்!"

புரொபசர் அந்த இயந்திரத்தின் சில பல் சக்கரங்களைத் திருகினார். சற்று நகர்ந்து நின்றுகொண்டார்.

கால யந்திரத்திலிருந்து சில உறுமல் சப்தங்கள் வெளிப்பட்டன.

"அதோ" என்று அறிவித்தார் புரொபசர். "கால யந்திரத்தைத் தயார் செய்து முடித்துவிட்டேன்!"

"அப்படியா புரொபசர்?" என்றான் அவருடைய உதவியாளன். "பரிசோதனை பண்ணிப் பார்க்க லாமா?"



“நல்ல ஐடியா! கடந்த காலத்தில் பத்து செகண்டுகள் பின் செல்லுமாறு முதலில் சோதித்துப் பார்க்கிறேன்!”

புரொபசர் அந்த இயந்திரத்தின் சில பல் சக்கரங்களைத் திருகினார். சற்று நகர்ந்து நின்றுகொண் டார்.

கால யந்திரத்திலிருந்து சில உறுமல் சப்தங்கள் வெளிப்பட்டன.

“அதோ” என்று அறிவித்தார் புரொபசர். “கால யந்திரத்தைத் தயார் செய்து முடித்துவிட்டேன்!”

“அப்படியா புரொபசர்?” என் றான் அவருடைய உதவியாளன். “பரிசோதனை பண்ணிப் பார்க்க லாமா?”

“நல்ல ஐடியா! கடந்த காலத்தில் பத்து செகண்டுகள் பின் செல்லுமாறு முதலில் சோதித்துப் பார்க்கிறேன்!”

புரொபசர் அந்த இயந்திரத்தின் சில பல் சக்கரங்களைத் திருகினார். சற்று நகர்ந்து நின்றுகொண்டார்.

கால யந்திரத்திலிருந்து சில உறுமல் சப்தங்கள் வெளிப்பட்டன.

கேட்டுக்கொண்டு இருப்பவர் தலை முடியைப் பிய்த்துக்கொள்ளும் வரை இவ்வாறு திரும்பத் திரும்பப் படிக்கவும்.

நீளக் கதை... வேண்டாம்! அடிக்க வருவீர்கள். ஒரு குட்டிக் கதை சொல்கிறேன்.

சாந்தோமில் ஒரு கல்லறையில் இவ்வாறு எழுதியிருந்தது... ‘இன்று இங்கு வந்திருந்தேன். ஆர்.செல்வகுமார் 1.11.2006.’

அந்தக் கல்லறை யாருடையது என்று தலைக் கல்லைப் படித்துப் பார்த்தேன். ஆர்.செல்வகுமார், தோற்றம்-1917; மறைவு-1977.

இந்த வகையில், கைவசம் 14 கதைகள் வைத்திருக்கிறேன். அவற்றைத் தருமுன், வாசகர் எழுதும் பத்துக் கதைகளைத் தேர்ந்தெடுக்கிறேன்.



விதிகள்...

1. விஞ்ஞானக் கதை.

2. ஒரு வரியிலிருந்து ஐந்து வரிக்குள்.

3. கார்டில், கட் டாயம் உங்கள் வயது குறிப்பிட்டு எழுதி அனுப்பவும்.

4. ஒரே வாரத்துக்குள்.

ஒரு வரியில் வி. கதை எழுத முடியுமா என்று வியக்கலாம். முடியுமே!



“அபாயம்… எச்சரிக்கை!” என்று ஊளையிட்டது ரோபோ, எச்சரிக்கை தன்னைப் பற்றியதே என்பதை அறியாமல்.

‘சில பேர் விடுமுறையில் செல்லும்போது, எல்லோருக்கும் ஓய்வு கிடைக்கிறது’ என்றார் லாங்ஸ் டன் ஹ்யூக்ஸ்.

பி.இ.எல்-லில் பணிபுரியும்போது, எல்.டி.சி. என்றொரு விடுமுறை பயணத் திட்டம் இருந்தது. விடுமுறையில் செல் வதற்கான செலவை, அதற்கான ரசீதுகளைக் காட்டி னால், கம்பெனியே ஏற்றுக்கொள்ளும். ஒரு வருஷம் சுற்றுலாத் தலங்களுக்கும், ஒரு வருஷம் சொந்த ஊருக்கும் என மாற்றி மாற்றி இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை என்று அறிவித்தார்கள். அதற்கு, சொந்த ஊர் எது என்று முதலிலேயே அறி விக்க வேண்டும் என்றார்கள். பல பேர் அரிசிக்கரையில் பிறந்துவிட்டு, ஸ்ரீநகர் என்று அறிவித்தார்கள். சிலர் வட கிழக்கு இந்தியாவின், சீனா அருகில் உள்ள நகரங்களை எல்லாம் சொந்தம் கொண் டாடினார்கள்.

ஊருக்குப் போவதற்கு டிக்கெட் தயார் பண்ணித் தர, எப்படி அந்தப் பணத்தை வாங்குவது என்று சொல் லித் தர, ஏஜென்ட்டுகள் இருந்தார்கள். கம்பெனி நிர்வாகத்தில் யோசித்தார் கள். ‘எதற்காக ஊழியர்களை அநியாயமாகப் பொய் சொல்ல வைக்க வேண்டும்! வருஷத்துக்கு எல்.டி.சி. இத்தனை என்று ஒட்டு மொத்தமாகக் கொடுத்து விட்டு, ஆளைவிடுங்கள்!’ என்று அறிவித்துவிட்டார் கள். ‘அந்தப் பணத்தில் நீங்கள் மணிலா செல்வீர்களோ, குனிலா ஆடுவீர் களோ… வி டோன்ட் கேர்!’ என்று தெளித்துவிட்டார் கள்.



அந்த எல்.டி.சி. திட்டத்தை நிஜமாகவே பயன்படுத்தி, காஷ்மீருக்குச் சுற்றுலா போன ஒரு சிலரில் நானும் ஒருத்தன். குளிர் ஆரம்பித்துவிட்ட டிசம்பரில், ஒரு டஜன் ஸ்வெட்டர்களுடன் சென்றோம். ஓட்டல்கள் எல்லாம் காலி!

தால் ஏரி உறைந்து, ஸ்டம்ப் நட்டு கிரிக்கெட் ஆடிக்கொண்டு இருந்தார்கள். உள்ளூர் மக்கள், கங்ட்டா என்ற நெருப்புச் சட்டியை வயிற்றில் கட்டிக்கொண்டு உலவினார்கள். பெஹல்காமில் ஒரு குதிரை கேட்டால், நான்கு குதிரைகள் கொண்டுவந்தார்கள். குளிக்காத குழந்தைகள் அழகாக, சிவப்பாகப் பிச்சை எடுத்தார்கள்.

எதற்காக அவ்வளவு கஷ்டப்பட்டு, குடும்பத்தையும் படுத்தி காஷ்மீர் போனேன் என்று இப்போதுகூட யோசித்தும், விடை கிடைக்கவில்லை. ஆனால், அந்த வருஷத்துக்குப் பின்னர் டூரிஸ்ட்டு கள் குறைந்து, தீவிரவாதம் அதிகரித்து, காஷ்மீர் யுத்த பூமியாகிவிட்டது. அதிலிருந்து மீள, 15 ஆண்டுகள் ஆயின. இப்பவும், அவ்வப்போது பொழுதுபோக்குக்காக, ஜவான்கள் மேல் கைக்குண்டு வீசிக்கொண்டு இருக்கிறார்கள். இந்தப் பிரச்னைக்குச் சுமுகமாகத் தீர்வு காணப்படும் என்று தொடர்ந்து புளுகி வருகிறோம். காஷ்மீருக்கு ஒரே தீர்வு, ‘எக்கேடு கெட்டுப் போ!’ என்று அதைத் துறந்துவிடுவதே!

தேவை political will!

## ஆடுபவர்களில் ஆடவர்கள்..?!

பட்டிமன்றத் தலைப்புக்கான யோசனைகளைப் பலர் அனுப்பியிருந்தனர். பெரும்பாலும் சீரியஸான தலைப்புகளே வந்தன. கொஞ்சம் தமாஷான கார்டுகள் குறைவாகவே இருந்தன. தமிழ்நாட்டில் பட்டிமன்றம் எத்தனை சீரியஸான விஷயம்! அது ஒரு கோயில் மாடு என்பது தெரிகிறது.

நான் ரசித்த தமாஷ் தலைப்பு… ‘சிக்குன் குனியாவுக்குக் காரணம் தி.மு.க-வா… அ.தி.மு.க-வா?’

- **கார்த்திக் பத்ரி,** வேளச்சேரி.

சீரியஸ் தலைப்பு... ‘மாணவர்களுக்குப் பிடிக்காதது அறிவுரையா... அற வுரையா?’

- **டி.சகாயராஜ்,** விக்கிரமசிங்கபுரம்.

அனைவருக்கும் சொல்ல வேண்டியது நன்றியா, பாராட்டா என்று யோசித்துக் கொண்டு இருக்கிறேன்.



**‘ஜெ**மினி கேண்டீன்’ என்கிற புத்தகத்தை (சாந்தி பதிப்பகம், 27, அண்ணா சாலை, சென்னை-2) இந்த வாரம் ரசித்துப் படித்தேன். தூக்கம் இழந்த கவிஞர்களின் துக்கம் வழியும் சிக்கலான காதல் கவிதைகளுக்கு மத்தியில், ஒரு மிகப் பெரிய நிறுவனத்தின் தங்க காலத்தில், அதன் கேன்டீனில் பணிபுரிந்த ஏ.என்.எஸ்.மணியன் சரளமான நடையில் எழுதியுள்ள இந்தப் புத்தகம்தான் கவிதைகளின் மூச்சுத் திணறலிலிருந்து என்னைக் காப்பாற்றியது.

ஜெமினி ஸ்டுடியோ வின் ‘சந்திரலேகா’, ‘ஔவையார்’ காலங்களில் நூற்றுக்கணக்கான டெக்னீஷியன்களுக்கு வேளாவேளை சாப்பாடும், டிபன் காபியும் பந்திபந்தியாக அளிக்க வேண்டியிருந்தது. நள்ளிரவில் படப்பிடிப்பு தொடர்ந்தால், மிளகும் நெய்யும் மணக்க மணக்க வெண்பொங்கல், வடை சுடச்சுடத் தயாரிக்க வேண்டும். இப்போது படப்பிடிப்புகளில் கேட்டரிங் கான்ட்ராக்ட் விடுகிறார்கள். மெஷின்தனமாகி விட்டது. ஜெமினி கேன்டீன் சமயங் களில், இந்தச் சேவையில் ஒரு வாத்சல்யமும், பரிவும், தரமும், படப்பிடிப்பின் முக்கிய அங்கம் என்கிற சொரணையும் இருந்தது தெரிகிறது.

ஏ.என்.எஸ்.மணியன் சாப்பாடு விவரங்களுடன் சுவையான பல உப தகவல்களும் தருகிறார். உதாரணம், சந்திரலேகாவில் டிரம் டான்ஸ் ஆட பெண்கள் எண்ணிக்கை போதாமல், தஞ்சாவூர், கும்பகோணம் என்று தேடிச் சென்றிருக்கிறார்கள். அப்படியும் பற்றாக்குறை ஏற்பட்டு, கடைசி யாக ஸ்டுடியோ பையன்களைப் பெண் வேஷம் போட்டுத் தூரத்து முரசுகளில் நடனமாட வைத்திருக் கிறார்கள்.

வாசன் மகளின் கல்யாண விவரங்களைப் படிக்கும்போது, ராணி எலிசபெத் கல்யாணம் ஞாபகம் வருகிறது. அத்தனை விமரிசை! எம்.எஸ், எம்.கே.டி, செம்மங்குடி பாட்டுக் கச்சேரிகள். திருவாவடுதுறை ராஜ ரத்தினம் நாகஸ்வரம். கபாலி கோயிலில் இருந்து ஜெமினி ஹவுஸ் வரை ஜானவாசம். நகரத்தின் மூன்று தனிப்பட்ட இடங்களில் பந்தி பந்தியாக இடைவிடாமல் போட்ட சாப்பாடு. கல்யாணத்தின்போது கவனிக்காமல் விட்டுப்போனவர்களை தினம் அழைத்து 25 நாட்கள் இரவு விருந்து.

கல்யாணத்தின் மெனு விவரங்கள் பிரமிக்கவைக்கின்றன. இன்றும் பெரிய மனிதர்கள் வீட்டுக் கல்யாணங்களின் தாய் மெனு, வாசன் வீட்டுக் கல்யாணத்துக்கு ஜெமினி கேன்டீன் மேனேஜர் டி.இ. மகாதேவையர் போட்ட மெனுதான் என்று தோன்றுகிறது.

கல்யாண தின ராத்திரி சென்னா பட்டுரா புலாவ்தான் நிகழ்காலத்தில் ஏற்பட்டுள்ள மோசமான மாற்றம்.

‘ஐயர்’ என்றும் ‘பாஸ்’ என்றும் சிப்பந்திகளிடம் அறியப்பட்ட முதலாளி வாசனின் பெருந்தன்மையும் விருந்தோம்பலும், சாப்பிட வந்த பல பெரிய மனிதர்களைப் பற்றிய சுவாரஸ்யமான தகவல்களும் நிறைந்த இந்த மாதிரியான புத்தகங்கள் அனுப்பினால், ரவா கேசரியையும் கோதுமை அல்வாவையும் நினைத்து நாக்கைச் சப்புக்கொட்டிக்கொண்டு நிச்சயம் படிப்பேன். காதல் கசியும் ஹைக் கூக்களை அல்ல!

**பி**ரசன்னா ராமசுவாமி, சஞ்சய் சுப்ரமண்யத்தைப் பற்றி ‘யாரார் ஆசைப்பட்டார்’ என்ற டாகுமென்ட்டரி ஒன்றை எடுத் தளித்திருக்கிறார். பொதுவாக, சங்கீத வித்வான்களைப் பற்றிய டாகுமென்ட்டரிகள் இங்கே பிறந்தார், இன்னார் சிஷ்யர், இன்னின்ன கேடயங்கள் வாங்கி னார் என்று சரித்திரப் பாடம் போல் செல்லும். அப்படியில்லாமல், பெரும்பாலும் சஞ்சய்யின் அபார சங்கீதத்தையே நம் காதுகளில் நிரப்பி, அதற்குச் சமஅந்தஸ்தும் அழகும் உள்ள புறக் காட்சிகளைக் காட்டியிருக்கிறார் பிரசன்னா.

எப்போதும் மைக் முன்னால் பாடுவதாகக் காட்டாமல், அவர் கச்சேரிக்குத் தயார் செய்வது, நண்பர்களுடன் பேசுவது, மகன்களுக்கு ‘துப்பறியும் சாம்பு’ படித்துக் காட்டுவது, செம்பொனார் கோயில் வைத்யநாதனைத் தேடிச் சென்று நாகஸ்வர வித்வானிடம் பாடம் கேட்பது (அற்புத மான சுருட்டி), இப்படி கேமரா மற்ற காட்சிகளையும் பாடலுடன் காட்டுகிறது. காம்போதி ராக ஆலாபனைக்கு மழைச் சாரலில், மலைப் பாதையில், காரின் விண்ட் ஷீல்டில் மெள்ள மாறும் காட்சி யைப் பயன்படுத்தியது மெய் சிலிர்க்கவைக்கிறது. கர்னாடக இசையின் பாரம்பரியம் கோயில் களிலும், விழாக்களிலும், சபா மேடைகளிலும் எப்ப டிப் பரமரிக்கப்பட்டு வருகிறது என்பதை பிரசன்னா அழகாக உணர்த்தியிருக் கிறார். சத்யஜித் ரேயின் ‘பாலா’வுக்கு ஈடான இந்த ஆவணப் படம், இவ் வாண்டு நான் பார்த்த சிறந்த படங்களில் ஒன்று!

**உ**லகின் மிகப் பிரபல மான, மிக அதிகம் பயன்படுத் தப்பட்ட ‘ஏ’ ஜோக்கின் பெயர் Aristocrats. இதற்கு ஏகப்பட்ட வடிவங்கள் உண்டு. ஒரு பெரிய சரித்திரமே உண்டு. இதைப் பற்றி 2005-ல் ஒரு திரைப் படமே எடுத்து, சன்டான்ஸ் திரைப்பட விழாவில் காட்டி னார்கள்.

அப்படி என்ன ஜோக் இது என்று ஆவலாக இருக்கிறீர்கள் அல்லவா, அதன் மிக மிக மிக நீர்த்த வடிவத்தை உங்களுக்குச் சொல்கிறேன். இதற்கே என்னை நீங்கள் உதைக்க வரலாம்.

ஒரு ஏஜென்ட்டிடம் வாய்ப்பு கேட்டு ஒரு குடும்பத்தினர் வந்தனர். “எங்களுக்குக் கலையுலகில் நுழைய ஒரு சந்தர்ப்பம் தர வேண்டும்” என்றனர்.

“நீங்கள் என்னவெல்லாம் செய்வீர்கள்?”

“நான், என் மனைவி, என் மகள், மகன், எங்கள் நாய் ஒவ்வொருவராக மேடைக்கு வருவோம்...”

“வந்த பின்..?”

“நான் என் சட்டையைக் கழற்றுவேன்...”

“அப்புறம்..?”

“பாடுவேன்...”

“என் மனைவி வரு வாள்.”

“அவள் என்ன செய் வாள்?”

“முதலில், வளையல்களைக் கழற்றுவாள்...”

(இதற்கு மேல் தொடர் வதைக் கடைசியில் நாய் தோன்றும் வரை சொன்னால் ரசாபாசமாகிவிடும். வசந்த்தே சொல்லத் தயங்குவான்! எல்லா வடிவங்களிலும், இந்த ஜோக்கின் முடிவு ஒன்றே... அரிஸ்டோ கிராட்ஸ் என்னும் பதில்!)

அனைத்தையும் கேட்ட பின், ஏஜென்ட் பெருமுச்சு விட்டார். யோசித்தார் “உங்க குரூப்புக்கு என் னய்யா பேரு?”

“பெரிய மனிதர்கள்! அரிஸ்டோகிராட்ஸ்!”

இதன் முழு வடிவத்தையும், டிக்கன்ஸ் வரை பின் செல்லும் சரித்திரத்தையும் தெரிந்துகொள்ள விரும்பு பவர்கள் Garshon Legman என்பவர் எழுதிய விஸ்தாரமான The Rationale of the Dirty Joke என்ற ஆராய்ச்சி நூலின் இரண்டாம் பாகம், பக்கம் 987-ல் பார்க்கலாம்.

**எ.பி.க!**



என் இனிய நண்பனே
என்னை அறிந்ததாகக் கூறினாய்
எப்படி என்றேன்; ஆத்திரப்பட்டாய்
உன்னிடத்தில் - என்னை சமப்படுத்தி
பார்த்தாய்
பின் பரவாயில்லை புத்திசாலி என்றாய்
அறிவென்றாய், கூடவே அழகென்றாய்
அதை எதற்காகச் சொன்னாய்?
இல்லை
உன்னால் என்னை அறிய முடியவில்லை.

- **றஞ்சனி**
(றஞ்சனி கவிதைகள்)

**எ.பி.பொ!**



**எ**ங்கள் இருவருக்குமே எதுவும் தெரியாது என்றாலும், நான் பரவாயில்லை. அவன் தெரியாமல், தெரிந்ததாகச் சொல்கிறான். நான் தெரியாமல், தெரியவில்லை என்று சொல்கிறேன்.

**- சாக்ரடீஸ்**

# சொல்லித் தர வேண்டாம்!

## எ.பி.பொ!

சிலர் பேனாக்கத்தியால்
திருடுவார்கள்;
சிலர் பேனாவால்!

**- உடி கத்ரி**

**அ**ண்மையில், ஒரு கல்யாண ரிசப்ஷனில் சிறுவர்கள் ஆர்க்கெஸ்ட்ரா நிகழ்ச்சிவைத்தி ருந்தார்கள். முந்தாநாள்தான் பிறந்தது போலத் தோன்றிய ஒரு பெண் குழந்தை மைக்கைப் பிடித்துக்கொண்டு, சுருதி பிசகாமல் ஒரு கையை அடிக்கடி உயர்த்தி, பாடல் வார்த்தைகளின் சரசமும் விரசமும் புரிந்திராமல் பாட, மற்றொரு பாப்பா இடுப்பைச் சொடுக்கி ஆடியதைப் பார்க்கையில் தமாஷாகவும் கவலையாகவும் இருந்தது.





குழந்தைகள் தினத்தில் நாம் நினைவுகொள்ள வேண்டியது இதுதான்... குழந்தைகள் நாம் செய்வதைத்தான் அச்சடித்தாற்போல் செய்வார்கள். நம் சண்டைகளை அவர்களும் போட்டுக்கொள்வார்கள். நாம் திட்டும் வார்த்தைகளை அதே உச்சரிப்பில் அவர்களும் பயன்படுத்துவார்கள். நம் சிகரெட்டை அவர்களும் பிடிப்பார்கள். நம் லிப்ஸ்டிக்கை அவர்களும் தடவிக் கொள்வார்கள். Nature vs. Nurture. பிறப்பா வளர்ப்பா என்னும் விவாதம் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. இன்றைய கணக்கில் 70/30 சொல்கிறார் கள்.

மெரீனாவில் நடந்து செல்லும்போது நான் பார்க்கும் மீனவப் பிள்ளைகளின் பேச்சில் வார்த்தைக்கு வார்த்தை '...தா' இருக்கும். அடிக்கடி துப்புவதும், அவ்வப்போது ஒரு சோனிப் பையனின் தலையைத் தட்டுவதும் எல்லாமே சொல்லித் தராமல் வந்துவிடுகிறது. இதே போல் மேல்தட்டுப் பிள்ளைகள் அந்த 'F...' வார்த்தையைச் சரளமாகப் பயன்படுத்துவதையும், சிகரெட் பிடிப்பதையும், பியர் அடிப்பதையும் கவனிக்கிறேன்.

குழந்தைகளுக்குச் சொல்லித்தரவே வேண்டாம். இயல்பாகவே பெரியவர்களைப் பிரதி எடுப்பார்கள். அதனால், அவர்களுக்கு உங்கள் படிக்கும் பழக் கங்களையும், நற்பண்புகளையும், திறமைகளையும் தாருங்கள். உங்கள் வசைமொழிகளை அல்ல!

என் தந்தை நிறையப் படிப்பார். அதனால் நானும் நிறையப் படிக்கிறேன். என் பிள்ளைகளும் அப்படியே! அப்பாவின் முன்கோபம்..? அது தானாக வந்துவிட்டது.

2006-க்கான இயற்பிய லுக்கான நோபல் பரிசு ஜார்ஜ் ஸ்மூட், ஜான்மேத்தர் என்னும் இரு அமெரிக்கர்களுக்குக் கிடைத்திருக்கிறது. ஹூம்! இந்த வருஷமும் அமெரிக்கர் கள்தானா?

அவர்கள் புதிதாக எதுவும் கண்டுபிடிக்கவில்லை. 'பிக் பாங்' என்னும் பிரபஞ்சத்தின் ஆரம்பக் கணத்தைப் பற்றிய சித்தாந்தத்தை மேலும் ஊர்ஜிதப்படுத்த, 'கோபெ' (COBE-Cosmic Background Explorer) என்னும் பரிசோதனை சாட்டிலைட்டைப் பயன்படுத்தி, ராமலிங்க அடிகள் சொன்னது போல் 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்' பிரபஞ்சத்தில் விரவியிருக்கும் இன்ஃப்ரா ரெட் மற்றும் மைக்ரோ வேவ் அலை வரிசைகளில் லேசான சூட்டை, ஆரம்பக் கண வெடியின் விளைவைத் துல்லியமாக அளந்திருக்கிறார்கள்.

இந்த இளஞ்சூட்டைத் தற்செயலாகக் கண்டுபிடித்ததற்காகத்தான் 1978-க்கான நோபல் பரிசை ஆர்னால்டு

பென்ஸியாஸ், வில்சன் இருவருக்கும் கொடுத்தார்கள். இந்த இளஞ்சூடு எங்கும் ஒரே சீராகப் பரவியிருப்பதாகத் தான் இதுவரை நம்பி வந்தார்கள். இப்போது அது சமச்சீராக இல்லை, அங்கங்கே சிறுசிறு மாற்றங்கள் உள்ளன என்பதை (இதை anisotropy என் கிறார்கள்) ஜார்ஜ், ஜான் இருவரும் அள விட்டிருக்கிறார்கள். இதனையும், பிரபஞ்சத்தில் பருப்பொருள் அங்கங்கே திரண்டு கேலக்ஸிகளாக உருவானதையும் இணைக்க முடிந்ததை அவர்கள் அறிவித்த போது, அரங்கமே கைதட்டியது.



அடுத்து, பிரபஞ்சத்தின் வயதை 13 பில்லியனிலிருந்து 15 பில்லியன் வருஷங்கள் வரை சொல்கிறார்கள் (பில்லியன் என்பது நூறு கோடி). இதை நுட்பமாகக் கணக்கிட்டு, பிறந்த தேதி குறிப்பிடுவார்கள் நம்மூர் ஜோசியர்கள். பிரபஞ்சத்தின் ஜாதகத்தில் எங்கெங்கே தோஷம் இருக்கிறது என்று கண்டுபிடித்துப் பரிகாரம் சொல்லலாம்.

மகாவெடி ஊர்ஜிதமாகி விட்டது. தானாக வெடித்ததா, யாராவது பற்றவைத்தார்களா..? இந்தக் கேள்விதான் மிச்சம் இருக்கிறது!

சயின்டிஃபிக் அமெரிக்கன், சயின்டிஃபிக் மைண்ட் என்னும் காலாண்டிதழை (அறிவியல் மனம்) வெளியிட்டு வருகிறார்கள். அதன் சமீபத்திய இதழில், ஹிரோஷி இஷிகுரோ என்னும் ஜப்பானிய விஞ்ஞானி சிருஷ்டித்த ஒரு ஆண்ட்ராய்டு (மனித பொம்மை) ரோபோ பெண்ணைச் சந்தித்த அனுபவத்தை, எப்ஸ் டைன் என்ற அமெரிக்கச் செயற்கை அறிவு நிபுணர் வர்ணித் திருக்கிறார்.

உலகெங்கிலும் அருங்காட்சியகங்களுக்கு டைனோசர்கள் தயாரித்து விற்கும் ஒரு டோக் கியோ நிறுவனத்துடன் ஒத்துழைத்து, முதல் ஆண்ட்ராய்டைத் தன் நான்கு வயது மகள் போலச் சிருஷ்டித்தார் இஷிகுரோ. எப்ஸ்டைன் சந்தித்தது அவரது நான்காவது ஆண்ட்ராய்டு.

ஜப்பானில் பிரசித்தமாக இருந்த தொலைக் காட்சி செய்தி அறிவிப்புப் பெண்ணின் ரூபத்தில் செய்திருந்தார். இந்தப் பெண் கண்சிமிட்டுகிறாள்; பேசுகிறாள்; சத்தம் வரும் திசை நோக்கித் திரும்புகிறாள்; உள் ளத்தைக் கொள்ளை கொள்ளும்படி புன்னகை செய்கிறாள். சிலிக்கான் சருமம், நிஜமான கேசம், செவ்வரி படர்ந்த கண்கள். விலை அதிக மில்லை... சுமார் ஒன்றரைக் கோடி மட்டுமே!

“இன்னும் 30 ஆண்டுகளில் மானுட பொம்மைகளுக்கும் மனிதர்களுக்கும் வித்தியாசமே கண்டுபிடிக்க முடியாது. மனிதர்களுக்குச் சமமாகப் பேசுகிற ‘ட்யுரிங் டெஸ்ட்’டில்கூட அவை தேறி விடலாம்” என்கிறார் இஷிகுரோ.



ஜார்ஜ் ஸ்மூட் ஜான் மேக்கர்

இருந்தும், அவற்றை மணந்துகொண்டு குடித்தனம் நடத்த முடியாது!

இரண்டு வாரங்களுக்கு முன் பட்டி மன்றத்தைப் பற்றி எழுதியதைத் திட்டி ஒருவர் எழுதியிருந்தார். ‘என்ன திமிர் உனக்கு? உன் சாதிப் புத்தியைக் காட்டுகிறாயே!’ என்று அழகான கையெழுத் தில், மோசமாகத் திட்டி எழுதியிருந்தார்.

இவ்வாறு திட்டுவதால் கொச்சைப்படுபவர் திட்டுபவரா, திட்டப்படுபவரா என்று பட்டி மன்றம் வைக்கலாம். அல்லது, தமிழகத்தில் மாற்றுக் கருத்துகளுக்கான சகிப்புத் தன்மை குறைந்து வருகிறதா என்ற வழக்காடு மன்றம் வைக்கலாம்.

சிறந்த பட்டிமன்றப் பேச்சாளரான பேராசிரியர் கு.ஞானசம்பந்தம் அவர்களைச் சந்தித்தபோது, “நீங்கள் எழுதியது பெரும்பாலும் உண்மைதான். ஆனால், சில நல்ல தலைப்புகளையும் பட்டிமன்றத்தில் எடுத்துக்கொள்கிறோம்” என்றார். உதாரணம்... லஞ்சத்துக்குக் காரணம் தருபவரா? பெறுபவரா?; புத்தகங்களுக்குத் தேவை படைப்பாளியா? படிப்பாளியா?

வழக்கம் போல், போகிறபோக்கில் ஒரு ஜோக் சொல்லிவிட்டுப் புறப்பட்டார் பேராசிரியர்.



**ஆசிரியர்:** என்னப்பா, இத்தனை தலைமுடி வளர்த்திருக்கியே... ஏதாவது வேண்டுதலா?

**மாணவன்:** நீங்கதானே சார் எல்லாரும் அப்துல்கலாம் மாதிரி வரணும்னு சொன்னீங்க!

### எ.பி.க!



**ஒ**ரே மாதிரி வகிடு எடுத்து
ஒரே மாதிரி ரிப்பன் கட்டிக்கொண்டு
வரிசை வரிசையாய்
வரிசை வரிசையாய்
போகும்
யூனிஃபார்ம் பெண்களைப்
பார்த்தபோது நினைத்தேன்
இத்தனை பேருக்குத் தலைவாரிவிட்டவளுக்கு
எத்தனை கைவலித்திருக்கும் என்று!

- **அகி முகுந்த் நாகராஜன்** (ஒரே அம்மா)

காஷ்மீர் முல்லைப் பெரியாறு கிரிக்கெட்

**‘மெ**ய்ப்பொருள் காண்பதறிவு’ என்கிறார் வள்ளுவர். இரண்டு விஷயங்களின் மெய்ப்பொருளை இந்த வாரம் பார்க்கலாம். காஷ்மீர் மற்றும் முல்லைப் பெரியாறு.

காஷ்மீர் பற்றி நான் சில வாரங்களுக்கு முன் எழுதியதற்குக் கண்டனம் தெரிவித்து, சில கடிதங்கள் எனக்கு வந்தன. நான் ‘political will’ தேவை என்று சொன்னது சிலருக்குப் புரியவில்லை.

ப்ராஜெக்ட் மேனேஜ்மென்ட்டில் ‘stop loss’ என்று ஒரு நிலைமை வரும். ஏற்கெனவே தாமதமாகிவிட்ட ஒரு காரியத்தை மேலும் தொடர்ந்து முடிப்பதால் நஷ்டம் பல மடங்கு அதிகரிக்கும். அந்த மாதிரி சமயங்களில் அந்தக் காரியத்தைக் கைவிடுவதுதான் உத்தமம் என்று தீர்மானிக்க வேண்டி வரும். காஷ்மீரில் அந்த நிலைமைக் குத்தான் வந்திருக்கிறோம். தீர்வு ஏதும் தென்படவில்லை. இதில் நாம் என்ன சாதிக்க விரும்புகிறோம் என்பதுகூடத் தெளிவாக இல்லை.








தமிழ்நாட்டிலிருந்தும் மற்ற மாநிலங்களிலிருந்தும் செல்லும் சி.ஆர்.பி.எஃப். ஜவான்களான கந்தசாமியும், வடிவேலுவும், கரம்சந்தும், பரஸ்நாத்தும், ஹீராவும், தினம் ஸ்ரீநகர் தெருக்களில் ரத்தம் சிந்துகிறார்கள்.

காஷ்மீரில் ராணுவத்தையும் போலீஸையும் வைத்து தேசபக்தியைப் புகட்ட முடியாது என்பது நம் தலைவர் களுக்குத் தெரியவில்லை. காஷ்மீரில் ஒரு நாளைக்கு ராணுவத்துக்கும் போலீஸுக்கும் ஐந்து கோடி ரூபாய் செலவாகிறது. காஷ்மீரிகள் இருபது பேருக்கு ஒரு ஜவான் என்ற ரீதியில் மூன்று லட்சம் வீரர்கள் அங்கே நிறுத்திவைக்கப்பட்டு இருக்கிறார்கள். அமெரிக்கா... வியட்நாமிலும் இராக்கிலும், ரஷ்யா... ஆப்கானிஸ்தானிலும் மாட்டிக்கொண்டது போன்ற ஒரு நிலைமைதான் இது என்பதை நம்ப மறுக்கிறோம்.

‘A debilitating war costing millions of dollars and thousands of innocent lives with no coherent policy to control it, and little chance of victory’ என மில்லியன்கள் கணக்கில் டாலர் செலவுசெய்து, ஆயிரக்கணக்கில் அப்பாவி உயிர்களை இழந்து, கோவையான அரசியல் அணுகுமுறை இல்லாமல் வெற்றி வாய்ப்பு இல்லாது பலவீனப்படுத்தும் போர் இது என்று மூரும், ஆண்டரசனும் 1993-ல் சொன்னது இன்றும் மாறவில்லை. இது ‘stop loss’ நிலையா... நீங்களே தீர்மானியுங்கள்!

அடுத்தது, சென்ற வாரங்களில் சூடாக விவாதிக்கப்பட்ட முல்லைப் பெரியாறு. நாம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டிய விஷயங்கள் இவை. கேரளத்தில் உற்பத்தியாகி, கேரளத்தில் நடந்து, அரபிக் கடலில் கலந்து போய்ச் சேரும் 41 நதிகளில் மூன்றாவது பெரிய நதி இது. அணை இருப்பது கேரள மாநிலத்தில். அதன் மதகுகளைத் திறந்து மூடுவது தமிழக பி.டபுள்யு.டி.

அணையின் நீர்ப் பிடிப்புப் பகுதியிலிருந்து நான்கு பென்ஸ்டாக் குழாய்கள் அமைத்து, நீரை கிழக்காகத் திருப்பி ஒரு கால்வாய் மூலம் மதுரை, தேனி, சிவகங்கை, ராமநாதபுரம் மாவட்டங் களின் மழை மறைவுப் பிரதேசத்தில் விவசாயத்துக்காக 80,000 ஹெக்டேர் களுக்கு நீர் பாய்ச்ச, வெள்ளைக்காரன் காலத்தில் 111 வருஷங்களுக்கு முன் சென்னை ராஜதானிக்கும் திருவாங்கூர் மகாராஜாவுக்கும் 40,000 ரூபாய் கொடுத்து ஏற்படுத்திய 999 வருஷக் குத்தகை. ராஜா ஏமாந்திருக்கிறார் என்கி றார்கள் தற்கால மலையாளிகள்.

சுதந்திரத்துக்குப் பின் 1959-ல் நாம் ஒரு பவர் ஸ்டேஷனும் அமைத்தோம். தொடர்ந்து இந்த ஒப்பந்தம் 1975-ல் மறுபரிசீலனை செய்யப்பட்டது. அப்போது இரு மாநிலங்களிலும் சுமூக உறவுள்ள அரசு இருந்ததால், ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்வதில் சிக்கல் இருக்கவில்லை.

வறண்டிருந்த தென்மாவட்டங்கள் பலவற்றுக்கு சுபிட்சம் கொண்டுவந்த இந்த புத்திசாலித்தனமான திட்டம், தங்கள் மாநிலத்துக்குப் பாரபட்சமாக இருப்பதை உணர்ந்து, கேரள அரசு ஒப்பந்தத்தை நிராகரிக்கத் தீர்மானித்தது. 1980-ல் எம்.ஜி.ஆர். ஆட்சியின்போது, அணையில் நீரின் உயரம் 142 இருந்தது. சில இடங்களில் நீர்க்கசிவு காணப்பட்டதால் (அணை பழங்காலத்தது. உலகிலேயே மிக மூத்த மேசன்ரி அணை) 136 அடிக்கு ரிப்பேர் செய்வதற்காகக் குறைக்கப்பட்டது. பின்னர், நிபுணர் குழு ரிப்பேர் செய்து, இந்த அணை பத்திரமானது என்று சொன்ன பின், 1990-ல் சுப்ரீம் கோர்ட் இதன் நீர்மட்டத்தைப் பழையபடி 142-க்கு அதிகரிக்கலாம் என்று தீர்ப்பளித்தது. கேரள அரசு இதை மறுக்க வேறு வாதங்கள் கிடைக்காததால் சுற்றுச்சூழல் பாதிப்பு, ரிக்டர் அளவு 6-க்கு மேல் பூகம்பம் வந்தால் அணை தாங்காது போன்ற மெப்புக் காரணங்களை எழுப்ப... அவர்கள் சட்டசபையில் சட்டம் நிறைவேற்றி தடை போட்டு இருக்கிறது.

உண்மையான காரணம் அதல்ல... நதியோர நகர மயமாக்கலும் அதனால் வெட்டப்பட்ட மரங்களும், அதனால் மழை குறைந்த மைக்ரோ எக்கனாமிக் மாறுதல்களும்தான் முக்கியக் காரணம். தண்ணீர் தமிழ்நாட்டுக்குத் திசை திருப்பப்படுவதால் 1960-ல் அவர்கள் 50 கிலோமீட்டர் கீழே கட்டிய இடுக்கி ஹைட்ரோ எலெக்ட்ரிக் திட்டத்துக்குப் போதுமான தண்ணீர் கிடைக்கவில்லை (இந்த வருஷம் எல்லோருக்கும் ஏராளமாகவே கிடைத்தது. பருவ மழை தவறிப் போனால்தான் பிரச்னை). இதுதான் இதன் மெய்ப்பொருள்.

இதில் தமிழ்நாடு, சுப்ரீம்கோர்ட் தீர்ப்பை வலுக்கட்டாயமாக நிறைவேற்றினால், கேரளத்துடன் உறவு கெடும். வன்முறை வெடிக்கும். இந்நிலையில் இரு மாநில அரசும் பேசி 136-க்கும் 142-க்கும் இடையே ஏதாவது ஒரு நீர்மட்டம் கிடைக்கிறதா என்று தற்காலிகமாக நிர்ணயிக்கலாம். காரணம், நதி அவர்களது. அணை அவர்கள் மாநிலத்தில் உள்ளது. வயசான அணையின் ஸ்லுஸ் கேட்டுகளும் நான்கு குழாய்களும் நம்மு டையது. அந்தக் குழாய்களில் இரண்டு பழுது. அவர்கள் அணையின் ஏரியைச் சுற்றிலும் நதிக் கரை யிலும் எக்கச்சக்கத்துக்கு நகரமய மாக்கிவிட்டார்கள். அவை முழுகலாம்.

25 வருஷமாக நீர்மட்டத்தை உயர்த்தாததால் இதுவரை தமிழ்நாட்டில் கணக்கிடப்பட்ட விவசாய நஷ்டம் 40,000 கோடி! அரிசி தருகிறோம், நீர்மட்டத்தை உயர்த்த அனுமதியுங்கள், உங்கள் பக்கம் வெள்ளம் வராது. இடுக்கிப் பிடிப்புக்குக் குறைந்த பட்சம் நீர் தருகிறோம் அல்லது மின்சாரமாகத் தருகிறோம், உத்தரவாதம் என்று பேப்பர் சத்தியங்கள் ஏதாவது செய்து, ஒரொரு அடியாக உயர்த்த வேண்டும். முப்பத்தொன்பதோ நாற்பதோ ஏதாவது கிடைக்கும். காரணம், நாம் இதில் இருப்பது கொஞ்சம் 'sticky wicket'. அரசியல் கட்சிகள் இரண்டு பேருமே இதில் மெத்தனமாக இருந்ததால் வந்த விளைவு. சுப்பிரமணியம் சுவாமிதான் சண்டை போட்டிருக்கிறார்.



நன்றி: சுரேந்தர், இந்து

**தெ**ன் ஆப்பிரிக்காவில் இந்திய கிரிக்கெட் அணியின் தோல்விகளைக் கண்டு கண் கலங்குகிறேன். என்ன ஆச்சு நம் நீலப் படைக்கு?

யோசித்துப் பார்க்கிறேன். ஒரு காரணம் தான் தெரிகிறது. கிரிக்கெட் ஆட வேண்டிய அவசியமே அற்றுப்போய் டக் அடித்தாலும் விளம்பரங்களில் எட்டிலிருந்து பத்து கோடி வரை வருமானம் கிடைப்பதே காரணம்.

விளம்பர வருமானம் உத்தரவாதமாக இருக்கும்போது ஆடித்தான் ஆக வேண்டுமா என்ற எக்ஸிஸ்டென்ஷியல் கேள்வி எழுந்து அதன் அவசியம் மழுங்கிப் போய்விடும்.

எத்தனை நாள்தான் ஃபார்முக்கு வரப் போகிறார்கள் என்று காத்திருப்பது? என்னை ஈ மொய்க்கிறது. என்னதான் தீர்வு? பார்க்க கார்ட்டூன்.

எ.பி.பொ!



ஒரு பெரிய மனிதன்
யார் மனதையும்
புண்படுத்த மாட்டான்.
காரணமில்லாமல்!

**-ஆஸ்கார் வைல்டு**

எ.பி.ஹை!



*மேகங்கள் தோன்றி*
*நிலவையே பார்ப்பதிலிருந்து*
*ஓய்வு தருகின்றன.*

**-பாஷோ மாட்ஸுவோ** (1644-1694)

**த**ன் வீட்டு வாசலில் வாழை மரம் இருந்ததால் பாஷோ என்ற புனைபெயரில் எழுதினார். ஹைக்கூவின் தந்தை என்று சொல்லப்படுபவர். இவருக்கு 2,000 சீடர்கள் இருந்தனராம்.

பழைய குளத்தில் தவளை குதிக்கும் சப்தம் பற்றிய உலகப் பிரசித்தி பெற்ற ஹைக்கூ இவருடையது. பாஷோ 1694-ல் இறக்கும் வரை ஹைக்கூ எழுதினார். அவரது கடைசிக் கவிதை இது...

*'யாத்திரைக்குப் பின்*
*நோய் வந்து*
*கனவுகளில்*
*காய்ந்த நிலத்தில்*
*காட்டுத்தனமாக ஓடுகிறேன்!'*

என்று எழுதிவிட்டு இறந்து போனார்.

சுஜாதா

**வி**ஞ்ஞானக் கதைப் போட்டியில் 15 வயதிலிருந்து (மு.மாணிக்கத்தாய்) 70 வயது வரை (ஆர்.வசந்தா) பலர் உற்சாகமாகக் கலந்துகொண்டார்கள். அனைத்தையும் படித்துப் பார்த்தோம். அவற்றை நான்கு வகைகளில் பிரிக்க முடிந்தது.

1. மனிதனை மிஞ்சிக் காரியம் செய்யும் ரோபோக்கள்;

2. வேற்றுக்கிரகவாசிகள் தொடர்புகொள்வது; அல்லது, மனிதன் வேற்றுக் கிரகம் செல்வது;

3. கால யந்திரக் குழப்பங்கள்;

4. எதிர்காலத்தில் விபரீத மாறுதல்கள்; அல்லது, மாறாத விஷயங்கள் (மெகா சீரியல்கள், நடிகைகளின் தொப்புள்

போல);

இவற்றில் பின்வரும் 11 கதைகளை தட்டிக்கொட்டி ஒப்பேற்ற முடிந்தது.

கிம் பீக்






**வி**ஜய் டி.வி-யில் 'யார் மனசுல யாரு?' என்கிற மலையாளத் தமிழ் நிகழ்ச்சியை (உயிரோட இருக்கா?) அவ்வப்போது பார்க்கிறேன். அதை நடத்தும் ப்ரதீப் போல நல்ல ஞாபக சக்தி உள்ளவர்களை சாவன்ட் (savant) என்று வகைப்படுத்துவார்கள். 'சாவன்ட்' என்பது அறிஞர் என்ற பொருள்கொண்ட ஒரு பிரெஞ்ச் வார்த்தையின் மறூஉ.

1887-ல் ஜே.லாங்டன் டவுன் (J. langdon Down) என்பவர் முதன்முதலாக இந்த 'சாவன்ட் சின்ட்ரோம்' என்னும் பிரமிப்பூட்டும் அசாதாரண ஞாபகசக்தியைத் தன் பேஷன்ட் ஒருவரிடம் கண்டு வர்ணித்தார். அந்த ஆசாமி, எட்வர்ட் கிப்பன் எழுதிய The decline and fall of the Roman Empire என்னும் தலகாணி நூலை வரிவிடாமல் ஒப்பிப்பாராம். அதிலிருந்து 'சாவன்ட்' என்ற பெயர் சங்கீதம், கலை, கணிதம் போன்ற ஒரு துறை சார்ந்த அபார ஞாபக சக்தி உள்ளவர்களைப் பாகுபடுத்தப் பயன்பட்டது. சகுந்தலா தேவி உங்களுக்கு ஞாபகம் வரலாம்.

54 வயது கிம் பீக் (Kim peek) என்பவரது ஞாபக சக்திஎல்லாத் துறைகளையும் கடந் தது. நண்பர்கள் இவரை 'கிம்ப்யூட்டர்' என்று அழைக்கிறார்கள். இன்டர்நெட்டில் தேடி யந்திரத்தைவிட வேகமாக அவர் தன் நினைவறைகளிலிருந்துதக வலைத் தேடி எடுத்துத் தருகிறாராம். படித்துக் காட்டப்படும் புத்தகங்களை உடனே மனப்பாடம் செய்துவிடும் திறமை, அவருக்கு ஒன்றரை வயதிலிருந்தே இருந்ததாம். இதுவரை 9,000 புத்தகங்களை மனப்பாடமாக ஒப்பிப்பாராம்! எட்டிலிருந்து பத்து செகண்டுக்கு ஒரு பக்கம் என்று படித்து முடித்துவிட்டு, அலமாரியில் அந்தப் புத்தகத்தைத் தலைகீழாகக் கவிழ்த்து வைத்துவிடுவாராம்.

பீக்கின் ஞாபகம் உலக சரித்திரம், விளையாட்டு, திரைப்படங்கள், புவியியல், விண்வெளி, நடிக - நடிகையர் பெயர்கள்,பைபிள் எனப் பலவாறாகப் பரந்து விரிந்துள்ளதாம். குறிப்பாக, அவரது மேற்கத்திய சங்கீத ஞாபகம் அதிநுட்பமானது. சிறு வயதில் ஒருமுறை முணுமுணுத்த இடமெல்லாம் நினைவிருக்கிறதாம். இத்தனைக்கும் அவர் மற்ற விஷயங்களில் மந்தம்! நடை சரியில்லை; சரியாக பட்டன் போடக்கூடத் தெரியாது; எல்லா விஷயங்களிலும் ரொம்ப நிதானம்! 'டஸ்டின் ஹாப்மன்' நடித்த 'மழைமனிதன்' (Rain man) என்னும் திரைப்படம் இவரைப் பார்த்து எடுத்தது என்பார்கள்.

இவரது மூளையை ஆராய்ச்சியாளர்கள் விட்டு வைப்பார்களா? சி.டி. ஸ்கேன், பெட்ஸ்கேன் மூலம் அலசிப் பார்த்ததில், நமக்கும் அவருக்கும் ஒரே ஒரு வேறுபாடுதான் தெரிந்ததாம்.



**மனைவி:** "இந்தப் புடவை எப்ப வாங்கினது, சொல்லுங்க?"

**கணவன்:** "உங்களை எங்கேயோ பார்த்திருக்கேனே... முதல்ல நீங்க யாருன்னு சொல்லுங்க?"

மூளையின் இடப்பக்க, வலப்பக்க சுளைகளை இணைக்கும் ‘கார்ப்ப கலோசம்’ என்பது இவருக்கு இல்லையாம். இதுதான் ஞாபக சக்தி அதிகமாக இருப்பதன் காரணமா அல்லது விளைவா என்று இன்னும் அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. வயசாக வயசாக இவரது நினைவாற்றல் அதிகரித்துக்கொண்டே வருகிறதாம். கடன் வாங்கியது, மனைவியிடம் பொய் சொன்னது, இந்தியா கிரிக்கெட்டில்சொல்லிச் சொல்லி உதை வாங்கியது எதையுமே மறக்க முடியவில்லை என்றால்... கொடுமைதான்!

### கடவுளோடு பேச்சுவார்த்தை!



**ப**ட்டனைத் தட்டினார் கடவுள். ‘இறைவா! யாருக்கு அருள வேண்டும்? யாரை சம்ஹாரம் செய்ய வேண்டும்?’ - கேட்டது கம்ப்யூட்டர்.

- **ஆர்.கந்தசாமி, தேவகோட்டை.**

### விளையாட்டு!



**அ**வனுக்கு அந்த ரோபோவுடன் விளையாடுவது ரொம்பப் பிடித்திருந்தது. விரும்பும் மனிதராக அவனை அது மாற்றிவிடும். ஒரே ஒரு நிபந்தனை... அந்த நபர் இறந்திருக்க வேண்டும்.

சிவாஜி, நேரு, சர்ச்சில், ஐன்ஸ்டைன், அன்னை தெரசா... எல்லாம் பார்த்த பின், கடைசியில் அலுத்து, ‘போதும்! என்னைப் பழையபடி மாற்றிவிடு!’ என்றான்.

சிறிது நேரத்தில் அந்த இரண்டு ரோபோக்களும் அங்கிருந்து சென்றன.

- **விஸ்வநாத் சங்கர், ஃப்ளாரிடா, அமெரிக்கா.**

### இது கொஞ்சம் ஓவர்!



**‘அ**ருமைக் கணவனே! எனக்குப் பதிலாக ரோபோ உன் எல்லாத் தேவைகளையும் நிறை வேற்றுகிறது; சரிதான். ஆனால்,இரவு படுக்கவும் பயன்படுத்துவது வேதனையாக இருக்கிறது!’

- **ஆர்.வசந்தா** (வயது 70), சென்னை -28.

## முடிவா, ஆரம்பமா?



பென்ட்டகனில் ராணுவத் தலைமை அதிகாரி பொத்தானை அழுத்த, மூன்றாம் உலகப் போர் முடிவானது!

- **ஆ.தேவராஜன்,** ஊட்டி.

## டெர்மினேட்டர்!



**“அ**ப்பா! செடி, கொடியெல்லாம் விதையிலிருந்தா வருது? மிஸ் சொன்னாங்களே..?”

“வந்துதும்மா ஒரு காலத்துல..!”

‘டெர்மினேட்டர் ஜீன்கள் செய்த நாசத்தை இவளுக்கு எப்படி விளக்குவேன்’ என்று யோசித்தார் அப்பா.

- **டி.சபேசன்,** மயிலாடுதுறை.

## பிணவறையில் ஓர் உரையாடல்!



**“இ**றந்தவர் யாருப்பா?” என்றார் மருத்துவர்.

“நான்தாங்க!” என்றார் வந்தவர்.

- **மு.மாணிக்கத்தாய்** (வயது 15), சென்னை- 61.

## க்ளோனிங் கோளாறு!



**மூ**ட்டையைப் பிரித்து, கவர்ச்சி நடிகையை வெளியே எடுத்தார்கள்.

“பிரச்னை பண்ணாம வந்தாளா?”

“இல்லை பாஸ், படு சாது!”

“டேய்... என்னடா இது, அவளை மாதிரியே இருக்கிற ஒரு ரோபோவைக் கடத்திட்டு வந்திருக்கீங்களேடா!”

“எ... எப்படி பாஸ் சொல்றீங்க?”

“தொப்புளே இல்லையேடா!”

- **எம்.ஆர்.மூர்த்தி,** மும்பை-82.

## கடைசி நாள்!



**மா**லை அணிவித்து வழியனுப்பினர்.

வெளியே, ‘முதியோர் வாழ்வு முடிக்கும் வாகனம்’ காத்திருந்தது.

- **ஆர்.சேதுராமன்,** சென்னை-21.

## முடியவில்லை!



**“எ**ன்ன, கதையைப் பாதியில நிறுத்திட்டே?”

“பேட்டரி வீக்” என்றது ரோபோ.

- **சி.ஆர்.நாகராஜன்,** பொள்ளாச்சி.

## ஆராய்ச்சி முடிவு!



**“அ**டடே! இங்கே பார்த்தாயா... இவனுக்குக் கண், காது, மூக்கு, வாய், கை, கால் எல்லாமே இடம் மாறியிருக்கின்றன. இவன் பூமியைச் சேர்ந்தவன்!”

- **நரேஷ்,** சென்னை-15.

## வாரிசுகள்!



“அந்தக் கிரகத்தில்தான் ஒரு காலத்தில் நம்ம தாத்தா, பாட்டிங்கள்லாம் இருந்தாங்களாம்!” என விண்ணில் சுட்டிக் காட்டினான் அந்தச் சிறுவன்.

“பேரு?”

“பூமியோ என்னவோ சொல்றாங்க!”

- **பி.ராஜி,** சென்னை-80.

**எ.பி.பொ!**

**ஒ**ரு முட்டாளையும் அவனது பணத்தையும் உடனே கண்டுபிடிக்க முடியும்!

- **கின் ஹபார்டு**

**எ.பி.க!**

பத்து வருஷமாச்சு
வயித்துல இன்னும்
ஒரு புழு பூச்சிக்கு
வழி இல்லைன்னு
மருமகளை வெளித்தள்ளும்
அம்மாவே -
என் மேல்
எவ்வளவு நம்பிக்கை உனக்கு!

- **ப.சுப்பிரமணி**
‘முகம் தேடும் முகங்கள்’
(தொகுப்பு: வலம்புரி லேனா)

**வ**ழக்கம் போல, இந்த வருஷ சுஜாதா அவார்டுகளின் பட்டியலில் முதல் பாதி இந்த வாரம்..!

## தொலைக்காட்சி:

அர்ச்சனா



சிறந்த தொலைக் காட்சி நிகழ்ச்சி: ஜெயா டி.வி. லட்சுமியின் 'அச்சமில்லை... அச்ச மில்லை'. (மதுரை சித்திரைத் திருவிழாவில், ஆறு வயதில் காணாமல் போய், குஜராத்துக்குக் கடத்தப்பட்டு, அங்கே திருடக் கற்றுக் கொடுக்கப்பட்டு, தப்பித்து வந்து, கருணாலயத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டு, எட்டு வருஷம் கழித்து, தொலைக் காட்சி நிகழ்ச்சியில் பார்த்த பெற்றோர் களுடன் சரவணனைச் சேர்த்துவைத்த உள்ளம் உருக்கிய நிகழ்ச்சி).

சிறந்த பேட்டிகள்: காபி வித் அனு (விஜய் டி.வி.) - சிவமணி, மாண்டலின் ஸ்ரீனிவாஸ் இருவருடனும் பேட்டி; மற்றும், சங்கீத வித்வான்களுடன் அனு ராதாவின் பேட்டிகள் (பொதிகை). குறிப்பாக, டி.கே. பட்டம்மாளுடன்!




தொலைக்காட்சியில் சிறந்த அறிவியல்: கியான் தர்ஷன்.

சிறந்த ஆலய தரிசன வர்ணனை: சுகிசிவம் - நவக்கிரகத் தலங்கள் (பொதிகை).

சிறுவர் தொலைக் காட்சி: போகோ.

சிறந்த நடிகர்: வேணு அரவிந்த் - 'செல்வி' (ப்ராம்ப்டிங்குக்காகக் காத்திராத சமயங்களில்).

மாண்டலின் ஸ்ரீனிவாஸ்





சிவமணி

சிறந்த நகைச்சுவைத் தொகுப்பு: சிட்டிபாபு-அர்ச்சனா காமெடி டைம் (சன் டி.வி.) காமெடியுடன் 'உள்ளே - வெளியே' என்று கொஞ்சம் பொது அறிவும் தந்ததற்காக!

சிறந்த கவனக் கலைப்பு: மந்த்ரா பேடி - செட் மேக்ஸ் (கிரிக்கெட் இடைவேளை களில் ரவிக்கையைத் தவிர, விமர்சனத்தை யார் கவனித்தார்கள்?).

சிறந்த நகைக் காட்சி: 'தங்கவேட்டை' கனிஹா (சன் டி.வி.)

புடவை ஜாக்கெட்: குஷ்பு ஜாக்பாட் (ஜெயா).

பேச்சு வெள்ளம்: 'நீயா - நானா?' (விஜய் டி.வி.)

சிறந்த ரேடியோ

எஃப்.எம்.கோல்டு, ரெயின்போ (கர்னாடக சங்கீதம், அறிவியல், ஆரோக்கியக் குறிப்பு களையும் சினிமா பாட்டுகளுடன் சேர்த் துக் கொடுக்கும் பிடிவாதத்துக்குப் பாராட்டாக, மற்ற அரை டஜன் எஃப்.எம். சேனல்கள் எதுவும் ஒன்றோடொன்று வேறு படாமல், சளைக் காமல்... 'இச்சுத்தா... இச்சுத்தா', 'கல்யாணம்தான் கட்டிக் கிட்டு...' பாடல்களைத் தந்துகொண்டு இருந் தாலும் ரேடியோ மிர்ச்சி கேட்க முடி கிறது).



தயாநிதி மாறன்

## அரசியல்

சிறந்த புதுவரவு: விஜயகாந்த்.

சிறந்த பேச்சாளர்: வைகோ.

சிறந்த தேர்தல் தந்திரம்: கலைஞரின் கலர் டி.வி, கையளவு நிலம்.

சிறந்த தீர்மானமின்மை: சரத்குமார் (இப்போது எ.மு.க?).

சிறந்த புள்ளி விவரங்கள்:

ஜெயலலிதா.

சிறந்த செயற்கைப் பேட்டிகள்: ரபி பெர்னார்ட் (ஜெயா).

சிறந்த 'தமிழ் நாட்டு' அமைச்சர்: தயாநிதி மாறன்.

சிறந்த மத்திய அமைச்சர்கள்: லாலு பிரசாத், ப.சிதம்பரம்.

சிறந்த மாநிலம்: உத்ராஞ்சல்.

சிறந்த 'புலிவருது': பிரகாஷ்காரத் (சி.பி.எம்.)



கருணாநிதி



ஜெயலலிதா



விஜயகாந்த்



ரபி பெர்னார்ட்



குஷ்பு



சரத்குமார்

## விளம்பரம்

சிறந்த நேரடி விளம்பரம்: சரவணா செல்வரத்தினம் தங்க நகை - 'சட்டுபுட்டுனு பழசை மாத்துங்க.' மற்றும், ஆரெம்.கேவி புடவை.

சிறந்த மறைமுக விளம்பரம்: 'வெடா' ஆங்கில வகுப்பு (ஆங்கிலப் பாட்டு பாடிக்

கொண்டே வீடு பெருக்கும் வேலைக்காரி).

சிறந்த விளம்பர நகைச்சுவை: எம்.டி.ஆர். குலாப்ஜாமூன் (எத்தனை பேர் ஓடினாங்க? ரெண்டு).

மிகைத் திலகம் அவார்டு: ப்ளூ ஸ்டார் (ஒரே அறையில் எஸ்கிமோ, ஒட்டகம்).

திண்பண்டம்

சிறந்த பலகாரம்: முருகன் இட்லி.

சிறந்த இனிப்பு: முந்திரிப் பருப்பு கேக், ஸ்ரீ மிட்டாய்.

டயாபடீஸ்காரர்களுக்குச் சிறந்த இனிப்பு: டிஸைர் (dezire), சுந்தர் கெமிக் கல்ஸ்.

காரமில்லாத சாப்பாடு: மாரீஸ் ஓட்டல்.

காபி: சரவணபவன்.

**பிற..**

தமிழர்கள் இந்த ஆண்டில் மிக அதிகம் பயன்படுத்திய சொல்: சூப்பர்!

சிறந்த 'மேக் ஓவர்': ரஜினிகாந்த் 'சிவாஜி.'

சிறந்த நகைச் சுவையாளர்: தமிழக மாநிலத் தேர்தல் அதி காரி சந்திரசேகர்.

சிறந்த சாதனம்: ஆப்பிள் ஐபாட்.

சிறந்த டெக்னாலஜி: தமிழ் எஸ்.எம்.எஸ். ஏர்செல் - முத்து நெடுமாறன்.

மிக அதிகம் அனுப்பப்பட்ட எஸ்.எம்.எஸ்: engagement ring; wedding ring; suffering!




சினிமா, இலக்கியம் போன்ற மற்ற துறைகள் அடுத்த வாரம்.

### எ.பி.பொ!

**'வா**ழ்த்துக்கள்! உனக்குள் இந்தத் திறமை இருந்தது எனக்கு அப்போதே தெரியும்!' - டோரத்தி பார்க்கர் தன் சினேகிதிக்குக் குழந்தை பிறந்தபோது அனுப்பிய செய்தி.

**எ.பி.க!**

உளன் எனில் உளன் அவன் உருவம்
இவ்வ்ருவுகள் உளன் ஆலன் எஜின்ல் அவன்

(இருக்கிறான் என்றால் உருவமுள்ளவன்; இல்லையென்றால் உருவமற்றவன்.) - நம்மாழ்வார்

# சுஜாதா அவார்ட்ஸ் 2006 பார்ட்-II

## சினிமா

**சிறந்த நடிகர்:** சூர்யா (கஜினி).

**சிறந்த நடிகை:** அசின் (கஜினி).

**சிறந்த நகைச்சுவை நடிகர்:** வடிவேலு (இம்சை அரசன் 23-ம் புலிகேசி).



சூர்யா



அசின்

**சிறந்த கருத்துக்களை நகைச்சுவையுடன் கலந்தது:** விவேக் (பல படங்களில்).

**சிறந்த டைரக்டர்:** மிஷ்கின் (சித்திரம் பேசுதடி).

**சிறந்த ஒளிப்பதிவாளர்:** ரவிவர்மன் (வேட்டையாடு விளையாடு).

**சிறந்த பாடலாசிரியர்:** நா.முத்துக்குமார் (வெயில்).

**சிறந்த இசையமைப்பாளர்:** யுவன்ஷங்கர் ராஜா (வல்லவன்).

**சிறந்த பாடகர்:** கார்த்திக் (கஜினி).

**சிறந்த பாடகி:** பாம்பே ஜெயஸ்ரீ (வேட்டையாடு விளையாடு).

நித்யஸ்ரீ



யுவன்ஷங்கர் ராஜா



**சிறந்த ஆர்ட் டைரக்டர்:** செல்வகுமார் (ஈ).

**சிறந்த திரைப்படம்:** 'சித்திரம் பேசுதடி' - தமிழ்; 'லகே ரஹோ முன்னா பாய்' - இந்தி; downfall - ஹிட்லரின் கடைசி தினங்கள் - ஜெர்மன் (ஆங்கில சப் டைட்டில்களுடன்).

**சிறந்த பின்னணிக் குரல்:** சவிதா.

**சிறந்த சினிமா பாடல்:** 'ரகசியமானது காதல்'. படம் - கோடம்பாக்கம். எழுதியவர் - விஜயசாகர்; இசை - சிற்பி.

**மிக அதிகம் பாடப்பட்ட சினிமா பாடல்:** 'வாள மீனுக்கும் விலாங்கு மீனுக்கும்...' - கானா உலகநாதன்.



விவேக்



முனியப்பராஜ்

## இலக்கியம்

**சிறந்த கவிதைத் தொகுப்புகள்:**

1. 'அகி' - 139 கவிதைகள் - முகுந்த் நாகராஜன், 'உயிர்மை', 11/29 சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம், சென்னை-18.

2. ரஞ்சனி கவிதைகள் - ரஞ்சனி, இமேஜ் & இம்ப் ரெஷன், 11/29 சுப்பிரமணியம் தெரு, அபிராமபுரம்,

சென்னை-18.



முகுந்த் நாகராஜன்



றஞ்சனி

3. சிறந்த தலித் கவிதை - 'பட்டுப்போன கிறிஸ்துமஸ் மரம்.' - மோகனப்ரியா; 'கோடை உமிழும் குரல்.' - தொகுப்பு: திலகவதி.

4. **சிறந்த சிறு கவிதை:** யாத்ரீகன் - முனியப்பராஜ்.

*'பழைய மன்னருடன் நகர்வலம்*
*வந்ததாய்ச் சொல்லப்பட்ட*
*பாகனற்ற கிழ யானை*
*பட்டத்து ஒப்பனையோடும்*
*ஓசையற்ற சலங்கையோடும்*
*தெருவில் இறந்து கிடந்தது'.*

**சிறந்த சிறுகதை:** 'மிஸ் மார்ட்டீனின் நாய்க்குட்டி.' - விமல் குழந்தைவேல். தொகுப்பு: 'குறளிக் குஞ்சன்.' வெளியீடு: 'நிறம்', அக்கரைப்பாட்டு - 0132400, ஸ்ரீலங்கா (சுனாமி நிதிக்காகத் தன் செல்ல நாய்க்குட்டியை விற்கும் ஆங்கிலேயப் பெண்மணியின் கதை).

**சிறந்த அறிவியல் நூல்:** 'இன்னொரு வானம்' - ஆதனூர் சோழன், சிபி பதிப்பகம், சாந்தி நகர், மதுரை-18.

**சிறந்த ஆராய்ச்சி நூல்:** புதிய வாஸ்து விஞ்ஞானம், கே.சுப்ர மணியன், வானதி பதிப்பகம், சென்னை-17.




'தி இந்து'

## பத்திரிகைகள்

**சிறந்த ஸ்பெஷல் இதழ்:** ஆனந்த விகடன் 304 பக்க தீபாவளி இதழ்.

**சிறந்த புது வரவு:** தினகரன் தீபாவளி மலர்.

**சிறந்த மாத இதழ்:** அமுதசுரபி.

**சிறந்த புதிய இதழ்:** அம்ருதா.

**சிறந்த சிறு பத்திரிகை:** இலக்கிய ரசனை.

**சிறந்த அறிவியல் காலாண்டிதழ்:** அறிவியல் பூங்கா. வெளியீடு: மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச்சங்கம், சென்னை- 4.

**சிறந்த பக்தி இதழ்:** சமரசம்.

**சிறந்த சிறுவர் இதழ்:** சுட்டி விகடன்.

**சிறந்த பெண்கள் பத்திரிகை:** மங்கையர் மலர் - நவராத்திரி ஸ்பெஷல்.

**சிறந்த இலவச இணைப்புப் புத்தகங்கள்:** அவள் விகடன்.

**சிறந்த பேட்டைப் பத்திரிகை:** மயிலாப்பூர் டாக்.

**சிறந்த ஆங்கில தினசரி:** டெக்கான் க்ரானிக்கல்.

**சிறந்த வார அனுபந்தம்:** சன்டே எக்ஸ்பிரஸ்.

**சிறந்த வியாபார தந்திரம்:** சன் நெட்வொர்க் (குங்குமம், தினகரன், தமிழ் முரசு போன்றவற்றுடன் இலவச பொருட்கள் தந்தது).

**சிறந்த அட்டைப் படம்:** சானியா மிர்ஸா, குங்குமம்.

**சிறந்த கார்ட்டூன்:** கேசவ் - தி இந்து.

**சிறந்த கேள்வி-பதில்கள்:** மக்கள் களம், நக்கீரன்.

**சிறந்த வாசகர்:** அயன்புரம் சத்தியநாராயணன்.

## கர்னாடக சங்கீதம்


பாம்பே ஜெயஸ்ரீ

**சிறந்த பாடகர்:** சஞ்சய் சுப்ரமண்யம், டி.எம்.கிருஷ்ணா.

**சிறந்த பாடகி:** பாம்பே ஜெயஸ்ரீ, நித்யஸ்ரீ.

**சிறந்த இசைக் கலைஞர்:** பிரசன்னா (கிடார்), யு.ஸ்ரீனிவாஸ் (மாண்டலின்).

**சிறந்த புதிய பாடகர்:** குருசரண்.

**சிறந்த புதிய பாடகி:** சுபிக்ஷா.

## கிரிக்கெட்

**சிறந்த புதியவர்:** வெய்ன் ப்ராவோ, வெஸ்ட் இண்டீஸ்.

**சிறந்த கேப்டன்:** மஹேளா ஜெயவர்த்தனா.

**மாஸ்டர் ப்ளாஸ்டர்:** க்றிஸ் கேய்ல், ரிக்கி பாண்டிங்.

**சிறந்த பௌலர்:** ஷேன் வார்னே.

**சிறந்த மறுபிறவி:** சவுரவ் கங்குலி, சனத் ஜெய சூர்யா.

**மைதானத்துக்கு வெளியே நிறையச் சம்பாதித்தவர்:** டோனி.

**சிறந்த ரன் துரத்தல்:** தென் ஆப்பிரிக்கா - ஆஸ்திரேலியா (400-க்கு மேல்).


ராதிகா

## இந்த ஆண்டுக்கான சிறப்பு இடது கைப் பரிசுகள்...

1. தொலைக்காட்சி மெகா சீரியல்களில் சந்து கிடைக்கும்போதெல்லாம் ஆ... ஆ... பாடும் பெயர் தெரியாத பாடகர்களுக்கு ஒரு பாக்கெட் ஸ்ட்ரெப் சில்.

2. சங்கீதா ராஜேஸ்வரன் - 'டைலாமு டைலாமு' பாடலுக்காக... தமிழண்ணலின் 'நல்ல தமிழில் பேசுவோம்' புத்தகம்.

3. மெரீனா கடற்கரையில் சிமென்ட் பெஞ்சுகளை இரும்புக்காக உடைத்து வைத்திருக்கும் குடிகாரர்களுக்கும், அவற்றை ஒரு வருஷமாகியும் ரிப்பேர் செய்யாத அதிகாரிகளுக்கும் கடப் பாரை பரிசு (யார் ரிப்பேர் செய்வது... கார்ப்பரேஷனா, போக்குவரத்துக் காவல்துறையா என்று பட்டிமன்றம் நடந்து கொண்டு இருக்கிறது).

4. 'வேட்டையாடு விளையாடு' தமிழ்ப் படத்தில் மிக அதிக எண்ணிக்கையில் கொலைகள் செய்ததற்காக (18 உடல்கள் கணக்கிட் டேன்) இயக்குநர் கௌதம் மேனனுக்கு, ஒரு பொம்மைத் துப்பாக்கி. சிறப்புப் பரிசு ஹாரிஸ் ஜெயராஜுக்கு - இதே படத்தில் இடைவிடா மல் உரக்க ரீ-ரிக்கார்டிங் வாசித்ததற்காக, இரண்டு காதுகளுக்கும் பஞ்சு.

5. மிக அதிகம் பெண்களை அழ வைத்ததற்காக சிரபுஞ்சி அவார்டு 'செல்வி' ராதிகா சரத்குமாருக்கு. சன் டி.வி. 480 எபிசோடுகளில், டைட்டில் தவிர மூன்று முறை சிரித்திருக்கிறார்.

6. இந்திய கிரிக்கெட் அணி எத்தனை விதத்தில் தோற்க முடியுமோ அத்தனை விதத்திலும் தோற்றதற்கு மிக அகலமான கைக்குட்டை.

7. பஞ்சாப் ஹைகோர்ட், நவ்ஜோத் சித்து 1988-ல் செய்த கொலைக்கு 2006-ல் தண்டனை தந்ததற்கு - ஓடாத கடிகாரம்.

8. ஷோயப் அக்தர், ஆசிப் இருவருக்கும் தண்டனை தந்தது போல் பாவ்லா காட்டியதற்காக பாகிஸ்தான் கிரிக்கெட் வாரியத்துக்கு - முஷாரப்புடன் தனிப் பட்ட விருந்து.

9. காசாசை காட்டி நம் வீரர்களின் ஆட்டத்தைக் கெடுத்ததற்காக இந்திய கிரிக்கெட் வாரியத்துக்கு - ஒரு பாக்கெட் லாலிபாப்!



### எ.பி.பொ.

சரித்திரம் திரும்ப வரும் -
முதலில் துன்ப நாடகமாக;
அதன்பின் அபத்த நாடகமாக!

**- கார்ல் மார்க்ஸ்**

**எ.பி.ஹை.**

டயபடிஸ் கிளினிக்கில்
கண்மூடி வீற்றிருக்கும்
கிறித்துவப் பாதிரியார்.

**- மார்கன்**



## திருத்தம்

**செ**ன்ற இதழ் 'சுஜாதா அவார்ட்ஸ்' பகுதியில், சிறந்த டெக்னாலஜியாக தமிழ் எஸ்.எம்.எஸ். இடம்பெற்றிருந்தது. அதைச் சாதித்த முத்துநெடுமாறன் பாராட்டுக்குரியவர். ஆனால், தமிழ் எஸ்.எம்.எஸ். சேவை இன்னும் தமிழகத்தில் நடைமுறைக்கு வரவில்லை.

மேலும், சிறந்த நேரடி விளம்பரமாக 'சட்டு புட்டுனு பழசை மாத்துங்க...' கொடுக்கப்பட்டு இருந்தது. இந்த விளம்பரம், 'ரத்னா ஸ்டோர்ஸ் ஃபர்ம் தங்க மாளிகை'க்காக 'யுனிலிங்க் விஷன்' தயாரித்தது.

## ஈருயிராவது... ஒருடலாவது... எல்லாம் பேத்தல்!'

**டி**சம்பர் சீஸனில் கலாரசனாவின் உபயத்தில் தேர்ந்தெடுத்த சில கச்சேரிகளுக்குப் போவேன். இந்த வாரம்... பாம்பே ஜெயஸ்ரீ, நித்யஸ்ரீ, கிதார் பிரசன்னா, சஞ்சய் சுப்ரமண்யம், உன்னிகிருஷ்ணன்..! சிக்கில் குருசரணை ஓஹோ என்கிறார்கள். அதேபோல் ரஞ்சனி, காயத்ரி.




15 நாட்களில் எண்ணூற்றுச் சொச்சம் கச்சேரி திகட்டத் திகட்ட நடைபெறும் இந்நிகழ்வு உலகில் வேறெங்கும் இல்லை. இதை ஏன் யாராவது 'வெப்காஸ்ட்', 'ப்ராட்காஸ்ட்' என வலை பரப்ப முயலவில்லை என்று வியப்பாக இருக்கிறது. தியாகராஜ உற்சவத்தில் இருக்கும் அஞ்சலிக் கடமையும் அவசரமும் இல்லாமல் வித்வான்கள் ஆர அமரப் பாடி, மயிலாப்பூரிலும், மாம்பலத் திலும், ஆழ்வார்பேட்டையிலும் பத்து சதுர கிலோ மீட்டருக்குள் முத்தை இறைக்கும் நாத வெள்ளம்.

நித்யஸ்ரீ மூன்றே முக்கால் மணி நேரம் பாடி பைரவியும், ஹம்சாநந்தியும், தேஷும் கொண்டு உள்ளத்தை நிரப்பினார். பாம்பே ஜெயஸ்ரீயின் ராகம் தானம் பல்லவி ஒருபுறம் பார்த்தால் மோகனம், மறுபுறம் பார்த்தால் கல்யாணி என்று விளையாட்டுக் காட்டியது. பிரசன்னாவின் பதற்றமும் திறமையும் அவர் கிதார் வாசிப்பில் வெளிப்பட்டது. சஞ்சய் பற்றிச் சொல்லவே வேண் டாம். 'சீதம்மா மாயம்மா'வை பல்லவி பாட எடுத்துக்கொண்டு, சபையின் முழுக் கவனத்தையும் நாதப் பின்னல்களால் கட்டிப் போட்டு ஆக்கிரமிக்கும் குரல் வளம்... சங்கீத ஞானம். 'ஊரி லேன் காணியில்லை', 'கருப்பூரம் நாறுமோ' போன்ற பாசுரங்களைப் பாடி, எனக்குப் புத்தாண்டுப் பரிசு தந்தார். (பை தி வே... பைபிளின் சாலமன் கானத்தில் ஆண்டாளுக்கு ஒப்பான கருத்து உள்ளதாமே!). உன்னிகிருஷ்ணன் தோடியில் மோகனமும் ஹிந்தோளமும் சுருதிபேதம் செய்து கோடி காட்டி, பகுதாரியில் ராகம் தானம் பல்லவி பாடினார்.

கர்னாடக சங்கீதத்தை ரசிக்கத் தெரியாதவர்கள், வாழ்வில் ஒரு முக்கியமான சந்தோஷத்தைக் கைவிடுகிறார்கள்.

டிசம்பர் சீஸனை ஒட்டி புத்தகங்கள், கேஸட்டுகள், சி.டி-க்கள் என ஏராளமாக வெளியிடப் படுகின்றன. லாஸ் ஏஞ்சலீஸ் ராம் போன்ற என்.ஆர்.ஐ-க்கள் 'ராகம் தாளம் பொங்க'லுடன் காமெடி காக்டெய்ல் தருகிறார்கள் (விகடன் பிரசுரம்). நண்பர் ராம்குமார் 'கம்பானியன்' என்ற தலைப்பில், ஆரபி போன்ற ராக லட்சணங்களுடன் மேற்கத்திய வாத்தியங்களை உறுத்தாமல் சேர்த்து, 'இது எப்படி இருக்கிறது, சொல்லுங்கள்' என்று தகடு தந்துவிட்டுப் போகிறார். (நைரே நஹி ஷங்கா - சந்தேகமில்லை, இருக்கிறார்.) ஹெச். எம்.வி. வெளியிடுகிறார்கள். 'கடம்' கார்த்திக், எம்பார் கண்ணனுடன் இணைந்து ஆன் சாம்பிள் என்று லயத்துக்கு அஞ்சலி செலுத்துகிறார்.



'ஸ்வெட்டர் போட்டுக்கலாமா?' என்று யோசிக்க வைக்கும் குளிர்; படுத்தாத மழை; கேன்டீனில் அடை அவியல்; இதமான வெயில்; நெய்தல் திணைக்கான சிறு பொழுது; மெரினாவில் பௌர்ணமி... ('வார்த்தை வந்து மறைக்கிறது என் நிலவை' - முகுந்த் நாக ராஜன்). கீதையில் பகவான், 'மாதங்களில் நான் மார்கழி' என்று சொன்னதன் பொருத்தம் தெரிகிறது. நல்ல கவிதைக்காகவும், நல்ல சிநேகங்களுக்காகவும், நல்ல காபிக்காகவும், நல்ல புத்தகங்களுக்காகவும் மனசு அலைகிறது.

"இருவர் ஒருவரானோம்... என்று குறுந்தொகை சொல்வதெல்லாம், குறுந்தொகையில் தான் சார் சாத்தியம்" என்றார் இளம் நண்பர் சேகர். 'வில்லக விரலினாரின் குறுந்தொகை 370-ம் பாடலைக் குறிப்பிடுகிறார். காதல் கல்யாணம் செய்து கொண்டு, ஹனிமூன் போய்விட்டுத் திரும்பியிருந்த மற்றொரு ஜோடி. இதற்கு முன் ஒரு ஜோடி பற்றி எழுதியுள்ளேன்.

"என்ன ஆச்சு சேகர், நீங்க ரெண்டு பேரும் 'சில்லுனு ஒரு ஜோடி' நிகழ்ச்சிக்குத் தகுந்த வேட்பாளர்கள்னு நினைச்சேன்!"

"சிம்பிளான விஷயங்களில்கூட நிறைய வேறுபாடுகள், சுஜாதா சார்! உதாரணமா, நான் தூங்கறப்ப ரெண்டு கையையும் முழங்காலுக்கு இடையில் வெச்சுக்கிட்டு சுருண்டு படுப்பேன். அப்பத்தான் எனக்குத் தூக்கம் வரும்."

"அப்படித்தான் 90 சதவிகிதம் ஆண்கள் தூங்குறாங்கன்னு பால் ட்ரெய்சர் எழுதியிருக்கார்!"

"ஏன் சார் அப்படி?"

"ம்... 'தூக்கத்தில் யாராவது அதைத் திருடிட்டுப் போகாம பாதுகாக்க!'ன்னு சைக்காலஜிஸ்ட்டுகள் சொல்றாங்க."

"சின்ன வயசிலேர்ந்து ரெண்டு முழங்காலுக்குள்ள ரெண்டு கைன்னு பொட்டலமா படுத்துப் பழகியிருந் தவனுக்குப் பக்கத்துல, இது என்ன... தலைகால் புரியாம எட்டுக்கால் பூச்சி மாதிரி எட்டுக் கால், மார் மேல ஒரு தலை..! அப்புறம், என் தலைமுடியைச் சதா நிமிண்டற விரல், ராத்திரி ஒரு மணி சுமாருக்கு மார் மேல ஒரு கான் க்ரீட் கப்பல் ஏறி அழுத்த, எழுந்தா..."

"ஐ கெட் தி ஐடியா!"

"அப்புறம், எனக்கு ஃபேன் ஆகாது. அங்க ஃபேனை ஃபுல் ஸ்பீட்ல போடணும். இந்த மாதிரி ஒரு வாரத்தில் 24 வித்தியாசங்கள் சொல்ல முடிஞ்சுது!"

"ச்ச்" என்றேன் அனுதாபத்துடன்.

“ஈருயிர் ஒருடல்னு எதுக்கு சார் எழுதறீங்க?” என்று அதட்டினான்.

“பாருப்பா, நான் அப்படி எழுதினதா ஞாபகமில்லை. அந்த வகை எழுத்தாளன் இல்லை நான்!”

“நீங்கன்னா உங்களை மாதிரி எழுத்தாளர்கள்... குறிப்பா, சினிமா கவிஞர்கள்.”

“அவங்கள்லாம் தனியாப் படுக்கிறவங்களா இருக்கலாம்” என்று சொல்லிப் பார்த்தேன்.

தமிழில் முதல் உரைநடை நூல் என்று, ‘இறையனார் அகப்பொருள் உரை’யைச் சொல்கிறார்கள். அகப் பொருளை எழுதியவர் இறையனார். அகத்துறைக்கான இலக்கணங்களைக் கூறும் நூல். அதற்கு உரை எழுதியவர் ‘நக்கீரர்’ என்று குறிப்புகள் உள்ளன. எந்த நக்கீரர் என்பது தெளிவில்லை. நக்கீரர், ஔவையார் போன்ற பெயர்கள் எல்லா நூற்றாண்டிலும் வருகின்றன. ‘இறையனார் அகப்பொருள் உரை’யின் காலம் கி.பி 8-ம் நூற்றாண்டு. அதன் உரைநடைக்கு உதாரணம்...

“குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் போல இதுகாண் அன்பு என்று போதத் திறந்து காட்டலாகாது. அன்புடையரான குணங்கண்டவிடத்து இவை உண்மையான ஈங்கு அன்பு உண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று! அன்புடையரான குணம் யாவையோ எனின்... சாவிற் சாதல், நோவின் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வு நனிவேட்டல், பிரிவு நனியிரங்கல் என இவை.”

இது 8-ம் நூற்றாண்டு உரைநடை. 21-ம் நூற்றாண்டுக்கு மொழி பெயர்த்தால், அதில் உள்ள சிந்தனை தெளிவாகிறது; இன்றைக்கும் செல்லுபடியாகிறது.

‘குடத்துள் விளக்கு, உரைக்குள் கத்தி போல... இதுதான் அன்பு என்று அறியு மாறு திறந்து காட்ட முடியாது. அன்புள்ளவரின் குணங்களைப் பார்க்கும்போது இவை இருப்பதால் (உண்மையாய்) இங்கே அன்பு இருக்கிறது என்று அறிந்துகொள்ள முடியும். அன்புள்ளவரின் குணங்கள் என்னென்ன என்றால்... சாவில் சாதல், நோவு வந்தால் வருத்தப்படுவது, பொருள் உதவி செய்வது, நல்லதாக, இனிமையாகப் பேசுவது, சந்திப்பதை மிகவும் விரும்புவது, பிரிவில் மிகவும் வருந்துவது என இவை.’

மற்றொரு விஷயம், இறையனார் அகப்பொருள் உரையில்தான் முதன்முதலாக பாண்டிய மன்னர்கள் நிறுவிய மூன்று சங்கங்களைப் பற்றியும், புலவர்களின் பெயர்களும், நூல்களின் விவரமும் தரப்பட்டுள்ளது. எனவே, சங்க காலப் புலவர்கள் எவருக்கும் ‘தாம் சங்க காலத்தில் இருக்கிறோம்’ என்று தெரிந்திருக்காது.

### எ.பி.பொ.

**‘ந**மக்குத் தேவை இரண்டு மணி நேரம் ஓடக்கூடிய படம். அதற்குச் சற்றே நீண்ட சிறுகதைகள் போதுமானவை!’

**- சத்யஜித் ரே**

### எ.பி.ஹை

தலைவரின் பிறந்த நாள்.
செக்யூரிட்டியின் நெற்றியிலும்
குங்குமம்.

- **மார்கன்**

## எ.பி.க.



பார்வையற்ற குழந்தை
மரப்படிகளில் இறங்கி
வந்துகொண்டிருக்கிறாள்
அவளுக்கு
அது ஒரு பிரச்னையே இல்லை

அவளாகக் கற்பித்துக்கொண்ட
இந்த உலகின் ஒழுங்கில்
ஏழாவது படிக்குப் பிறகு
ஒன்பதாவது படி
வராதவரை

பார்வையற்ற குழந்தை
நிதானமாகவே படிகளில்
இறங்கிக்கொண்டிருக்கிறாள்

- **மனுஷ்ய புத்திரன்** (தொகுப்பு: ‘கடவுளுடன் பிரார்த்தித்தல்’)

## உங்கள் வீட்டில் ஒரு மேஜிக்!

2007-ன் ஆரம்பத்தில், அடுத்த பத்தாண்டுகளில் டெக்னாலஜியில் என்னென்ன முன்னேற்றங்கள் ஏற்படும் என்பதை ஒயர்டு (wired) பத்திரிகை சொல்லியிருக்கிறது.

1. நடக்கவே இயலாதவர்கள் நடக்க ஆரம்பித்துவிடுவார்கள். காலில் பதிக்கப்பட்ட சென்ஸார்கள் கம்ப்யூட்டருடன் இணைக்கப்பட்டு, செயல்படுத்தும் ஆணைகள் மூலம் இயல்பாக நடக்க ஆரம்பித்துவிடுவார்கள்.



2. நேனோடியூப்களால் கட்டப்பட்ட கட்டடங்கள், எஃகைவிட ஆயிரம் மடங்கு வலுவானதாக இருக்கும்; எந்த பூகம்பத்தையும் தாங்கும்.

3. இன்டர்நெட்டுக்கு புத்திசாலித்தனம் ஏற்பட்டு, நீங்கள் கேட்கும் கேள்வியின் அர்த்தத்தையும் உங்களையும் புரிந்துகொண்டு, நெத்தி யடியாகத் தகவல் தரும்.

4. செய்தித்தாள்கள் ‘மடிக்கக் கூடிய கம்ப்யூட்டர்’ வடிவில் வரும். படித்துவிட்டுப் பழைய பேப்பர்காரனுக்குப் போட வேண்டாம். ஏனெனில், மறு நாள் அதே பேப்பர் வேறு செய்தி தரும்.

5. இந்த வருஷமே ‘க்ளோனிங்’ முறைப்படி ஒரு முழுக் குழந்தையை உண்டாக்குவார்கள்.

6. எதிர்காலத்தில் அப்பாக்கள் வழக்கொழிந்து போய் artificial gametes என்னும் முதிர்ச்சியடைந்த ஒற்றை செல்கள் இன்டர்நெட்டில் கிடைக்கும். அப்பாவின் தேவையின்றி, பிள்ளை பெற்றுக்கொள்ள முடியும்!

**சு**ஜாதா அவார்டுகள் பெற்ற அனைவரும் (தொலைக்காட்சி, சினிமா நடிகர்கள் தவிர) எனக்கு போன் போட்டு நன்றி தெரிவித்தார்கள். சிக்கில் குருசரண் வீட்டுக்கே வந்திருந்தார். சிக்கில் சகோதரிகளின் பேரன். மாலா சந்திரசேகர் இவருக்குச் சித்தியாம். நல்ல, கர்னாடக சங்கீதச் சூழல். உயரமான, அழகான இளைஞர். பி.காம்., எம்.எஃப்.ஏ. படித்திருந்தாலும், 'சங்கீதத்தில்தான் கவனம் செலுத்தப்போகிறேன்' என்றார்.

ஏதோ சங்கீத, நாடக, அல்லது சாகித்ய அகாடமி அவார்டு போல 'சுஜாதா அவார்டு'களை மக்கள் மதிப்பது தெரிந்து, எனக்குச் சங்கடமாக இருந்தது. நன்றி தெரிவித்தவர்களுக் கெல்லாம் நன்றி!

பெருமை சுஜாதாவுக்கு அல்ல; விகடன் பத்திரிகையின் பரவலுக்குத் தான்!

**நா**ம் எல்லோருமே ஏதாவது ஒரு அவார்டுக்கு, பாராட்டுக்குத்தான் அல்லாடுகிறோம். சில 'சமூகசேவை' அமைப்புகளின் முக்கியமான நிகழ்ச்சி, யாருக்காவது ஏதாவது கார ணத்துக்காக அவார்டு தந்து, அவரே எழுதிக்கொடுத்த நீண்ட புகழ்ந்துரைப் பத்திரத்தை வாசித்து, அதை பேர் போட்டு ஃப்ரேம் போட்டுத் தருவது. தின வாழ்வில் அந்த ரேஞ்சுக்குப் போக வேண்டாம்... சாதாரணமாக மனைவியிடம், 'இன்று சமையல் சூப்பர்!' என்று சொல்லிப் பாருங்கள்; கணவனிடம், 'இந்தச் சட்டை உங்க ளுக்குப் பிரமாதமா இருக்கு!' என்று சொல்லிப் பாருங்கள்... அன்றைய தினம் மேஜிக் நிகழும். பகவானே பாராட்டுக்கு மயங்கி, 'தெரியேன் பாலகனாய்' என்று ஒப்புக்கொண்டால், உங்கள் தப்புகளை மன்னித்து விடுவார்.

சின்ன வயசில், கோபாலன் என் றொரு அபாரமான பேட்ஸ்மேன், கீழச் சித்திரை வீதி தேர் முட்டிக்குத் தெற்குப் பாதியில் இருந்தான். ரொம்ப ஸ்டைலாக விளையாடுவான். நாங்கள் எல்லாம் பார்வையாளர்கள். புத்தூர் டீமுடன் மேட்ச் முடிந்ததும், ஹைஸ்கூல் சுற்றுச்சுவரின் மேல் உட்கார்ந்து சிகரெட் பிடித்துக்கொண்டு இருந்த வனிடம், 'கோபாலா! நன்னா ஆடினே!' என்று பாராட்டுவோம்.

கோபாலன் அதோடு எங்களை விட மாட்டான். 'நன்னா ஆடினே னோல்லியோ? சொல்லுடா!'

'ஆமடா!'

'அந்த நாலாவது பால்... கவர் ட்ரைவ் அடிச்சேனே, அதைப் பத்திச் சொல்லுடா!'

'ம்... பிரமாதமா இருந்துது!'



'அப்புறம், எங்கிட்ட போய் பம்பர் போடறாண்டா... அதை எப்படி ஹூக் பண்ணேன்... சொல்லுடா!'

இப்படி வாயிலிருந்து பாராட்டைப் பிடுங்குவான். அதனால் ஒரு முறை பாராட்டினவர்கள், மறுமுறை அவனைக் கண்டாலே, 'போடா... சீ!' என்று ஒதுங்கிவிடுவார்கள்.

பாராட்டுக்கு மயங்காத தலைவர்கள் இருந்தால், எனக்கு காம்பெடிஷன் போஸ்ட்கார்டில் தெரிவிக்கவும். எந்தப் பொதுக்கூட்டத்திலும் பாருங்கள்... மேடையில் நடுநாயகமாக வீற்றி ருப்பவரை ஒவ்வொருவரும் பாராட் டில் குளிப்பாட்ட, கன்னத்தில் விரல் வைத்து, சற்று தலை சாய்த்துக் கொண்டு லேசான புளங்காங்கிதத் துடன் அதைக் கேட்டுக்கொண்டு இருப்பது, நாட்டில் பரவலான காட்சி! 'அவரைப் பற்றி நான் எப்படிச் சொல்வது... சூரியனை மின்மினி புகழ்வதா? அவர் இருக்கும் அதே காலகட்டத்தில் நாம் இருப்பதே பெருமையாகும்!' என்ன ஒரு ஜல்லி இது! இதைக் குதூகலத்துடன் கேட்டுக்கொண்டு இருப்பவருக்கு விவஸ்தையில்லையா?! எப்போதாவது யோசித்திருப்பாரா... 'இந்த அல்லக்கை எதற்காக எனக்கே கூச்சமாகிற அள வுக்குப் புகழ்கிறான் என்பது தெரி யாதா?' என்று.

ஆனால், புத்தாண்டில் நிஜமாகவே பாராட்டுக்குரியவர் தமிழக முதல்வர். தியேட்டர் கட்டணங்களைக் குறைத்த துடன், விரிதிரை, டி.டி.எஸ்., எங்கும் குளிர் போன்ற நல்ல வசதிகள் தரும் பல்திரை அரங்கங்களுக்கு மட்டும்

கட்டணம் உயர்த்தலாம் என்று அறி வித்தது, சினிமா உலகுக்கும் தமிழ் நாட்டின் திரைசார் பொருளாதாரத்துக்கும், இரண்டு விதத்தில் புத்துயிர் அளிக்கும். நிறையப் பேர் சினிமா பார்ப்பார்கள். இந்தியில் போல, ‘மல்டிப்ளெக்ஸ் சினிமா’ என்ற ஒரு புதுப் பாகுபாடு வந்து, நல்ல சினிமா எடுக்கப் பலர் முன்வருவார்கள்.

ரஞ்சனி - காயத்ரி சகோதரிகளின் கீரவாணியும், இறுதியில் பாடிய ‘மாதவ விட்டல’ அபங்கும், 2006-ஐ எனக்கு உற்சாகமாக நிறைவு செய்தது.



சதாம் உசேன்

‘ரேடியோ மிர்ச்சி’யிலிருந்து ஒரு பெண் போன் செய்திருந்தார்... ‘ஹாய் சுஜாதா சார்! நியூ இயர்க்கு உங்க ஒரே ஒரு விஷ் என்ன சொல்லுங்க, ரிக்கார்ட் பண்ணிக்கிறோம்!’

“புத்தாண்டில் நீங்க ல, ள, ழ, ன, ண சரியா உச்சரிக்கணும்கிறது என் விருப்பம். எங்கே சொல்லுங்க, ‘நல்ல உள்ளம்’, ‘துணிந்த மனிதன்’...”

மறுமுனை துண்டிக்கப்பட்டு, அதன்பின் அவர்களிடமிருந்து அழைப்பு ஏதும் இல்லை.

நிஜமாகவே புத்தாண்டில் என் விருப்பங்கள் அதிகம் இல்லை. உலகெல்லாம் சாந்தி நிலவ வேண்டும் என்பதெல்லாம் விபரீத ஆசை. இந்த வயதில் அனுதினமும் ஒரு பரிசுப் பொருள் போலத் துவங்குகிறது! என் முதல் விருப்பம் - உடல்நலம். அங்கங்கே சிணுங்கும் சின்ன வலிகள் பரவாயில்லை. பெரி சாக ஹார்ட், கிட்னி, லிவர் என்று ஏதாவது வராமலிருக்க வேண்டும். இது முதல் விருப்பம். இரண்டாவது, இப்போது சாப்பிடும் பதினாலு மாத்திரை களைப் பத்தாகக் குறைக்கலாமா என்று கார்டியாலஜிஸ்ட்டிடம் மன்றாடிப் பார்ப்பது. மூன்றா வது, தினம் வருகிற கவிதைத் தொகுப்புகளைப் பிரித்துப் பார்க்க நல்ல புத்தியும், பேப்பர் கத்தியும் பெறுவது; அவற்றில் கொஞ்சமேனும் கவித்துவம் கிடைப்பது. நான்காவது, தொல் காப்பியம். பொருளதிகாரத்தை முழுவதும் படித்துவிட்டு, அதைப் புரிந்து கொண்டபின், ஓர் எளிய அறிமுகம் எழுது வது; ‘வாரம் ஒரு பாசுரம்’ வருடம் முழுவதும் தொடர்ந்து செய்வது; நற்றிணைக்கும், பத்துப் பாட்டில் ‘மலைபடுகடாம்’ அல்லது ‘மதுரைக்காஞ்சி’க்கு உரை எழுதுவது; கார்ப்பரேஷன் நூலகத்துக்கும் சேவாலயாவுக்கும் இன்னும் ஒரு 300 புத்தகங்கள் அன்பளிப்பது... இப்போதைக்கு இந்த லிஸ்ட் போதும் என்று எண்ணுகிறேன். போகப் போகத் திருத்திக்கொள்ளலாம்.

சதாம் உசேன் தூக்கிலிடப்படுவதைத் தொலைக்காட்சியில் கழுத்தில் சுருக்கு மாட்டும் வரை காட்டினார்கள். ‘நெட்’டில் தூக்கில் தொங்கும் வரை காட்டினார்கள். இமைப் பொழுதில் உயிரிழந்தார் என்று, கூட இருந்தவர்கள் சொன்னார்கள். சதாம் தன் இறுதிக் கணத்தில், தனக்கு நிகழ் வதை வேற்று மனிதருக்கு நிகழ்வதைப் போல வேடிக்கை பார்த்துக்கொண்டு, ‘நீதான் காரணம்’ என்று குற்றம் சாட்டிய சக குற்றவாளியிடம் அந்தச் சமயத்தில் தன்னை நியாயப்படுத்திக்கொண்டு, முகமூடியை மறுத்து, ‘துப்பாக்கியால் என்னைச் சுடு’ என்று அதட்டிக் கேட்டு, அதற்கு அனுமதி மறுக்கப்பட்டுத் தூக்கி லிடப்பட்டு தைரியமாகவே செத்தார். கடைசி வரை ‘நான்தான் தலைவன்’ என்கிற எண்ணத்தை அவர் துறக்கவே இல்லை.




தூக்கிலிடுவதன் தர்ம நியாயங்கள் ஒருபுறம் இருக்கட்டும். அதன்படியே தூக்கிலிடப்பட வேண்டியவர்கள் புஷ் உட்பட இன்னும் பலர் இருக்கிறார்கள். உலகில் தீவிரவாதம் ஒழிந்து,

பாலஸ் தீனியர்களும் இஸ்ரேலியர்களும் சண்டையை நிறுத்திவிட்டால், வன்முறை சார்ந்த அமெரிக்க துப்பாக்கிப் பொருளாதாரம் படுத்துவிடும்.

எ.பி.பொ.

'புகழ் வார்த்தைகளை நிஜமென்று
நம்பத் தொடங்கும்போது, உனக்குக்
கேடுகாலம் துவங்குகிறது!'

**- ஜிம் ஆலன்**

## இரண்டரை மணிக்குள் ஒரு வாழ்நாள்!

**ம**ணிரத்னத்தின் 'குரு' இந்த வாரம் வெளியாகி இருக்கிறது.

அபிஷேக்பச்சனும் ஐஸ்வர்யா ராயும் அவர்களது நிஜ வாழ்வின் கட்டாயங்களையும் வதந்திகளையும் விட்டுவிட்டு, வாழ்க்கையில் 'முடியாது' என்ற வார்த்தையே கிடையாத ஒரு 'never say die' பாலியெஸ்டர் தொழிலதிபராக அபிஷேக்கும் (திருபாய் அம்பானியின் சாயல்), அவரது பிடிவாதங்களைச் சகித்துக்கொண்டு கஷ்டத்திலும் சுகத்திலும் சம பங்களிக்கும் மனைவியாக ஐஸ்வர்யாவும் வியப்பில் ஆழ்த்தியிருக்கிறார்கள். அபிஷேக்குக்கு 'யுவா' வுக்குப் பிறகு, 'Big B'யின் நிழலிலிருந்து விலக மற்றொரு பெரிய சந்தர்ப்பம். ரஹ்மானின் பொருத் தமான இசையமைப்பில் அவரே பாடிய ஒரு பாடலும், ஹரிஹரனின் மென்குரல் பாடல் ஒன்றும், குஜராத்தின் நாட்டுப்புற மெட்டுகளும், ராஜீவ் மேனனின் படப் பிடிப்பும்... பாலிவுட் மசாலாப் படங்களிடையே இது அடுத்த சினிமா என்று காட்டுகிறது.



மணிரத்னத்தின் கதை சொல்லும் முறையில், ஒரு வாழ்நாளை எப்படி இரண்டரை மணிக்குள் அடக்குவது, எதைச் சொல்வது, எதை விடுவது என்ற தேர்ந்தெடுப்பில் புத்தி சாலித்தனம், திறமை, யதார்த்தம், நகைச்சுவை, சோகம் எல்லாம் சரியான அளவில் கலந்துள்ளது. 2007-ன் துவக்கத்தில் இந்திய சினிமாவின் குரலை ஹாலிவுட் ரேஞ்சுக்கு எழ வைத்தி ருக்கிறார்!

ராமானுஜன் என்றால், ராமனின் உடன்பிறப்பு. எனக்குப் பிடித்த பெயர்களில் அது ஒன்று. நான் மிகவும் வியப்பது மூன்று ராமானுஜர்களை! 11-ம் நூற்றாண்டில் வாழ்ந்த, விசிஷ்டாத் வைதக் கருத்துக்களை நிறுவி, ஸ்ரீபாஷ் யம் தந்த ராமானுஜர் அதில் முதல்வர். கணித மேதை ஸ்ரீநிவாச ராமானுஜன் இரண்டாமவர். கவிஞரும், தேர்ந்த மொழிபெயர்ப்பாளருமான ஏ.கே. ராமானுஜன் மூன்றாமவர்.


கணித மேதை ராமானுஜன்

ராமானுஜரைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்... இந்தியத் தத்துவ, சிந்தனை மரபின் மேதைகளில் ஒருவர். மாயாவாதத்தை வென்று, 'பிரபஞ்சம் முழுவதும் நாராயணன் ஒருவன்தான் உண்மை. உயிருள்ள, உயிரற்ற பொருள்கள் அனைத்தும் ஒரே பிரம்மத்தின் வடிவம்தான்' என்ற வசீகரமான கருத்தைச் சொன்னவர். சாதி வித்தியாசம் பார்க்காது, திருக்குலத்தோர் என்று அனைவரையும் நாராயணன் பால் அழைத்துச் சென்றவர்.

கணித மேதை ஸ்ரீனிவாச ராமானுஜன், பிரபஞ்சத்தின் உண்மையை கணிதச் சமன்பாடுகளின் மூலம் தேடினார். அவர் தன் நோட்டுப் புத்த கத்தில் எழுதிவைத்த 4,000 சமன்பாடுகளின் அழகையும், அவற்றில் பொதிந்துள்ள ரகசியங்களையும், இன்றும் வருஷா வருஷம் மாநாடு கூட்டிக் கணித நிபுணர்கள் வியந்துகொண்டு இருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| 8 | 1 | 6 |
| 3 | 5 | 7 |
| 4 | 9 | 2 |

முடிவிலாத உள்ளுக்குள் உள்ளே சென்றுகொண்டு இருக்கும் ஒரு கூற்றை இடது பக்கத்தில் எழுதி, வலது பக்கத்தில் அதன் கூட்டுமதிப்பு 2-ன் கீழ் 'பை' ( $\pi$ ) என்று எழுதிக் காட்டும்போது, கடவுள் ஒருபுறம்முடி வற்றவர்... மறுபுறம் முடிவுள்ளவர் என்பதை உணரவைத்தார்ராமானு ஜன். 'தங்க சராசரி' என்று ஒரு சங்கதி உண்டு. உலகின் அழகான கட்டடங்கள் அனைத்திலும் கிரேக்க, எகிப்திய காலங்களிலிருந்து கண்ணுக்கு விருந்தான அகல-உயர உறவு ஒன்று உண்டு. இதை golden mean என்பார்கள். அதன் மதிப்பு $\frac{\sqrt{5}+1}{2}$. இதை ராமானுஜன் தன் சமன்பாடுகள் ஒன்றில் பயன்படுத்தியிருக்கிறார். எப்படி இவருக்கு இந்த மந்திர எண் தெரிந்திருக்கிறது என்று இன்றும் வியக்கிறார்கள்.

ஏ.கே.ராமானுஜன் சங்க இலக்கியங்களையும், பக்தி இலக்கியத்தில் நம் மாழ்வார் பாடல்களையும் ஆங்கிலத் தில் அறிமுகப்படுத்தினார். சங்க இலக்கியத்தைப் பற்றி பண்டிதர்கள் சொல்லும் விளக்கங்கள் புரியாத மேல்நாட்டவர்களுக்கு, ஏன்... தமிழர்களுக்குக்கூட ராமானுஜன் நம் தொல் காப்பிய, அகத்திணை, புறத்திணை விதிகளை முழுமையாகப் புரிந்து கொண்டு அளித்த அருமையான கட்டுரைகள் எளிதில் புரிந்து, தமிழுக்கு உலகளாவிய மதிப்பைத் தந்தன.



ராமானுஜன் என்ற பெயரில் ஏதோ இருக்கிறது!

பல எண்களுக்கு விநோதமான குணங்கள் இருப்பதை அறிவியல் வழியாகவே கவனித்திருக்கிறார்கள். கூட்டினால் 9 வருமாறு வீட்டு நம்பர், கார் நம்பர் வாங்கிக்கொள்வார்கள் பலர். 9-க்கு விநோத குணங்கள் உண்டு. 9-ஆல் எந்த எண்ணைப் பெருக்கினாலும், விடையின் இலக்கங்களை கடைசி வரை கூட்டினால் வரும் ஒற்றை இலக்கம் எப்போதும் 9-ஆகவே வரும் (உதாரணமாக, 27x9=243 2+4+3=9).

மாயச் சதுரங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருப் பீர்கள். கிரகங்களையும் மாயச் சதுரங்களையும் சம்பந்தப்படுத்தும் பழக்கம், பழைய சீனச் சக்ரவர்த்தி 'யூ'என்பவரின் (கி.மு.2200) காலத் திலிருந்தே இருந்து வருகிறதாம்.

மாயச் சதுரம் என்பது என்ன? எளிய உதாரணம்: சனி கிரகத்துக்கான 3-க்கு 3 மாயச் சதுரம்.

இதை எப்படிக் கூட்டினாலும் 15 வருகிறதல்லவா? இப்படி ஒவ்வொரு கிரகத்துக்கும் ஒரு எண்ணில் மாயச் சதுரங்கள் உண்டு. சந்திரனுக்கான மாயச் சதுரம் 9-க்கு 9. இதன் எண்களை குறுக்கே, நெடுக்கே (மூலை விட்டமாகவும்) எப்படிக் கூட்டினாலும் 369 வரும். இந்தச் சதுரம் காதலர்களையும், பிரிந்து போன தம்பதியரையும் சேர்த்துவைக்கும் சதுரம்! இதை உங்களால் அமைக்க முடியுமா, பாருங்கள்!

இதை ஒரு நீலநிறக் காகிதத்தில் எழுதி, உங்களைப் பிரிந்தவரின் ஏதாவது ஒரு உடைமையுடன் அவர்கள் அணிந்த வஸ்திரத்தின் நூலோ, தலைமுடியோ அல்லது அவர்கள் தொட்ட ஏதாவது ஒரு சிறு பொருளுடனோ சேர்த்து வைத்து, உங்கள் வீட்டில் கண்ணில் படாத இடத்தில் ஒளித்து வைத்துவிடவும்.

ஒன்பது நாட்களுக்குள் உங்கள் பிரியமான நபர் உங்களைத் தேடி வருவார். வரவில்லை எனில், மறந்து விடவும்.

நினைவிருக்கட்டும்... சதுரத் தின் கூட்டுத்தொகை எப்படிப் பார்த்தாலும் சரியாக 369 இருக்க வேண்டும். (விடையைக் கீழே கொடுத்திருக்கிறேன்.)

கைவசம் 14 சிறுசிறு விஞ்ஞானக் கதைகள் வைத்திருப்பதாக நான் எழுதியிருந்ததை மறக்காமல் ஞாபகப்படுத்தியிருந்தார் அன்பர் ஒருவர். 'நிஜ மாகவே 14 கதைகள் வைத்திருக்கிறீர்களா? இல்லை, இதுவும் ஜல்லியா?' என்று கேட்டிருந்தார்.

நான் சிறுகதைகளின் குட்டைப் பாவாடைகளான ‘ஷார்ட் ஷார்ட்’டின் ரசிகன். வண்ணத்துப்பூச்சிகளைப் போல அவற்றைச் சேகரித்து வருபவன்.

**இதோ இரண்டு கதைகள்...**

1.பிரபஞ்சப் பள்ளியில் மனிதனின் ரிப்போர்ட் கார்டு - ஏ மைனஸ்.

2. நடந்து நடந்து பிரபஞ்சத்தின் எல்லையை அடைந்தேன். தரையில், ‘இதுதான் பிரபஞ்சத்தின் எல்லை’ என்று எழுதியிருந்தது - தலைகீழாக!

மற்றவை, பிற வாரங்களில்!

**மாய சந்திரச் சதுரம்**

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 37 | 78 | 29 | 70 | 21 | 62 | 13 | 54 | 5 |
| 6 | 38 | 79 | 30 | 71 | 22 | 63 | 14 | 46 |
| 47 | 7 | 39 | 80 | 31 | 72 | 23 | 55 | 15 |
| 16 | 48 | 8 | 40 | 81 | 32 | 64 | 24 | 56 |
| 57 | 17 | 49 | 9 | 41 | 73 | 33 | 65 | 25 |
| 26 | 58 | 18 | 50 | 1 | 42 | 74 | 34 | 66 |
| 67 | 27 | 59 | 10 | 51 | 2 | 43 | 75 | 35 |
| 36 | 68 | 19 | 60 | 11 | 52 | 3 | 44 | 76 |
| 77 | 28 | 69 | 20 | 61 | 12 | 53 | 4 | 45 |

### எ.பி.பொ.



‘லட்சக்கணக்கானோர் உடல் உழைப்புக்குத் தகுதியுள்ள வர்கள். லட்சத்தில் ஒருவர்தான் சிந்தனையாளர். நூறு லட்சத்தில் ஒருவர்தான் சிந்தனையால் தெய்வ வாழ்வு பெறத் தகுதி யுள்ளவர்.’

- **ஹென்றி டேவிட் தோரு, வால்டன்**

### எ.பி.க.



நான் அவன், நீ அவள்
நான் கானம், நீ கவிதை
நான் வானம், நீ பூமி
இருவரும் சேர்வோம்
பிள்ளைகள் பெறுவோம்!

**-அதர்வண வேதம்**

## பண்பாட்டின் பிரதிபலிப்பு!

**சென்**னை புத்தகச் சந்தை இந்த ஆண்டு விஸ்தாரமான மைதானத்தில், 40 லட்சம் புத்தகங்களைப் பார்வையிட 400 ஸ்டால்களுடன் காற்றோட்டமாகத் துவங்கியது. தமிழக முதல்வர் புத்தகச் சந்தைக்கு வருஷா வருஷம் இடம்தேடி அலைய வேண்டாம் என்று நிரந்தர மைதானம் தரச் சம்மதித்திருக்கிறார்.

ஒரு மாநிலத்தின் கலாசார வளர்ச்சியை, பண்பாட்டை அந்த மாநிலம் படிக்க விரும்பும் புத்தகங்களும், வெளியிடும் புத்தகங்களும் பிரதிபலிக்கும். தமிழ்ப் புத்தகங்கள் ஒரு பதிப்பு பெரும்பாலும் ஆயிரம் பிரதிகள் போடுகிறார்கள். அது ஆறு மாதத்துக்குள் விற்றுத் தீரும் நிலை வர வேண்டும். அதற்கு நகரங்களில் நிரந்தரப் புத்தகச் சந்தைகள் அமைக்க வேண்டும். இப்போது நெய்வேலி, கோவை, திருச்சி, மதுரை போன்ற நகரங்களுடன் சேலம், ஈரோடு, திருப்பூர், திருநெல்வேலி, யாழ்ப்பாணம், கொழும்புவும் சேர்ந்துகொள்ள வேண்டும். பிறகு கனடா, கலிபோர்னியா, சிங்கப்பூர், மலேஷியா, ஆஸ்திரேலியா என விரிவடைந்தால், தமிழில் லட்சம் பிரதிகள் விற்கும் 'பெஸ்ட் செல்லர்'கள் அதிகரிக்கும்.




இந்தப் பகுதியை ஒரு புகார்ப் பெட்டி போல் பாவித்துப் பலர் எழுதுகிறார்கள். ஓர் அன்பர், தன் மாடி வீட்டில் குடியிருப்பவர் வாடகை ஒழுங்காகக் கொடுப்பதில்லை... இதைப் பற்றிக் 'கற்றதும் பெற்றது'மில் எழுதவும் என்று உத்தரவிட்டிருக்கிறார். மற்றொரு அன்பர், நான் ஒரு வருஷத்துக்கு முன் எழுதிய 'மார்னிங் ராகா' திரைப்படத்தில் ஷபனா ஆஸ்மிக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்த பெண்மணியின் புகைப்படத்தை அனுப்பி, 'இதை அடுத்த வாரம் க-பெயில் போடவும்' என்றுஎழுதியிருந்தார். சி.எஸ்.பாஸ்கர் கொஞ்சம் புத்திசாலித்தனமாக ஒரு ரெய்னால்ட்ஸ் கத்தியை அனுப்பி வைத்து, 'இத்துடன் பேப்பர் கத்தி... எனது சில எழுத்துக்கள்- அடித்த வெள்ளையனைக் கறுப்பன் கெஞ்சினான்... விடு, என் விந்து வெள்ளை' என்று அதிர்ச்சிக் கவிதை அனுப்பி யிருக்கிறார்.

எல்லோரிடமும் ஒன்று சொல்ல விரும்புகிறேன்... எனக்கு மேட்டர் பஞ்சமே இல்லை. இந்தப் பகுதியில் நான் அடுத்த வாரம் என்ன எழுதப் போகிறேன் என்று எனக்கே தெரியாது; அத்தனை விஷயங்கள் காத்திருக் கின்றன. ஆனால், 'இதை எழுது' என்று என் மணிக்கட்டைப் பிடித்து, ப்ளான்செட் போல கட்டாயமாக நகர்த்த முயன்றால், அதை எழுதக் கூடிய சாத்தியம் .0001 விழுக்காடாகச் சரிகிறது.

விஷயம் என்னைத் தேடி வரக் கூடாது; நான் அதைத் தேடிப் போக வேண்டும். அந்தத் தேடலில் உள்ள serendipity எனக்குப் பிடிக்கும். இதைச் சற்று விளக்குகிறேன். 'வீடுமின் முற்றவும்' என்ற நம் மாழ்வார் பாசுரத்துக்கு விளக்கம் எழுதிக் கொண்டு இருக்கும் போது, 'வீடு' என்ற சொல் எப்படி ஒரே சமயத்தில் விடுதலை, இருப்பிடம் என இரண்டு அர்த்தங்களில் வருகிறது என்பதை யோசித்தேன். தமிழ் லெக்ஸிகனைப் பார்த்த போது, வீடு என்பதற்கு ஒன்பது அர்த்தங்கள் இருப்பது தெரிந்தது. அவற்றில், 'வசிக்கும் இடம்' என்பதற்கு முதலில் பயன்பட்டது. புறப்பொருள் வெண்பாமாலையில், 'கூடார் மனை கொள்ளை சாற்றி வீடறக் கவர்ந்த வினை மொழிந்தன்று' என்று வஞ்சிப்படலத்தின் மழபுலவஞ்சியின் 'கொளு'வில் வருகிறது என்பது தெரிகிறது (கொளு என்றால், துறைக் கருத்தைத் தன்னுள் கொண்ட நூற்பா). இப்போது, புறப்பொருள் வெண்பாமாலையை எழுதிய 'ஐயனாரிதனார்' காலம் என்ன என்று தேடிக்கொண்டு இருக்கி றேன். அன்பர்கள் உதவலாம். வீடு தேடும் படலம் தொடர்கிறது.

டயபடீஸ், ஆஸ்துமா போன்ற உபாதைகள் யோகப் பயிற்சியால் குணமாகின்றன என்று சூடம்அணைத்துச் சத்தியம் செய்கிறவர்கள் இருக்கிறார்கள். அதுவும், சேதுபந்த சர் வாங்காசனம் என்று ஓர் ஆசனம்உள்ள தாம். அதை மட்டும் பண்ணிப் பார்த்தால், உடம்பில் உள்ள சர்வ ரோகங்களும் குணமாகிவிடும் என்றார்கள்.



சரி, பார்க்கலாமே என்று இதுபற்றி விஷயம் தெரிந்த நண்பருக்கு மெயில் போட்டேன். அவரிடமிருந்து வந்த பதில் இது...

யோசித்துக்கொண்டு இருக்கிறேன்.

கருத்துச் சுதந்திரம் என்பது எந்த அளவுக்குப் பொறுப்பற்றுப் போகும் என்பதற்கு உதாரணம்... யூ-ட்யூபில் தேசப்பிதா காந்தி வேஷத்தில் போல்டான்ஸ் ஆடுவதாக ஒரு வீடியோ வைத்திருக் கிறார்களாம். நான் பார்க்கவில்லை. என் மகன் பாதி பார்த்து நிறுத்திவிட்டு, அதிர்ந்து போய்ச் சொன்னது... 'இதைவிடக் கேவலப்படுத்த முடியாது. அப்பா... நீங்கள் எல்லாம் அதிர்ஷ்டம் பண் ணினவர்கள். உங்கள் இள மைக் காலத்தில் இன்டர்நெட் இல்லை!'

யூ-ட்யூப் என்பது கூகுள் அளிக்கும் உலகளாவிய, அழிக்க முடியாத சுவர்க் கிறுக்கல்!

'ரேகை' என்ற ஆவணப் படத்தில் (எழுத்து, இயக்கம்: தினகரன் ஜெய்)... ஆங்கிலேயர்கள் ஆண்டபோது சில பழங்குடி இனத்தவரைப் பொத்தாம்பொதுவாகக் குற்றப்பரம்பரை என்று வகைப்படுத்தி, நம் தடா சட்டத்துக்கு ஈடான 'குற்றப் பழங்குடிகள் சட்டம்' இயற்றி, கள்ளர், மறவர், அகமுடையார் போன்றவர்களிடம் கைரேகை வாங்கி, அவர்களுக்குண்டான உரிமைகளைப் பறித்தும், வம்ச அடையாளங்களை மறுத்தும் செய்த அநியாயங்களை விவரிக்கும் அடர் தகடை எனக்கு அனுப்பியிருந்தார்கள் (ஜெகமதி கலைக் கூடம், மதுரை-20).



சேதுபந்த சர்வாங்காசனத்தில்
யோகாசிரியர் ஐயங்கார்...



அதே ஆசனத்தை எட்டு பெக் விஸ்கி
போட்டதும் செய்த நீலமேகம்...

ஆவணப் படங்கள் மூலம் நம் சரித்திர அடை யாளங்களையும், அநியாயங்களையும் பதிவு செய்து கொள்வது ஒரு முக்கியமான பணி என்று கருதுகிறேன். பல பழைய புகைப்படங் களுடனும், காட்சிகளுடனும் திறமையாக (கொஞ்சம் மந்த கதியில்) விவரிக்கும் இந்த ஆவணத்தில், பிறமலைக் கள்ளர் போன்ற பழங்குடியினரின் அடையாளங்களை எப்படி ஆங்கிலேயர்கள் அழித்தார்கள் என்பதை அறியும்போது அவர்கள்பால் மிகுந்த அனுதாபம் எழுகிறது.

'ரேகை எடுக்கவிட மாட்டோம்' என்று பெருங்காம நல்லூரில் எதிர்த்துப் போராடியிருக்கி றார்கள். முத்துராம லிங்கத் தேவர், 'கட்டை விரலை வெட்டினாலும், ரேகை தராதே' என்றுஆணையிட்டிருக்கிறார்.

கட்டபொம்முவுக்கு முன்பே ஆங்கிலேயனை எதிர்க்கத் துணிந்தவர்கள் இந்த மறக்குலத்தவர்கள்.

எ.பி.பொ.



உலகின் ஜனத்தொகையில் பாதிப் பேருக்குப் பலாப் பழம் பிடிக்காது. மீதிப் பேருக்குப் பிடிக்கும். அவர்கள் ஒருவரை ஒருவர் கல்யாணம் செய்துகொள்வது வழக்கம்!

- **ஜிம் ஆலன்**

எ.பி.க.



அன்புருவமாய்
அமைதிப் பூங்காவாய்
கருணைக் கடலாய்
பண்புப் பெட்டகமாய்
தியாகச் சுடராய்
அழகுச் சிலையாய்
போகப் பொருளாய்
வரையறுக்கப்பட்ட அடையாளங்களில்
தொலைந்தே போனது
எம் ஆதி அடையாளம்!

- **கிருட்டிணம்மாள்** ( நன்றி: நவீன விருட்சம்)

## மவுண்ட் ரோடில் ஒரு சிலை!

புதுக்கவிதைக்கு ஒரு புதிய உபயோகம் கண்டுபிடிக்கப்பட்டு இருப்பதைச் சென்ற வாரம்தான் உணர்ந்தேன். இப்போதெல்லாம் தமிழ்நாட்டில் எந்தக் கூட்டத்திலும் அறிமுக உரைகளும் தொகுப்புரைகளும் புதுக்கவிதை வடிவில்தான் அளிக்கப்படுகின்றன. அந்த வடிவம் கவிஞர் வாலி 'இவர்கள் இன்னும் இருக்கிறார்க'ளில் உண்டாக்கிய வடிவம். Terminal rhyme கிடைக்கும்வரை நீட்டிக்கொண்டு போவது. உதாரணம்...

நீ மதுரைக்காரன்; அளவற்ற கற்பனை சவாரி செய்யும் குதிரைக்காரன்.

நீ திருவரங்கம்; உன்போல் உளரோ ஒருவரெங்கும்!

இப்படி...

பொதிகை விருதுகள் விழாவில் டாக்டர் பால இரமணியும், பேராசிரியர் ஞானசம்பந்தனின் நூல் வெளியீட்டு விழாவில் அவர் மகள் செல்வி அர்ச்சனாவும், தஞ்சை இனியனும் புதுக்கவிதையில் எங்களை வரவேற்றுப் புகழ்ந்தனர். பொதிகை விருதுகள் வரிசையில் அப்துல் ரகுமான் (கவிதை), ஜெயகாந்தன் (உரைநடை இயல்), புரிசை கண்ணப்பன் (தெருக்கூத்து), ந.முத்துசாமி (கூத்துப்பட்டறை), சாவித்திரி வைத்தி (விஷ்ராந்தி இல்லம்) கே.ஜே.சரசா (பரதநாட்டியம்), என்.ராம் (பத்திரிகைத் துறை), ராமநாதன் கிருஷ்ணன் (விளையாட்டு), டி.கே.பட்டம்மாள் (கர்னாடக இசை), சி.வி.ஸ்ரீதர் (திரைத் துறை) களஞ்சிய இயக்கம் (கிராமத்தில் மைக்ரோ கடன்கள்)... இதைவிட random ஆன பட்டியல் இருக்க முடியாது.

எனக்கு ஒளி ஊடகத் துறையில் சிறந்ததற்கு அளித்தார்கள். அப்படி என்றால் என்ன என்று சரியாகத் தெரியாமல், 'மன்னிக்க வேண்டும். ஒரு தப்பு நிகழ்ந்துவிட்டது' என்று கொடுத்த லிகிதச் சுருளைப் பிடுங் கிக் கொள்வார்களோ என்று லேசான அச்சத்தில்தான் கடைசி வரையில் நாற்காலி நுனியில் உட்கார்ந்திருந்தேன். பார்த்திருப்பீர்களே!

நிலைய இயக்குநர் ககன்தீப் சிங், ஒரு பஞ்சாபி எழுத்தாளர். அவர் களுக்கு நன்றி! பேராசிரியர் ஞானசம்பந்தனின் விழா பதற்றம் ஏதும் இல்லாமல் ஜாலியாக இருந்தது. வைரமுத்து எந்தக் கூட்டத்திலும் என் எழுத்துக்கு ஒரே ஒரு உதாரணம் தான் தருவார்... 'அவள் புன்னகை மட்டும் அணிந்திருந்தாள்'. அதே போல் பேராசிரியர் ஞானசம்பந்தனும் 'கரையெல்லாம் செண்பகப் பூ'வில், கதாநாயகன் சேற்றில் விழுந்துவிட்டுப் பழுப்பாக எழுந்திருப்பதை இதுவரை இருபது கூட்டங்களில் சொல்லி யிருக்கிறார். ஐயன்மீர்... நான் பிற விஷயங்களும் எழுதியிருக்கிறேன்.

ஞானசம்பந்தனுடன் தன் நட்பைப் பற்றி விரிவாகப் பேசினார் கவிப் பேரரசு. 'ஐம்பது வயதைக் கடந்தபின் நாமெல்லாம் வானத்தில் எறிந்த கல், திரும்பி வரும் பாதையில் இருக்கி றோம். விழும்போது நல்ல நெஞ்சங்களில் விழ வேண்டும்' என்றார். Poetic! முனைவர் ஆவுடையப்பன், மணா, சீதா ரவி, 'கல்யாண மாலை' மோகன் போன்றவர்கள் பேசப் பேச, இடைவெளியில் ஒருவருக்கொருவர் சுமார் 150 பொன்னாடைகள் போர்த் திக்கொண்டார்கள். கணக்கில்லாத டிஜிட்டல் போட்டோக்கள் எடுத்துக் கொண்டார்கள். கடைசியில் கமல் ஹாசன் பேசிய பின், ஞானசம்பந்தன் வழக்கம் போல சிரிக்கச் சிரிக்கப் பேசினார். முதல் சிரிப்பிலேயே நம்மை நிராயுதபாணி ஆக்கிவிடுவார். அதன் பிறகு, அவர் 'இன்று வியாழக் கிழமை' என்று சொன்னாலும் சிரிக்கத் தயாராகிவிடுவோம்.

அவருடைய 'சினிமாவுக்குப் போக லாம், வாங்க' என்ற புத்தகத்தை கல்கி ஆசிரியர் சீதா ரவியும், வாழ்வியல் நகைச்சுவையைக் கல்யாண மாலை மோகனும் பெற்றுக்கொண்டார்கள். திருவல்லிக்கேணி பாரதியார் இல்லத் தைச் சார்ந்த அரங்கத்தில் விழா நடந்தது. கமல் ரசிகர்கள், பேராசிரி யரின் மாணவர்கள், மதுரை நண்பர்கள், குடும்பத்தினர் என்று அரங்கம் நிரம்பி, கடைசி வரை எல்லோரும் சிரித்துவிட்டுப் பசியோடு புறப்பட்டோம்.



**'மா**யச் சதுரம்' பற்றி ஒரு சுவாரஸ்யமான கடிதம், விகடன் ஆசிரியர் குழுவைச் சார்ந்த ரவிபிரகாஷிடம் இருந்து வந்தது. எந்த எண்ணையும் ஆரம்ப எண்ணாக வைத்து, ஒற்றைப் படை எண் வரிசையில் எத்தனை பெரிய மாயச் சதுரத்தையும் அமைக்க, ஓர் எளிய முறை சொல்லியிருக்கிறார். Amazing! மாயச் சதுரம் என்ற பெயர் பொருத்தமே! உதாரணத்துக்கு இதோ, ஒரு மாயச் சதுரம். 17 x 17 வரிசையில் 289 கட்டங்கள் கொண்ட சதுரம் இது. இதில் குறுக்கே, நெடுக்கே மற்றும் மூலைவிட்டமாக எப்படிக் கூட்டினாலும் 7,463 வருகிறது.

இப்படி, மாயச் சதுரங்கள் அமைக்கப் பொதுவான ஓர் எளிய விதி இருக் கிறது. அதேபோல், இரட்டைப்படை எண் சதுரம் அமைக்கவும் ஒரு தந்திரம் உள்ளது. தெரிந்தவர்கள் அவற்றை ஒரு கார்டில் எழுதி அனுப்பலாம்.

'கற்றதும்... பெற்றதும்...' பகுதியில், 25- 5- 2003 இதழில் எழுதியது போல், சமீபத்தில் ஒரு விபத்து நிகழ்ந்திருப் பதை அறிந்து வருத்தமாக இருந்தது. 'அப்பவே நான் சொன்னேன் பார்த் தியா' என்று பெருமைப்பட்டுக் கொள்ள முடியாத விஷயம். அப்போது நான் எழுதியது இது...

'சென்னையில் எங்கு நோக்கினாலும் பலகைப் பாலம் அமைத்து, ரோடுகளில் தோண்டிக்கொண்டு இருக்கிறார்கள். எதற்காக என்று யாரும் சொல்வதில்லை. யாரோ ஒரு குழந்தை தடுக்கி விழுந்து உயிரை விட்டால் ஒழிய, பத்திரிகைகளும் கண்டுகொள்வதில்லை.

சென்னையைப் பற்றி மனதைத் தேற்றிக்கொள்ள சமாசாரங்கள் குறைந்துவிட்டன. அடை நன்றாக இருக்கிறது, டிசம்பர் சீஸன் வந்தால் கர்னாடக சங்கீதம் கேட்கலாம், மெரீனா உலகிலேயே இரண்டாவது பீச்... போன்ற

காரணங்கள் போத வில்லை.'

காணும் பொங்கல் அன்று, மெரீனா - நேப்பியர் பாலத்தின் ஓட்டை வழியாக ஒரு பெண் குழந்தை தடுக்கி உள்ளே விழுந்து உயிரை விட்டிருக் கிறாள். இதைச் சுட்டிக் காட்டிப் பல வாசகர்களும் எனக்கு போன் செய்து, 'நீங்க அப்பவே எழுதினீங்க சார்... ஆனா, எந்த அதிகாரியும் கண்டுக் கறதா தெரியலியே!' என்று ஆதங் கப்பட்டார்கள்.

இனியாவது கண்டுகொண்டு சென்னையின் ஓட்டை உடைசல்களை உடனடியாக எந்த அதிகாரியாவது சீரமைத்தால், அவருக்கு மவுன்ட் ரோடில் ஒரு சிலை வைக்கலாம்.

சில வாரங்களுக்கு முன், நான் மிகச் சிறு சிறுகதைகளைப் பற்றி எழுதியிருந்தது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். இந்த வாரம், சில இரண்டு வார்த்தைக் கதைகள் தர விரும்புகிறேன்.

**இதன் எளிய விதி தெரியுமா?**

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 469 | 526 | 583 | 640 | 697 | 754 | 811 | 868 | 7 | 64 | 121 | 178 | 235 | 292 | 349 | 406 | 463 |
| 523 | 580 | 637 | 694 | 751 | 808 | 865 | 55 | 61 | 118 | 175 | 232 | 289 | 346 | 403 | 460 | 466 |
| 577 | 634 | 691 | 748 | 805 | 862 | 52 | 58 | 115 | 172 | 229 | 286 | 343 | 400 | 457 | 514 | 520 |
| 631 | 688 | 745 | 802 | 859 | 49 | 106 | 112 | 169 | 226 | 283 | 340 | 397 | 454 | 511 | 517 | 574 |
| 685 | 742 | 799 | 856 | 46 | 103 | 109 | 166 | 223 | 280 | 337 | 394 | 451 | 508 | 565 | 571 | 628 |
| 739 | 796 | 853 | 43 | 100 | 157 | 163 | 220 | 277 | 334 | 391 | 448 | 505 | 562 | 568 | 625 | 682 |
| 793 | 850 | 40 | 97 | 154 | 160 | 217 | 274 | 331 | 388 | 445 | 502 | 559 | 616 | 622 | 679 | 736 |
| 847 | 37 | 94 | 151 | 208 | 214 | 271 | 328 | 385 | 442 | 499 | 556 | 613 | 619 | 676 | 733 | 790 |
| 34 | 91 | 148 | 205 | 211 | 268 | 325 | 382 | 439 | 496 | 553 | 610 | 667 | 673 | 730 | 787 | 844 |
| 88 | 145 | 202 | 259 | 265 | 322 | 379 | 436 | 493 | 550 | 607 | 664 | 670 | 727 | 784 | 841 | 31 |
| 142 | 199 | 256 | 262 | 319 | 376 | 433 | 490 | 547 | 604 | 661 | 718 | 724 | 781 | 838 | 28 | 85 |
| 196 | 253 | 310 | 316 | 373 | 430 | 487 | 544 | 601 | 658 | 715 | 721 | 778 | 835 | 25 | 82 | 139 |
| 250 | 307 | 313 | 370 | 427 | 484 | 541 | 598 | 655 | 712 | 769 | 775 | 832 | 22 | 79 | 136 | 193 |
| 304 | 361 | 367 | 424 | 481 | 538 | 595 | 652 | 709 | 766 | 772 | 829 | 19 | 76 | 133 | 190 | 247 |
| 358 | 364 | 421 | 478 | 535 | 592 | 649 | 706 | 763 | 820 | 826 | 16 | 73 | 130 | 187 | 244 | 301 |
| 412 | 418 | 475 | 532 | 589 | 646 | 703 | 760 | 817 | 823 | 13 | 70 | 127 | 184 | 241 | 298 | 355 |
| 415 | 472 | 529 | 586 | 643 | 700 | 757 | 814 | 871 | 10 | 67 | 124 | 181 | 238 | 295 | 352 | 409 |

இரண்டு வார்த்தைக் கதைகளில் உள்ள தந்திரம் என்னவென்றால், தலைப்பிலேயே முக்கால்வாசிக் கதையைச் சொல்லிவிட வேண்டும். அதன்பின், இரண்டு வார்த்தைகளில் முடித்துவிடலாம். ஸ்டான்லி புபியன் இதில் கெட்டிக்காரர்!

உதாரணமாக, அவருடைய மூன்று கதைகள்... கொஞ்சம் யோசித்தால் தான் புரியும்.

**1. கரடி வேஷம் போட்டவனின் வாழ்வில் ஒரு நாள்..!**

'அய்யோ... சுட்டுடாதே!'

**2.பிரார்த்தனைக்கு வந்த பதில்**

'ம்? ம்ஹூம்!'

**3. வாத்து சுட்டவனின் இறுதிக் கணம்**

'டேய்... ஒதுங்குடா!'

இவ்வகையில் வாசகர்களும் முயற்சி செய்யலாம்.

### எ.பி.க.



கடையில்
தசை விட்டுப் பசை
பொருத்த மனித உறுப்புகள்
விரைவில் கிடைக்கும்
விஞ்ஞான காலம் வரும்வரை
வீதியில் வாகனங்களும்
விரைந்து போகும்!

- **லாவண்யா**

### எ.பி.ஹை.



கட்டிக்கொடுத்த
புத்தகக் கட்டின்
கிழிந்த விளிம்பில்
லேசாக எட்டிப் பார்த்தது
அச்சடித்த பக்கங்கள்!

- **ஆர்.நாகப்பன்** (தொகுப்பு: ‘என் வீடும் ஒரு குருவிக் கூடும்.’)

## பெண்களின் மத்தியான தேசம்!

### ஒற்றைச் சாட்சி



சொல்லாமல் விடப்பட்ட காதலை
மரக்கன்று ஒன்றை நடுவதன் மூலம்
சொல்லிவிட முடியாதுதான் என்றாலும்
இதுநாள் வரை நீருற்றிக் காத்துவந்த
வாகைமரம் பூத்து உதிர்க்கும்
வெளிறிய பூக்களின் நெடி
உன்னை நோக்கி நீள
ஏதாவது விருட்சத்தின் அடியில்
நீயும் நின்றிருக்கலாம்
நிராகரிப்பின் ஒற்றை சாட்சியாய்!

- **சுகிர்தராணி**
(தொகுப்பு: அவளை மொழிபெயர்த்தல்)

**எ.பி.க.**

காதலர் தினத்துக்குப் பரிசாக இரண்டு காதல் கவிதைகள். ஒன்று, சங்க காலம்; மற்றது, சமகாலம்!



**வில்லும் விரலும்**

பொய்கை ஆம்பல் அணிநிறக்
கொழுமுகை
வண்டு வாய்திறக்கும் தண்துறை ஊரனோடு
இருப்பின் இருமருங்கினமே கிடப்பின்
வில்லக விரலின் பொருந்தி அவன்
நல்லகம் சேரின் ஒருமருங்கினமே

-**வில்லக விரலினார்** (குறுந்தொகை 370)

(பொய்கையில் ஆம்பல் மலர்மொட்டுகளை வண்டுகள் திறக்கும் துறையூர்க்காரனோடு உட்கார்ந்திருக்கும்போது இருவராக இருப்போம். படுத்துக்கொண்டால் வில்லைப் பிடித்த விரல்களைப் போல அவன் உடலைக் கட்டிக்கொண்டு ஒருவராவோம்.)

**மே**லும் இரண்டு ஆவணப் படங்கள் என் பார்வைக்கு வந்தன. எழுத்தாளர் மா.அரங்க நாதனைப் பற்றி ரவிசுப்பிர மணியன் எடுத்த படமும், மௌனத் திரைப்படங்களின் வரலாறு சொல்லும் ‘பேசா மொழி’ என்ற படமும் (கருத்து, இயக்கம்: ம.செந்தமிழன்).



அளவோடு பின்னணி இசை, மற்றும் குரல் வர்ணனையுடன், இலக்கிய வட்டங்களுக்கு வெளியே அதிகம் அறியப்படாத எழுத்தாளரை இயல்பாகப் பேசவிட்டுப் படம் பிடித்திருக் கிறார் ரவிசுப்பிரமணியன். ஜே.கிருஷ்ணமூர்த்தியின் தாக்கமுள்ளவர் அரங்கநாதன் என்பது தெரிகிறது.

செந்தமிழனின் ஆவணப் படத்தில் மௌனப் படங்கள் பற்றி நிறைய ஆராய்ச்சி செய்திருப் பது தெரிகிறது. இந்தப் படத்தில் குறிப்பிடப்படும் சாமிக்கண்ணு வின்சென்ட் என்பவரின் வாழ்க்கையில் ஒரு முழு நீளத் திரைப்படத்துக்கான கதை இருக்கலாம். திருச்சியில் ரயில்வே ட்ராஃப்ட்ஸ்மேனாக இருந்தவர்; சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரெஞ்சுக்காரர் களிடம் துண்டுப் படங்கள் வாங்கி, கிராமம் கிராமமாக புரொஜெக்டரும் கிராமபோனும் எடுத்துச் சென்று, டூரிங் சினிமா படம் காட்டியிருக்கிறார்.

செந்தமிழன் எழுதிய ‘டிராகுலாவின் காதலிகள்’ என்ற ஆராய்ச்சிக் கட்டுரையையும் ரசித்தேன். மெகா சீரியல்களை உளவியல்ரீதியாகத் திறமையுடன் ஆராய்கிறது (இவரே ஒரு சீரியல் எழுத்தாளர், தயாரிப்பாளர்).

மெகா சீரியல்களில் ஒரே ஒரு கதைக்கு தான் அனுமதி (அது நல்லதங்காள் கதையின் hangover). ஒரு பெண் தியாகம் செய்ய அல்லது கஷ்டப்பட, சுற்றுப்பட்ட மற்ற ஆண்களும் பெண்களும் பெரும்பாலும் கெட்டவர்களாக இருக்க வேண்டும். நானூற்றுச் சொச்சம் எபிசோடுகள் முடிந்ததும், விடிவுக்காலம் வர வேண்டும். இந்த ஒரே ஒரு கதையைத்தான் எல்லா மெகா சீரியல்களும் தருகின்றன; தர வேண்டும். இதை மாற்றும் முயற்சிகள்



அனைத்தும் தோற்றுப் போயின.

ஒரு நாளைக்கு 25 சீரியல்கள் வருகின்றன. அவற்றில் இல்லத்தரசி 11 சீரியல்களாவது பார்க்கலாம். இதில் போய் 'மனதில் தங்கும்படியாக' கதை சொன்னால், மற்ற கதைகளை மறந்துவிடுவாள். தொலைக் காட்சி பெண்கள் உலகம். முழுக்க முழுக்கப் பெண்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டிருக்கும் மத்தியான தேசம். சானிட்டரி நாப்கின், சோப்பு, அலங்கார வஸ்துக்கள்... ஏன், கருத்தடைச் சாதனங்களின் உலகத்தை எட்டிப் பார்க்கத்தான் ஆண்களுக்கு அனுமதி என்ற வசீகரமான கருத்து சொல்லியிருக்கும் செந்தமிழன், ஒன்று சொல்ல மறந்துவிட்டார். தமிழில் மெகா சீரியல்கள் அனைத்தும் யாராவது ஒரு மாஜி நடி கையை மையமாக வைத்து எழுதப்பட வேண்டிய கட்டாயத்தினால்தான் இந்தக் கதையமைப்பு திணிக்கப்படுகிறது. ராதிகா, தேவயானி, மீனா, சுகன்யா, கௌசல்யா அனைவரும் மாற்றி மாற்றி தியாகம் செய் தாக வேண்டும். இல்லையேல் டி.ஆர்.பி. சரிந்துவிடும்.



சென்ற வாரம் 'ரேகை' ஆவணப் படம் மக்கள் தொலைக்காட்சியில் காட்டப்பட்டது. இவ்வகையிலான ஆவணப் படங்களுக்கு ஒரு புதிய களமாக மக்கள் டி.வி. போன்ற தொலைக்காட்சித் தடங்கள் இடம் தருவதை வரவேற்கிறேன். என் னிடம் பலர் மக்கள் டி.வி-யைப் பரிந்துரைத்து, 'அதைப் பற்றி ஏன் எழுதுவ தில்லை, பார்ப்பதில்லையா?' என்று அதட்டிக் கேட்டிருந்தார்கள். 'செட் டாப்' பாக்ஸில் 140-வதாக ஒளித்துவைத்திருந்த தால், விரல் அலுக்க அழுத்தித் தேடிப் பிடித்தேன். மற்ற தொலைக்காட்சி சேனல்களைவிட சற்று விலகி இருக்கிறது. பயனுள்ள நிகழ்ச்சிகள் தருகிறது. வேலை தேடித் தருகிறது.



சினிமா பிடிவாதத்திலிருந்து மீள் வதற்கே தைரியம் வேண்டும். அல்லது, ஏதாவது ஓர் அரசியல் கட்சியின் பண பலம் வேண்டும். கொஞ்சம் முனைந்தால், பி.பி.எஸ். (PBS) தரத்துக்குப் போகலாம். கொள்ளை லாபம் சம்பாதிக்கும் சோப்பு, சாக்லெட், தங்க நகை, பட்டுப்புடவை, மைசூர்பாக் நிறுவனங்கள் தர்மகாரியமாக இதற்குக் கொஞ்சம் நிதி ஒதுக்கலாம். பி.பி.எஸ். அப்படித்தான் செயல்படு கிறது.

'சத்ய சாய்பாபாவை நீங்கள் போய் தரிசனம் செய்யவில்லையா?' என்று எனக்கு சிலர் மெயில் போட்டிருக்கிறார்கள்.



'ரஜினிகாந்த், சச்சின், கலைஞர், எஸ்.எம்.கிருஷ்ணா, குமாரசுவாமி, சிவராஜ் பாட்டீல் என்று பல்வேறு தலைவர்கள் பார்த்து, தங்கச் சங்கிலி, மோதிரம் எல்லாம் காற்றிலிருந்து பெற்றுக்கொண்டு இருக்கிறார்கள். சாய்பாபாவைப் பார்த்த கையோடு சச்சின் 160 ரன் அடித்திருக் கிறார். நீங்களும் போய் குட்டியாக ஒரு மோதிரம் பெற்றுக்கொள்ள வேண்டி யதுதானே? 'கற்றதும்... பெற்றதும்...' சிறப்பாக எழுத வருமே?' என்று கேட்டார்கள்.

சாய்பாபாவின் மந்திரச் செயல் களை க்ளோஸப்பில் விளக்கும் வலை மனையே உள்ளது. அவர் எடுத்துக் கொடுக்கும் சங்கிலிகள் அவரிடம் எப்படிக் கொடுக்கப்படுகின்றன என் பதை ஸ்லோமோஷனில் காட்டுகிறார்கள். இருந்தும், சாய்பாபாவுக்கு வரும் கூட்டம் இம்மியளவும் கம்மி ஆவதில்லை. இதன் காரணம் என்ன? சிறந்த அறிவியலாளர்கள்கூட அவ ரது பக்தர்களாக இருக்கிறார்களே, இது எப்படி?

இதன் விடை எளிதானது. அறிவியல் சிந்தனையை ஓரளவுக்கு மேல் தொடர்ந்தால், வாழ்வில் எல் லாமே அர்த்தமற்றதாகப் போய்விடும். பிரபஞ்சமே வேஸ்ட் என்றாகிவிடும். ஷேக்ஸ்பியரின் மாக்பெத் சொல்வது போல்,

‘Life’s but a walking shadow, a poor player
That struts and frets his hour upon the stage
And then is heard no more: it is a tale
Told by an idiot, full of sound and fury,
Signifying nothing.’

(வாழ்க்கை என்பது ஒரு நடமாடும் நிழல் மேடையில், தன் நேரத்தில் தடுக்கித் திணறிவிட்டு மறைந்து போகும் மோசமான நடிகன் நடித்த, ஒரு முட்டாள் சொன்ன கதை; ஆரவார மும் சீற்றமும் நிரம்பி எதையுமே நிரூபிக்காத கதை) என்ற முடிவுக்கு வர வேண்டியிருக்கும். ஓர் எல்லைக்கு மேல் கேள்வி கேட்காமல் நம்ப வேண்டியிருக்கிறது.

சிலருக்கு சாய்பாபா. எனக்கு, ‘காரணன் நீ, கற்பவை நீ, கற்றவை நீ’ என்னும் நாரணன் ஸ்ரீரங்கநாதன்!

மாறாக, என் மாமனாரின் தமையனார் செங்காடு நாராயண சுவாமியின் 100 வயது நிறைவுக்குச் சென்று ஆசீர்வாதம் பெற்றேன். கிண்டி பொறியியல் கல்லூரியில் படித்த, 100 வயசைத் தாண்டிய பழைய மாணவர் (ஆலம்னஸ்) இவர் ஒருவர்தான்!

நெய்வேலியில் தலைமைப் பொறியாளராக இருந்து ஓய்வுபெற்றவர். இன்னும் ஞாபக சக்தி தடுமாறாமல் இருக்கிறது (சிலவேளை, பேத்திக்குப் பேத்தியின் பேர் கேட்டால் மட்டும் சட்டென்று ஞாபகம் வருவதில்லை). அதிக நேரம் உட்கார முடியவில்லை, முதுகு வலிக்கிறது என்கிறார். ‘வேத நூல் பிராயம் நூறு’ என்று தொண்டரடிப் பொடியாழ்வார் சொன்னதில் உண்மை இருக்கிறது. எக்ஸாஸ்ட் புகையும் செல்போனும் இல்லாத அந்தக் காலங்களில் பலர் 100-ஐக் கடந்திருக்கிறார்கள். ராமானுஜர் 120 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார்!

> **எ.பி.பொ.**
>
> ‘எல்லாமே மாயை. எதுவுமே நிலையில்லை என்றால், நான்
> நிச்சயம் என் கார்பெட்டுக்கு அதிக விலை கொடுத்துவிட்டேன்!’
>
> – **உடி ஆலன்**

## ஸ்வீட் ஷா(ரூ)க்!

1லிருந்து 100 வரை எத்தனை முறை 9 வரும்?

(‘கோன் பனேகா குரோர்பதியில் கேட்ட கேள்விக்கு விடை 20)




எஸ்ஆர்கே-யின் கேபிசி-யில் அமிதாபுடன் ஒப்பிடுவதிலிருந்து தப்பிக்க முயற்சிக்கிறார் ஷாரூக்கான். ‘பவுஜ்’ என்ற தொலைக்காட்சித் தொடரில் முதலில் தலையைக் காட்டி, சினிமாவுக்குப்போய் வென்று முழுவட்டமாக மறுபடி தொலைக்காட்சிக்கு ஒரு சூப்பர் ஸ்டாராக வந்திருக்கிறார். அடிக்கடி கட்டிக்கொள்கிறார்; கண்ணடிக்கிறார்; உம்மா கொடுக்கிறார்; ஜோக் அடிக்கிறார். அது சிலருக்கு உவப்பதில்லை. குறிப்பாக, சென்ற வாரம் ஒரு பள்ளி ஆசிரியை ஆள் காட்டி விரல் காட்டி அதட்டியே சொல்லிவிட்டார், ‘என்னைக் கட்டிக் கொண்டால் அடிப்பேன்’ என்று. ஆனால், ஷாரூக் அசரவில்லை.

ஆசிரியையின் அம்மாவைக் போய்க் கட்டிக்கொண்டு, செக்கை அவரிடம் கொடுத்தார்.



ஷாரூக் செய்த சில காரியங்கள் இன்ப அதிர்ச்சிகளை ஏற்படுத்தியிருக்கும். ஒண்ணேகால் லட்சம் வரை ஜெயித்து விட்டு, ஒரு தப்பான பதிலால் இருபதாயிரத்துக்குச் சரிந்து விட்டவருக்கு ஆறுதலாகத் தன் கைக் கடிகாரத்தைக் கழற்றிக் கொடுத்தார்.

“உனக்குக் கல்யாணமானாலும் பரவாயில்லை; உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பு கிறேன்” என்று சொன்ன இளம் பெண்ணிடம், “என் மனைவியிடம் கேட்டேன். யாராவது என் கஷ்டத்தைப் பகிர்ந்து கொண்டால் சரி என் றாள்” என்றார். வெல்டன் ஷாரூக்!

விஜய் டி.வி-யில் இந்த நிகழ்ச்சியின் தமி ழாக்கத்தில், ஷாரூக் போலவே பேசும் குரலாளி யார்?

**அ**பர்ணா சென் 2005-ல் எடுத்த ‘15, பார்க் அவென்யு’ என்ற இந்திய ஆங்கிலப் படத்தைப் போன வாரம் ‘சோனி’யில் காட்டினார்கள்

ஒரு ஷிட்ஸோப்ரினிக் (மனம் சிதைந்த) பெண்ணாக கொன்கணா சென் ஷர்மா(அபர்ணா சென்னின் புதல்வி) வின் மிகச் சிறந்த நடிப்புக்காக இந்தப் படத்தின் மந்த கதியையும் சில செயற்கையான உரையாடல் களையும் மன்னிக்க முடிகிறது. ஷபானா ஆஸ்மி இயற்பியல் புரொபசராக நடிக்கிறார். தன் தங்கையின் மனச் சிதறலை எப்படி எதிர்கொள்வது என்று திண்டாடும்போது, தன் வாழ்க்கையையும் தொடர முடியாமல், தங்கைக்கும் பரிகாரம் தெரியாமல் தவிக்கும் பாத்திரம்.




கொன்கணா சென் ஷர்மா (மிஸ்டர் அண்ட் மிஸஸ் ஐயர் நினை விருக்கலாம்) தங்கையாக தன் தனி உலகத்தில் வாழ்கிறாள். அதில் அவளுக்குக் கல்யாண மாகி 5 குழந்தைகள் இருப்பதாகவும் (அவர் களுக்குப் பெயர்கள் இருக்கின்றன.), பெரிய வீடு 15, பார்க் அவென்யுவில் இருப்பதாகவும் நம்புகிறாள். கணவன், அவளை நிராகரித்த ஜோ ஜோ (ராகுல் போஸ்), சதாம் உசேன் கூட வருவார். அவளைப் பொறுத்தவரை அவளது உலகம்தான் நிஜம்!

படத்தின் இறுதியில், அந்த இல்லாத விலாசத்தை அவர்கள் தேடிப்போவது ஒரு சர்ரியல் முடிவு. இது 2006, லண்டன் ஃபிலிம் பெஸ்டிவலில் காட்டப்பட்டது.

36 படங்களில் நடித்துவிட்டு, 8 படங்களை இயக்கியிருக்கும் அபர்ணா, மனச் சிதறல் பற்றித் தான் படித்த, பார்த்த அத்தனையையும் திரைக்கதையாக எழுதியிருக்கிறார். அதனால் படம் சில சமயம் கிளைக் கதைகளில் தடுமாறி விட்டுத் திரும்ப வருகிறது. சில சமயம் பாடப் புத்தகம் படித்துக் காட்டு கிறது

இருந்தும், பெருமைப் படத்தக்க இந்தியப் படங்களில் இதுவும் ஒன்று.

அபர்ணா, சத்யஜித் ரேயின் 'தீன் கொன்யா'வில் (1961) நடித்ததிலிருந்து எங்கோ வந்துவிட்டார். கால் மேல் கால் போட்டுக்கொண்டு ரியாசென்னுக்கு அவர் தந்த ஆங்கிலப் பேட்டி, சின்னப் பையன்களுடன் அணில் பிடித்து, மாங்காய் பொறுக்கி விளையாடும் 'ம்ருண்மொயி' பாத்திரத்தில் நடித்த பெண்ணா இவர் என்று வியப் படைய வைக்கிறது.

**சி**ல வாரங்களுக்கு முன், ஒரு புது மணத் தம்பதியரைப் பற்றி எழுதியிருந்தது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். அவர்களை மறுபடி ஒரு 'கெட் டு கெத'ரில் சந்தித்தேன். நண்பர் ஒருவரின் குட்டிக் குழந்தைக்குப் பெயர் சூட்டும் விழா.



சேகர் (அது இவர்தான்!)

"உங்ககிட்டருந்து எப்ப நற்செய்தி?" என்றேன்.

"என்ன சார்... கல்யாணமாகி ஆறு மாசம் தான் ஆச்சு!" என்றான்.

"இன்னும் மூணு வருஷத்துக்கு இல்லை சார்!" என்றாள் அவன் மனைவி.

"சரி, எப்படிப் போயிட்டிருக்கு லைஃப்?"

"ஃபர்ஸ்ட் க்ளாஸ்! கல்யாணம் ஆனதிலிருந்து, என் முதுகில இருந்த அரிப்பெல்லாம் போயிடுச்சு சுஜாதா சார்!" என்றான்.

நான் அவன் மனைவியை வியப்பாகப் பார்க்க, "தினம் ராத்திரியானா இவருக்கு முதுகு சொரிஞ்சு விடணும்" என்றாள்.

"என்ன சார் பண்றது... முதுகில் ஒரு ஏரியா இருக்கு. இன்னொருத்தர் உதவி யில்லாம தொடவே முடியாது! விசிறிக் கட்டை, பால்பாயின்ட் பேனான்னு என்ன என்னவோ வச்சு ட்ரை பண்ணாலும் அணுகவே முடியாது. மனைவிதான் சரி!" என்றான்




நான் யோசித்துப் பார்த்ததில், அவன் சொல்வதில் உண்மை இருப்பது புரிந்தது.

"சுவத்தில் வச்சுத் தேச்சுக்கலாமே?"

"ம்ஹூம்! அதுல ஒரு 'கான்கே விட்டி' இருக்கு. சில பேர் இதுக் குன்னே கல்யாணம் பண்ணிக்கிறாங்க தெரியுமா?"

"சேச்சே! டூ மச்!"

"ஆமா சார்! இவர் இதுக்காகத்தான் முக்கியமா என்னைக் கல்யாணம் செய்துட்டிருக்கார். அதுக்கும்..." என்று அவள் அவனைப் பார்க்க,

"வெந்தயக் குழம்புக்கும்" என்றான் அவசரமாக. "அதுக்கு நன்றிக் கடனா என்னவெல்லாம் செய்யறேன்... சொல்லும்மா சார்ட்ட..."

"ஒண்ணும் பண்றதில்லை. 24 மணி நேரமும் கிரிக்கெட் பார்த்துண்டிருக்கார். எல்லாம் பழைய மேட்ச்!"

"ஏய்... உள்பாவாடையை ஒட்டப் பிழியணும்னா என்னைத்தான் கூப்பிடுவா!"

"வாஷிங்மெஷின்ல ஸ்பின் டிரை யர் வேலை செய்யலை. அதனால..!"

"அப்புறம், சாக்கடை குத்த?"

“சாக்கடை அடைச்சுண்டா முனிசி பாலிட்டியையா கூப்பிடறது?”

“ஒரு முதுகு சொரிய எத்தனைப் பாடு பார்த்தீங்களா? ஆனா சார்... இட்ஸ் ஆல் வொர்த் இட்! நடு முதுகுல சொரியறது இருக்கு பாருங்கோ... சொர்க்கம்! பாதாம் பர்பி, மதுரை மணியுடைய ரஞ்சனிக்கப்புறம் இதுலதான்...”

அதிர்ஷ்டக்காரர்கள்!

### எ.பி.பொ.



‘**தி**னமும் குளித்துத் துடைத்து தலைவாரி, ஆடை அணிந்து
வெளியே செல்லும்போது ஏதோ ஒரு நாடகத்தில்
நடிக்கப்போவது மாதிரியே இருக்கிறது!’

- **பாதசாரி**

### எ.பி.ஹை.



**பி**ளாட்பாரத்தில்
பலூன் விற்பவனுடன்
ஒட்டிக்கொண்டு
பாடப் புத்தகம்
படிக்கும் சிறுமி!

- **மார்கன்**

### எ.பி.க.



கையில் காசு இருந்தால்
டாஸ்மாக் போவான்
இல்லையென்றால் செய்யது பீடி
பிடித்துக்கொண்டிருப்பான்
தோன்றினால் மட்டும்
கவிதை எழுதுவான்!

-**விக்ரமாதித்யன்**
(‘அமர்-நிகழ்ச்சி நிரல்’ கவிதையிலிருந்து)

## யாமாமா நீ யாமாமா... மாமாயா நீ மாமாயா..!

**மா**யச் சதுரம் தொடர்பாகப் பல கடிதங்கள் வந்தன. சென்னை, அண்ணாநகர் சி.எஸ்.லட்சுமி நாரா யணன், ஒற்றைப்படை வரிசையில் மாயச் சதுரம் அமைக்க எளிய வழி எழுதியிருந்தார். அவரே 4x4 மாயச் சதுரத் துக்கும் வழி சொல்லியிருந்தார். சாலிகிராமம் எம்.கிருஷ்ணன் 27x27 மாயச் சதுரமும், பெங்களூரு பா.செல்வபாலாஜி, 29x29 மெகா மாயச் சதுரமும் அனுப்பியிருந்தார்கள். டாக்டர் மெய்யப்பனின் ‘மாயக் கட்டங்கள்’ என்ற புத்தகத்தைக் குறிப்பிட்டு இருந்தார் (என்.சி.பி.எச். வெளியீடு) செல்வபாலாஜி. அம்பத்தூர் மணி சொல்லியிருந்த வழி கொஞ்சம் சிக்கலானது. அதேபோல சைதாப்பேட்டை கிருஷ்ணமூர்த்தியும் படு சிக்கலான ஒரு கணக்கு போட்டிருந்தார். திண்டுக்கல் கே.பி.சக்கரை காட்டிய சாதாரண வழி, சிறப்பு வழி இரண்டுமே தலை சுற்றியது. மதுரை ஜங்ஷனில் ஸ்டேஷன் மாஸ்டராகப் பணிபுரியும் டி.ஆர்.ஜோதிலிங்கம் தன் மாயச் சதுரம், சுடோகு சாதனைகளை விவரிக்கும் கடிதத்துடன் அது தொடர்பான பத்திரிகைச் செய்திகளையும் அனுப்பியிருந்தார். அனைவருக்கும் பாராட்டுக்கள்.



ஒற்றைப்படை மாயச் சதுரம் அமைக்கும் சுலபமான வழி இது...

ஏதாவது முதல் எண்ணை மேல் வரிசையில் நடுக் கட்டத்தில் வைக்கவும். அடுத்து, அதனுடன் ஏதாவது ஒரு எண்ணைக் கூட்டி, முதல் எண்ணுக்கு அடுத்த அடிக் கட்டத்தில் வைக்கவும். அதன் பின், அதே வித்தியாசம் உள்ள அடுத்தடுத்த எண்களை arithmetic progression போல அதனதன் வட கிழக்கான கட்டங்களிலே வைத்துத் தாவவும். கட்டத்தைவிட்டு வெளியே தாவ வேண்டி வந்தால், நேர் எதிர்க்கோடியில் உள்ள கட்டத்தில் நிரப்பவும். ஏற்கெனவே நிரப்பப்பட்ட எண் குறுக்கிட் டாலோ, வலது மேல் மூலையை அடைந்த பின்போ, அடுத்த எண்ணைக் கீழ்க் கட்டத்தில் வைக்கவும். அவ்வளவு தான் மேட்டர்!

கீழே உள்ள படத்தைப் பார்த்தால் புரிந்துவிடும். 7-ல் தொடங்கி ஐந்து ஐந்தாகக் கூட்டிப் போடப்பட்டுள்ள இந்தச் சதுரத்தை எந்தப் பக்கம் கூட்டினாலும் 81 வரும். இப்படி ஒற்றைப்படையில் எத்தனை பெரிய மாயச் சதுரம் வேண்டுமானாலும் அமைக்கலாம்!




இரட்டைப் படைச் சதுரம் கொஞ்சம் படுத்தும். ஆனால், அதுவும் சாத்தியமே!

இப்போது இரட்டை வார்த்தைக் கதைகளைப் பார்த்துவிடலாம். வந்ததில் எல்லாம் தேசலாக இருந்தன. இரண்டு கதைகளை ஒப்பேற்ற முடிந்தது. அவை தனித் தனிப் பெட்டிகளில்! அந்தக் கதைகளை எழுதிய இருவருக்கும் க-பெ புத்தகப் பரிசு.

இதையெல்லாம் எழுதிக்கொண்டு இருக்கும்போது, நண்பர் வி.ஜே.மகாலிங்கம் வந்தார். என்னைவிட மூன்று வயது பெரியவர். மூன்று மகன்களும் அமெரிக்காவில். மனைவியை இழந்த பின், மாம்பலத்தில் தனியாக வாழ்கிறார்.

“தின வாழ்க்கை எப்படிச் செல்கிறது?” என்று விசாரித்தேன்

“ஃபர்ஸ்ட் கிளாஸ்! தினம் காலை ஐந்தரை மணிக்கு எழுந்துவிடுவேன் பார்க்கில் நடந்து செல்கையில் விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்வேன். சரவணாவில் போய் காபி, ரெண்டே

ரெண்டு இட்லி. டிபன் பாக்ஸில் டாண்ணு மாமி சாப்பாடு வந்துடும். சாயங்காலமானா மண்டபத்தில் ஏதாவது ஒரு உபன்யாசம்... திருப் பாவை, கீதகோவிந்தம், பஜகோவிந் தம் இப்படி! ராத்திரி சப்பாத்தி, டம்ளர் பால். 9 மணிக்கு நியூஸ் கேட்டுட்டுத் தூக்கம். பைத்தியக்கார சீரியல் எதுவும் பார்க்கிறதில்லை. மாசம் தவறாம பெருமாள் சேவிக்க திருப்பதி செல்வேன். க்ரீன் கார்டுக்காக வருஷத்தில் ஒரு முறை அமெரிக்கா. இதுவரை அதற்கான தெம்பை பகவான் கொடுத்திருக்கார். டிசிப்ளிண்ட் லைஃப்!"

“பொழுதுபோக்கு?”

“என் பொழுதுபோக்கு விநோத மானது. ஆங்கிலத்தில் பாலிண்ட் ரோம்கள் சேர்ப்பது” என்றார்.

“இன்ட்ரெஸ்ட்டிங்” என்றேன்.

‘பாலிண்ட்ரோம்’ என்றால் வலம் இடமாகவும், இடம் வலமாகவும் ஒரே வடிவமுள்ள வாக்கியம்... ‘மாலா போலாமா?’, ‘தேரு வருதே’ போல!

“தமிழ்ல நீளமான பாலிண்ட் ரோம் இருக்கிறதா, சொல்லு! பெரிய எழுத்தாளன் நீ” என்றார்.

“திருஞான சம்பந்தர் ‘மாலை மாற்று’னு ஒரு பதிகமே அமைச்சிருக்கார். யாமாமா நீ யாமாமா யாழீ காமா காணாகா காணா காமா காழீயா மாமாயா நீ மாமாயா” என்றேன்.

“என்ன அர்த்தம்?”

“சிற்றுயிரான நாங்கள் கடவுள் என்றால், பொருத்தமா? நீ ஒருவனே கடவுள் என்றால், பொருந்தும். ஆம் ஆம்!”

“அப்டிங்கறே?”

“ஆமாமா, அப்படித் தான்! சரி, நீங்க ஏதாவது சொல்லுங்க!”

“எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இங்கிலீஷ்லன்னா இருக்கு! இதுவரைக்கும் 776 சேர்த்திருக்கேன். நீ சொன்னது ரொம்பச் சிக்கல். நான் இங்கிலீஷ்ல இருக்கிற மாதிரி கொஞ்சம் சிம்பிளா எதிர்பார்த்தேன்.”

“எந்த மாதிரி?”

“இந்த மாதிரி... Anal sex at noon taxes lana. இந்த மாதிரி தமிழ்ல உன்னால் அமைக்க முடி யுமா?”

அவர் மேல் எறிய கனமான புத்தகம் தேடுவதற்குள் புறப்பட்டுவிட்டார்.




வாசகர்களும் எழுதி அனுப்பலாம். இருப்பதிலேயே நீண்ட தமிழ் (வெஜிடேரியன்) பாலிண்ட்ரோமுக்குப் பரிசு - உயிர்மை பதிப்பகம் வெளியிட்ட கணையாழியின் கடைசி பக்கங்களின் முழுத் தொகுப்பு!

திருவரங்கத்தில் வசிக்கும் என் தம்பி எஸ்.ராஜகோபாலன், தான் படிக்கும் நல்ல கட்டுரைகளை எனக்குத் தவறாமல் அனுப்புவார். இந்த முறை ‘டைம்’ பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகள் சிலவற்றை அனுப்பியிருந்தார். உள்ளுணர்வு, மூளையின் வரைபடம், மூளை எப்படித் தீர்மானிக்கிறது... இது போன்ற விஷயங்களைப் பற்றிய கட்டுரைகள்.

100 பில்லியன் நியூரான்கள் சேர்ந்து ‘நான் இருக்கிறேன்’ என்கிற உள்ளுணர்வை எப்படி ஏற்படுத்து கின்றன என்பதை ஆராய்ந்து கொண்டு இருக்கிறார்கள். இதற்காக நவீன ஸ்கேன் முறைகளைப் பயன்படுத்தும்போது, சில ஆச்சர்யமான முடிவுகளுக்கு வந்திருக்கி றார்கள்.

தெரிந்த ஓர் இடத்தையோ முகத்தையோ கற்பனை செய்யும்போதும், அதே இடத்தை நேரில் பார்க்கும் போதும் அதே நியூரான்கள் இயங்குகின்றனவாம். இதிலிருந்து எண்ணம் என்பதும், செயல் என்பதும் மூளைக்குள் தொட்டுக்கொள்கின்றன என்பது தெரிகிறது.

உள்ளுணர்வு என்பது என்ன? நான் என்றால் என்ன? பச்சை, நீலம் என்பதெல்லாம் நிறங்கள். அந்தப் பச்சைத் தன்மை அல்லது நீலத் தன்மை என்கிற சமாசாரம் மூளையில் எப்படிப் பதிவாகியிருக் கிறது? பச்சையைப் பார்ப்பதும் அதைக் கற்பனை செய்வதும் ஒன்றா, வேறு வேறா?

100 பில்லியன் நியூரான்கள் மூளையில் உள்ளன. அவை அனைத்தும் தம்முடன் இணைந்து, பின்னிப் பிணைந்து இருக்கும் அந்த ஒரே ஒரு தனிப்பட்ட ஏற்பாட்டில்தான் நீங்கள் ஒளிந்துகொண்டு இருக்கிறீர்கள். மூளையில் சந்தோஷம், நிம்மதி போன்ற உணர்ச்சிகளை விளைவிக்கும் நியூரான் பிரதேசங் களை எஃப்.எம்.ஆர்.ஐ. ஸ்கேன் மூலம் கண்டறிய முடிகிறது. இப்படி மூளையின் பல பேட்டைகளை சிந்தாதிரிப்பேட்டை மாதிரி மேப் வரைந்திருக்கிறார்கள்.

புத்த பிட்சுக்களைக்கூட ஸ்கேன் பண்ணியிருக்கிறார்கள். 10,000 மணி நேரம் தியானத்தில் இருக்கும் புத்த பிட்சுக்கள் தங்கள் மூளையின் நிம்மதிப் பிரதேசங்களை அதிகரித்துக்கொண்டு இருப்பதைக் கவனித்திருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| 42 | 7 | 32 |
| 17 | 27 | 37 |
| 22 | 47 | 12 |

ஒரு நிமிஷத்துக்கு 750 மில்லி ரத்தம் பாயும் மூளையில் ஏற்படும் டென்ஷன் நிறைந்த வாழ்வில், மன அழுத்தத்தைக் குறைக்க ஏழு எளிய வழிகள் உள்ளன.

1. நீண்ட மூச்சு விடுங்கள்.

2. விடுமுறையில் செல்லுங்கள்.

3. நண்பர்களை அதிகரியுங்கள்.

4. தவறாமல் தேகப் பயிற்சி செய்யுங்கள்.

5. பழம் சாப்பிடுங்கள்.

6. சீக்கிரம் தூங்குங்கள்.

7. பிடித்தமானதைச் செய்யுங்கள்.

சிம்பிள்!

**எ.பி.க.**



இப்போதெல்லாம்
நாம் சந்தித்த இடங்களில்
யாருமே அமர்வதில்லை
வெறும் மஞ்சள் பூக்களே
சிதறிக்கிடக்கின்றன!

**- அட்லாண்டா சீனிவாசன்**

எ.பி.பொ.

**‘சா**காத இலக்கியம் படைப்பதைவிட,
சாகாமல் இருக்கவே நான் விரும்புகிறேன்!”

- **உ.டி.ஆலன்**

## ஆஸ்துமா பயமா?

**த**மிழ் மையமும் தமிழக அரசின் சுற்றுலா வளர்ச்சித் துறையும் இணைந்து, ஐ.ஐ.டி. திறந்தவெளி அரங்கில் கலைஞர் துவக்கிவைத்த ‘சென்னை சங்கமம்’ என்னும் விழாவில், தமிழ்நாட்டின் அசலான நாட்டுப் புறக் கலை வடிவங்கள் அனைத்தும், தோட்டாதரணியின் பிரமாண்டமான மேடை ஏறின. நகரத்தின் பல தெருக்களிலும் பூங்காக்களிலும் இடம்பெற ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கலைஞர் தன் சரியான வழித்தோன்றல் என்று சான்றிதழ் தந்த கனிமொழியின் செல்லத் திட்டம் இது. அடுத்த ஆண்டில் இந்த விழா தனக்கென ஓர் அந்தஸ்தும் தன்னாட்சியும் பெற்று மக்களிடையே இயல்பாகப் பரவி, அவர்களே நடத்துவார்கள் என்ற நம்பிக்கையில் கோலாகலமாகத் துவங்கியிருக்கிறார்கள்.

அது தொடர்பான ஓர் ஒலித்தகடு/ஒலிநாடாவை டைரக்டர் வஸந்த் வெளியிட, அடியேன் பெற்றுக்கொண்டேன்.



பாம்பே ஜெயஸ்ரீ, ஸ்ரீனிவாஸ், சங்கர் மகாதேவன், பிரசன்னா, சித்ரா போன்ற வர்கள் சங்கப் பாடல்களிலிருந்து துவங்கி, கனிமொழியின் புதுக்கவிதைகள் வரை மேற்கத்திய இசையும் நாட்டுப்புற இசையும் உறுத்தாமல் கலந்து சிறப்பாகப் பாடிய பாடல்கள், நிச்சயம் இந்த முறையைப் பிர பலமாக்கும்.

‘கற்பூரம் நாறுமோ’ என்ற ஆண்டாள் பாசுரம், சிந்து பைரவியில் சோகமும்



அந்நியோன்யமும் கலந்து ஒலிக் கிறது (பாம்பே ஜெயஸ்ரீ). அப்பரின் ‘நாமார்க்கும் குடியல்லோம்’ சூஃபியானா போலப் பாடப்பட்டு இருக்கிறது. திருவள்ளுவரின் ‘வான் சிறப்பு’ அதிகாரம், சித்ராவின் குரலில் சிம்பொனி போல் ஒலிக்கிறது. வரிகள் முதலில் புரியாவிட்டாலும், காதுக்கு இதமாக இருப்ப தால் நிச்சயம் மக்கள் கேட்டு ரசிப்பார்கள். அதன்பின் சிலர் அர்த்தம் தேடுவார்கள். ஆண்டா ளும் வள்ளுவரும் அப்பரும் கூட அங்கிருந்து பாராட்டி மழைத் துளிகளை அனுப்பினார்கள். இல்லையென்றால், பிப்ரவரியில் சென்னையில் மழை எப்படி?

சென்னைவாசிகள் அதிர்ஷ்டக்காரர்கள்!

**எஸ்.**பி.பாலசுப்பிரமணியம் 'ஜெயா டி.வி'-யில் நடத்தும், 'என் னோடு பாட்டு பாடுங்கள்' என்ற நிகழ்ச்சியை ரசித்துப் பார்க்க முடிகிறது. கண்ணதாசன், வாலி, எம்.எஸ்.வி, இளையராஜா பற்றிய சில சுவாரஸ்யமான தகவல் களைப் பாட்டுகளுக்கிடையே சொல்கிறார். பாடல்களின் ராகச் சாயல்களை விளக்குகிறார். இளைஞர்கள் அபசுரமா கப் பாடினால், உறுத்தாமல் திருத்து கிறார்.

சமீபத்தில், கவிஞர் கண்ணதாச னுக்கு அமெரிக்காவில் நினைவு விழா எடுத்து, மலருக்குக் கட்டுரை கேட்டி ருந்தார்கள். அதில் நான் எழுதியதைப் பிறகு தருகிறேன்.



ஆஸ்துமா சிகிச்சை நிபுணரான டாக்டர் ஸ்ரீதரன், தன்னுடைய சுறுசுறுப்பான டாக்டர் வாழ்க்கையின் இடையில் கருத்துள்ள பாடல்கள் புனைவார். 'ஒவ்வொரு பூக்களுமே' (இலக்கணப்படி சரிதானா?) மெட்டில், ஆஸ்துமா இருப் பவர்களுக்கு ஆறுதலும் நம்பிக்கையும் தருமாறு, 'ஒவ்வொரு மூச்சிலுமே தெரிகிறதே... உங்கள் ஆஸ்துமாவின் கஷ்டம் புரிகிறதே' என்று ஒரு பாட்டு எழுதியிருக்கிறார். அதை இசையமைப்பாளர் பரத்வாஜ் அழகாகப் பாடியிருக்கிறார்.

ஆஸ்துமாவுக்கு இப்போதெல்லாம் பயப்படவேண்டியதே இல்லை. MDI என்னும் Metered dose inhalers, Nebulisers என்று பலதும் வந்துவிட்டன. டாக்டர் ஸ்ரீதரன் சொல்வது இதுதான்... 'உங்க ளுக்கு ஆஸ்துமா இருந்தால், அதை மறைக்காதீர்கள். குறிப்பாக, கல்யாணம் ஆவதற்கு முன் மறைக்கும் உத்தேசம் விபரீதங்களில் முடியலாம். ஆஸ்துமாவை வெல்ல முடியும்; அலர்ஜி என்ன என்று கண்டுபிடித்துத் தவிர்க்க முடியும்' என்பதே அவர் பாடலின் அடிநாதம். மாரத் தான் ஓட்டத்தில் உலக சாதனை படைத்த பாலா ராட்க்ளிஃப்(Paula Radcliff)-க்கு ஆஸ்துமா இருந்து, ஒரு கட்டத்தில் ஓட்டத்தைக் கைவிடவே தீர்மானித்து விட்டார். பிறகு, ஆஸ்துமாவை வென்று சாதனை படைத்தார்.

ஆஸ்துமா என்ற வார்த்தை, 1398-ல் லத்தீன் பாஷையிலிருந்து ஆங்கிலத்துக்கு வந்தது. கிரேக்க மொழியில் azein என்றால், மூச்சு வாங்குவது. 'அனிமாஸ்' - காற்று என்னும் வேர்ச் சொல்லுடன் தொடர்பிருக்கலாம் என்கிறார்கள். ஹோமரின் மகா காவியமான 'இலியாட்'டில், ஆஸ்துமா பற்றிய குறிப்பு உள்ளது. கி.மு.450-ல், இந்த உபாதை சிலருக்கு அதிகம் இருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறார் ஹிப்பாக்ரிட்டஸ். 'ஈய்த்த சொல்லோடு ஈளை ஏங்கி இருமி இளைத்து' என்று துவங்குகிறது திருமங்கை ஆழ்வாரின் பாசுரம் ஒன்று. நிச்சயம் ஆஸ்துமா வைத்தான் பாடியிருக்கிறார். (ஈய்த்த- பலகீனமான; ஈளை-கோழை). எனவே, ரொம்ப நாளாகவே மனிதகுலம் மூச்சு முட்டிக்கொண்டுதான் இருந்திருக் கிறது. சென்ற நூற்றாண்டின் துவக்கத்தில்தான் அதைச் சரியாகப் புரிந்துகொள்ளத் துவங்கினார்கள். இப்போது அதை வென்றுவிட்டார்கள்.

தமிழர்களுக்கு நகைச்சுவை உணர்வு குறைந்து வருகிறதோ என்று கவலையாக இருக்கிறது. நகைச்சுவைக்காகக் குறிப்பிடக்கூடிய விஷயங்கள் அருகி வருகின்றன. மனம் புண்பட்டது என்று எழுதி, அதற்கான விஷயங்களைப் பத்திரிகைகளிலும் சினிமா விலும் தேடிக்கொண்டு ஆளாளுக்கு அலைகிறார்கள்.



எஸ்.பி.பாலசுப்பிரமணியம்

நகைச்சுவை உணர்ச்சியையும், tolerance என்னும் சகிப்புத்தன்மையையும் ஒரு சமூகத்தின் நாகரிகத் துக்கு அளவுகோலாகச் சொல்வார்கள்.

விகடன் 21.2.07 இதழில், ஒரு புதுமணத் தம்பதியரிடம் முதுகு சொரியும் சுகம் பற்றி நகைச்சுவையுடன் எழுதியதை 'லிட்டரலாக' எடுத்துக் கொண்ட ஒரு பெண்மணி, 'முதுகு சொரிய எத்தனையோ பிளாஸ்டிக் பொருள்களை லஸ் கார்னர் பிளாட் பாரத்திலேயே விற்கிறார்களே...பெண்கள்தான் உங்களுக்கு அகப்பட் டார்களா?' என்று கோபித்துக் கடிதம் அனுப்பியிருந்தார்.

கணவன் மனைவிக்குள் இருக்கும் விரசமில்லாத சரசத்தைப் பற்றியது அது என்று புரிந்துகொள்ள முடிய

வில்லையெனில், அது ஓர் இழப்பே!

அது போல மற்றொரு கடிதம்... சென்னை-88-லிருந்து திருவேந்தி எழுதியுள்ளார் - காதலர் தினத்துக்குப் பரிசாக நான் கொடுத்திருந்த குறுந்தொகைப் பாடலைப் பற்றி!

‘அது ஒரு பரத்தை தனக்கும் தலைவனுக்கும் உள்ள நெருக்கத்தைப் பற்றி, மனைவிக்கு வேண்டியவரிடம் ஜாடையாகச் சொல்வது போன்ற மருதத்திணைப் பாட்டு. அதை எப்படிக் காதலர் நெருக்கத்துக்கு சுஜாதா கூறலாயிற்று?’ என்று கேட்டி ருக்கிறார்.

இந்தத் திணைத் துறைப்படுத்துவதும், யாருடைய கூற்று என்பதும் உரைகாரர்களின் கூற்று. பாடலில் எந்த இடத்திலும் அதைப் பற்றிய பேச்சே இருக்காது என்பதை நான் குறுந்தொகைக்கு எழுதிய விரிவான முன்னுரையில் குறிப்பிட்டு இருக்கிறேன் (பார்க்க 401 காதல் கவிதைகள், உயிர்மைப் பதிப்பகம்).

குறுந்தொகைப் பாடல்களை உரைகாரர்களின் வியாக்கியானங்களிலிருந்து தனிப்படுத்தி, out of the box சிந்தித்து ரசிக்க வேண்டும் என்பதே என் குறிக்கோள்.

**நா**ன் பெற விரும்பும் புத்தகம் அரிதாகத்தான் எனக்கு அன்பர்களிட மிருந்து அனுப்பப்படும். தஞ்சை இனியன் அனுப்பிவைத்த, முனைவர் ய.மணி கண்டன் எழுதிய ‘நேரிசை வெண்பா இலக்கியக் களஞ்சியம்’ என்னும் புத்தகம் அத்தகையது.

வெண்பாக்களில் பலவகை உண்டு. அவற்றின் அரசன் நேரிசை வெண்பா. எல்லாப் புலவர்களும் தன் திறமையை நிரூபிக்க நேரிசை வெண்பா எழுதியே ஆக வேண்டும். இந்தப் புத்தகத்தில் முத்தொள்ளாயிரத்திலிருந்து இரண்டாயிரம் வரை உள்ள பல நூல்களிலிருந்து நேரிசை வெண்பாக்களைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்திருக்கிறார். சுமார் 400 வெண்பாக்களைத் தொகுத்து, விரிவான முன்னுரை எழுதியிருக்கிறார் மணி கண்டன். இந்த வடிவத்தை நாம் இழக்கக் கூடாது. கொஞ்சம் முனைந்தால் எந்த விஷயத்தையும் வெண்பா வடிவில் சொல்ல முடியும் என்பதை வைரமுத்து, தஞ்சை இனியன், ஆகாசம்பட்டு சேஷாசலம் போன்றவர்கள் நிரூபித்துக் காட்டி யிருக்கிறார்கள். ஈழத்து வெண்பாக்களும் உள்ளன.



**எ.பீ.க.**

*அடிமுட்டாள்*
*அயோக்கியன்*
*அதிபுத்திசாலி*
*ஒரு ஞானி*
*அனைவரும்*
*குளத்தில் குதித்தனர்*
*ஒரே மாதிரிதான்*
*வட்ட வட்டமாக வந்தது!*

- **தென்றல்** (நீல இறகு)

இது, தஞ்சை இனியனின் வெண்பா...

*பங்களா கார்கனவில் பட்டினிகள் போக்கிடலாம்*
*மங்கலான ஆடைபோதும் வாழ்ந்திடலாம் - அங்கங்கே*
*சிங்கி அடிக்கின்ற செந்தமிழா பஸ் பிடித்துச்*
*சிங்காரச் சென்னைவந்து சேர்!*

Got my point?

**எ.பி. மேற்கோள்)**

என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பது தெரியாதபோது நான் செய்வது அடிப்படை ஆராய்ச்சி!

**வெர்னர் வான் ப்ரான் (1912-1977)**

## எங்கேயும் எப்போதும் சங்கீதம்... சந்தோஷம்!

**இ**ந்த ஆண்டின் சிறந்த படங்களில் ஒன்றாக, இயக்குநர் அமீரின் 'பருத்திவீர'னை நிச்சயம் சொல்ல முடியும். கார்த்தி சிவகுமார் ஒரு மிகப் பெரிய புதுவரவு! 'தேனி'யின் நிஜமான மக்கள் அனைவருடனும், அவர்களின் வாழ்வில் மூன்று மணி நேரம் பங்குகொண்ட உணர்வு கிடைக்கிறது. சரவணன், ப்ரியாமணி போன்றவர்களின் யதார்த்தமான நடிப்பு, யுவன்ஷங்கர் ராஜாவின் அற்புதமான ரீ-ரிக்கார்டிங், பாசாங்கற்ற வசனங்கள், நாட்டுப்புறக் கலைகள் அனைத்தும் இருந்தும்... அந்த க்ளைமாக்ஸ்? ஐந்து நட்சத்திரத்திலிருந்து ஒரு நட்சத்திரத்தைப் பிடுங்கிவிடுகிறது!




கண்ணதாசன் பற்றி எழுதுவதாகச் சென்ற வாரம் சொல்லியிருந்தேன்.

1978-ல், 'நினைத்தாலே இனிக்கும்' திரைப்படத்துக்கான பாடல் பதிவின்போது அவரை நேரில் சந்தித்துக் கொஞ்சநேரம் பேசும் மறக்க முடியாத வாய்ப்பு கிடைத்தது. அதற்கு முன், 'இதயம் பேசுகிறது' பத்திரிகை ஏற்பாடு செய்திருந்த விழா மேடையில், ஆசிரியர் மணியன் என்னை கவியரசுக்கு மாலை அணிவிக்கச் சொன்னார். அந்த விழாவில், கண்ணதாசனின் தெளிவான பேச்சைக் கேட்டு ரசிக்கும் வாய்ப்பு கிடைத்தது.

'நினைத்தாலே இனிக்கும்' படத்துக்கு நான் வசனம் எழுதினேன். சங்கீதக் கச்சேரி செய்ய சிங்கப்பூர் செல்லும் இரண்டு இளைஞர்களின் ஆர்க்கெஸ்ட்ரா ட்ரூப்பைப் பற்றிய கதை. கே.பாலசந்தர் இயக்கிய அந்தப் படத்தில் ரஜினி, கமல் இருவரும் நடித்தனர்.

எம்.எஸ்.விஸ்வநாதன் இசைக்கு கண்ணதாசன் பாடல்கள் எழுதினார். முதல் பாட்டின் 'கம்போஸிங்' சென்னை, பிரெசிடென்ட் ஓட்டல் அறையில் நடைபெற்றது. "நீங்களும் வாருங்கள். கண்ணதாசனும் விஸ்வநாதனும் சேர்ந்து பணிபுரிவதைப் பார்ப்பதே ஒரு சுவாரஸ்யமான அனுபவமாக இருக்கும்" என்றார் பாலசந்தர். சென்றேன்.

முதலில் ஆர்மோனியப் பெட்டி வந்தது. பின் எம்.எஸ்.வி. வந்தார். பட்டனை அழுத்தி, டிபன் வந்தது. அதன்பின், கசங்கல் இல்லாத தூய வெள்ளை உடையில் வந்தார் கண்ணதாசன். அகலமான நெற்றியில் குங்குமப் பொட்டு. மெலிதான, அழுந்த வாரிய தலைமுடி. தாராளமான புன்னகை. 'பெண்டிக் சொல்யூஷன்' வைத்து சர்க்கரை இருக்கிறதா என்று பார்த்துவிட் டுத்தான், காபிக்கு சர்க்கரை போடச் சொன்னார்.

எம்.எஸ்.வி-யும் கவிஞரும் அந்நி யோன்யமாகப் பழகிக்கொண்டார்கள்.

"விசு, என்ன ட்யூன்?"

"அண்ணே! சங்கீதத்தைப் பற்றிய உற்சாகமான ட்யூன்!"

"வாசி!"

விஸ்வநாதனின் விரல்கள் ஆர் மோனியத்தில் உலவ, அவருக்கே உரிய வசீகரமான குரலில், 'தன் னானே தன்னானே தன்னானே தன்னானே' என்று பாடினார். உடனேயே கவிஞர், "எங்கேயும் எப்போதும் சங்கீதம் சந்தோஷம்..." என்றார். "பாடிப் பாரு!"

“கச்சிதமா இருக்கு கவிஞரே!”

“அடுத்த அடி.?”

“தானனன்னே தானனன்னே தானனன்னே தானனன்னே..!”


'பருத்திவீரன்' படத்தில்...

“தன்னானேக்கு பதில் தான னன்னேயா? சரி, கொஞ்சம் தத்துவம் பேசலாமா?” என்று டைரக்ட ரைப் பார்த்தார் கவிஞர்.

பாலசந்தர், “தாராளமா! உங்க ளுக்குச் சொல்லணுமா கவிஞரே!”

“ராத்திரிகள் வந்துவிட்டால் சாத்திரங்கள் ஓடிவிடும்..! சரியா?”

“பர்ஃபெக்ட்!”

விஸ்வநாதன் பாடப் பாட, கண்ணதாசன் அத்தனை சரணங்களையும் (“காலை ஜப்பானில் காபி... மாலை நியூயார்க்கில் காபரே... அவங்க ஊரூரா போறாங்கல்ல?”) உடனுக்குடன் உதிர்த் ததை பஞ்சு அருணாசலம் அழகான கையெழுத்தில் எழுதித் தர, சில மணி நேரங்களில் முழுப் பாட்டும் எழுதப்பட்டது.

இடையிடையே கண்ணதாசனுடன் பேச்சுக் கொடுத்தேன். “எப்படி இவ்வளவு சரளமா வார்த்தைகள் வருது?”

“தமிழ்ல ஆதார சந்தத்தைப் பிடிச்சுட்டா போதும்! பாருங்க, சீதைக்கு எத்தனைப் பெயர்கள்... சீதா - நேர்நேர்; ஜானகி - நேர்நிரை; ஜனகா - நிரைநேர்; வைதேகி - நேர்நேர்நேர்... இப்படி எந்தச் சந்தம் வேணுமோ, அந்தச் சந்தத்துக்கு வார்த்தை போட்டுக்கலாம். என்ன, எல்லா வார்த்தையும் தெரியணும்... அவ்வளவுதான்! கம்ப ராமாயணத்தில் ஒவ்வொரு படலத்திலும், பாடலிலும் ஒரு புது வார்த்தை கிடைக்கும்!”


அமீர்-கார்த்தி

மறுநாள் ரிக்கார்டிங்குக்கு கண்ண தாசன் வந்து தலையைக் காட்டிவிட்டுப் போனார். அவர் வேலை முதல் நாளே முடிந்துவிட்டது.

அதன்பின், கண்ணதாசனை நான் சந்திக்கவில்லை.

அவர் உடல்நலம் குன்றி சிகிச்சைக் காக அமெரிக்கா சென்றதும், தாய் நாட்டுக்குத் திரும்பிய நிலையும், இளம் வயதில் மறைந்ததும் என் மனதை உருக்கிய நிகழ்ச்சிகள். ஏறத்தாழ 30 ஆண்டுகளாகியும், அந்தப் பாடல் இன்றும்கூட எல்லா மெல்லிசை நிகழ்ச்சிகளிலும் கட்டியம் கூறும் பாடலாகப் பாடப்படுகிறது. கண்ண தாசன் அதைத்தான் செய்தார்... எங்கேயும் எப்போதும் சங்கீதத்தை யும் சந்தோஷத்தையும் பரப்பினார். உலகில் தமிழர்கள் வாழும் ஏதாவது ஒரு மூலையில் பயணிக்கும் கார் களிலும், இல்லங்களிலும் அவரது ஏதாவது ஒரு வரி ஒலிக்காத நேரமே இல்லை!

இந்த வாரம் குறிப்பிட வேண்டிய பத்திரிகை - ‘கதைசொல்லி’. குறிப் பிட வேண்டிய புத்தகம் மு.அருணா சலம் அவர்களின் ‘தமிழ் இலக்கிய வரலாற்றின் புதிய பதிப்பு’.

'கதைசொல்லி'யில், நாட்டார் வழக்காற்றியலில் பாடல்கள், நிகழ் கலைகள், வாய்மொழி இலக்கியம், பழமொழிகள் போன்றவற்றில் வெளிப்படும் பண்பாட்டு அடை யாளங்களைப் பற்றிய கட்டுரையை ரசித்தேன் ('பத்து காணி நஞ்ச புஞ்ச இங்கருக்க, பண்ருட்டிக்குப் போனா னாம் ஒண்ணுக்கிருக்க!' - 'ஈனவும் தெரியாது; நக்கவும் தெரியாது!'). இவ்வகையிலான சிறு பத்திரிகைகள் வருடத்தில் இரண்டு மூன்று முறையாவது தோன்றுவது ஆரோக்கியமான விஷயம். இதன் ஆசிரியர் கி.ராஜ நாராயணன். இணையாசிரியர், பதிப்பாளர் ஆர்.கே எனப்படும் கே.எஸ்.ராதாகிருஷ்ணன். ம.தி.மு.க-வின் செயலாளர்.

ராதாகிருஷ்ணனுக்குப் பாராட்டுக்கள்!

மு.அருணாசலம் எழுதி, 1969-ல் காந்தி வித்யாலயம் சார்பில் மொத்தம் 11 தொகுதிகளாக வந்த விரிவான ஆராய்ச் சிப் புத்தகத்தை, பழைய பிரதிகளைத் தேடிப் பிடித்து, அழகான புதிய பதிப்பு கொண்டு வந்திருக்கும் The Parkar என்னும் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனமும் பாராட்டுக்குரியது (அகமது வணிக வளாகம், ராயப்பேட்டை, சென்னை-14).

இந்தப் புத்தகத்தின் மூன்று தொகுதிகளை என்னிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார் அரவிந்தன். எனக்கு எந்த வகைப் புத்தகங்கள் பிடிக்கும் என்பது அவருக்குத் தெரியும். குறிப்பாக, பாரதம் பாடிய பெருந் தேவனார் பற்றிய குறிப்புகளைச் சொன்னார்.

பெருந்தேவனார் என்பது மகாதேவன் என்ற பெயரின் தமிழ் வடிவம். தமிழிலக்கியத்தில் பல பெருந்தேவனார்கள் இருந்திருக்கிறார்கள். சங்க காலப் பெருந்தேவனார், கடுகு பெருந்தேவனார், பாரதம் பாடிய பெருந் தேவனார், பாரத வெண்பாப் பாடிய பெருந் தேவனார் எனப் பலர் இருந்திருக்கிறார்கள். இவர்களில் கி.பி. 9-ம் நூற்றாண்டில், பல்லவ மன்னன் நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்த பெருந்தேவனாரின் பாரத வெண்பாக்களில் 818-தான் நமக்குக் கிடைத்திருக்கிறது. மற்ற எந்தப் பாரதமும் கிடைக்கவில்லை. பிற்காலத்தியது வில்லிபுத்தூரார் பாரதம்.

பாரத வெண்பாவிலிருந்து ஓர் உதாரணம்...

பதினோராம் நாள் போர் தொடக்கம்.

*வேலை ஒலியே முழவாக வெண்திரைகள்*
*சால எறிந்தோங்க சாமரமா - வேலையென*
*வாசித்த மன்னரெலாம் வா நீ என அழைக்க*
*ஆதித்தன் வந்தெழுந்தான் ஆங்கு!*

கடல் ஒலி முரசாக, வெள்ளைஅலைகள் சாமரம் வீச, கடல் போல் சண்டை போட்ட மன்னர்கள் எல்லாம் 'நீ வா' என்று அழைக்க, சூரியன் எழுந்தான்.

இன்றைய அரசியல் கூட்டங்களில்கூட, ஆரம்பத்தில் இதைப் பாடலாம்.

பாரத வெண்பாவில், தரும புத்திரர் முன் வந்த ஒரு வழக்கு பற்றிய உபகதை pure science fiction. மு.அருணாசலத்துக்கு யாராவது பொற்கிழி கொடுத் தார்களோ... தெரியவில்லை!

### எ.பி. மே(ற்கோள்)

'**த**வறுகளுக்காக அவமானப்பட்டால், அவற்றைக் குற்றங்களாக்கிவிடுவீர்கள்!'

- **கன்ஃபூஷியஸ்**

எ.பி.க.



**க**ரையொதுக்கிக்
கட்டப்பட்ட
அசையும் தோணிக்குள்
மிஞ்சிய மழை நீர்
அதில்
சிலிர்த்துக்கொண்டு
இருக்கிறது
நிலவு
பூமிக்கு ஒளி பொழிந்த
கருணையில்!

- **சுகுமாரன்** ('நதிக் காட்சி' - தொகுப்பு: 'பூமியை வாசிக்கும் சிறுமி')

## ஹோலி ஹோலி... ஜாலி ஜாலி!

**ஹோ**லி பண்டிகை தமிழ்நாட்டில் அதிகம் கொண்டாடப்படுவதில்லை.

சௌகார்பேட்டை சேட்டுகளோடு இந்த வண்ண ரகளை முடிந்துவிடும். புனேவில் 'ரேவ் பார்ட்டி' பற்றிப் படித்திருப்பீர்கள். நான் அலகாபாத்திலும் டெல்லியிலும் இருந்தபோது, 1959-லேயே இதன் வீரியத்தை உணர்ந்திருக்கிறேன்.

அலகாபாத்தில் சிவில் ஏவியேஷன் வேலை கிடைத்ததும் விமானப் போக்குவரத்துக் கட்டுப்பாட்டில் பயிற்சி பெற அனுப்பியிருந்தார்கள். பம்ரோலி என்ற ஊருக்கு வெளியே இருந்த விமான நிலையத்தில் ஆறு மாதம் தங்கி, பயிற்சி! சில மணி நேரம் குட்டி ப்ளேன் ஓட்டவும் கற்றுக்கொடுத்தார்கள். எங்களுடன் பைலட் டிரெய்னிங்குக்கான மாணவர்களும் இருந்தார்கள். அவர்களுக்கு பைலட் லைசென்ஸ் கொடுக்க தீவிர பயிற்சி அளிக்கப்பட்டது. (அப்போதெல்லாம் மெட்ரிக் வரை படித்தால் போதும், பைலட் பயிற்சியில் சேரலாம்.) குறும்புக்கார இளைஞர்களான அவர்கள்தான் ஹோலி நிறைய விளையாடுவார்கள். கொஞ்சம் முரட்டு ரக ஹோலி. அவர்களைக் கண்டால் ஒதுங்கிப் போவோம். (ராகிங் பண்ணும்போது நம்முடைய டூத் பேஸ்ட்டையே எடுத்து நம்முடைய ஆசன வாயில் செலுத்துவார்கள். மேல் விவரம்... வேண்டாம்!). பெரிய இடத்துப் பிள்ளைகள். அந்த காலனியில் குடியிருந்த அழகான மனைவிகள்தான் அவர்கள் இலக்கு!



ஹோலி ஒரு பைத்தியக்காரக் கொண்டாட்டம். ஆளாளுக்கு வித்தியாசம் தெரியாமல் சர்க்கஸ் கோமாளிகள் போல யார் வேண்டுமானாலும் யாரை வேண்டுமானாலும் வண்ணப் பொடி வைத்துத் தடவிப் பார்க்கலாம். இதில் 'பாங்' என்று ஒரு மரியுவனா ரக மௌவா சமாசாரம், அலகாபாத்தில் பிரசித்தம். சாப்பிட்டால் நான் நீயாகி உலகமே பளிச்சென்று வெளிச்சமாகத் தெரியும். எல்லா சத்தங்களும் 'போஸ் நாய்ஸ் கேன்சலேஷன்' ஹெட்போனில் போல துல்லியமாகக் கேட்கும். அந்த இளைஞர்கள் 'பாங்' போட்டுவிட்டு காலையில் திக் விஜயம் புறப்படுவார் கள். கேட்க வேண்டுமா?

குறிப்பாக, நேவிகேஷன் இன்ஸ்ட்ரக்டர் ஒருவரின் மனைவியும் மச்சினியும் தளதளவென்று இருந்தார்கள். அவர்களுக்கு வண்ணம் பூசத்தான் கடும் போட்டி. பக்கத்தில் இருந்த பாட்டியை ஒரு ஈ கவனிக்கவில்லை. பாபி

பாபி (bhabi - மரியாதையாம்!) என்று மாத்தி மாத்தி அந்த மனைவி களுக்குத்தான் ஹோலி! அவர்களும் சிரித்துக்கொண்டே சகித்துக்கொண்டார்கள். பெருந்தன்மையை இழக் காமல் அந்த இளைஞர்களின் உற்சாக மீறல்களைச் சமாளித்து, அத்தனை பேருக்கும் இனிப்பு வழங்கினார்கள். இவளல்லவோ பெண்மணி என்று வியந்து, மணந்தால் உன்னைத்தான் என்று சத்தியமெல்லாம் பண்ணிய அத்தனை பேருக்கும் கட்டாயமாக பர்ஃபி கொடுத்து அனுப்புவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது!



மத்தியானம் அந்த இளைஞர் களில் ஒருவன்கூட வெளியே வரவில்லை. பங்கியடிச்சுவிட்டுத் தூங்குகிறார்களோ என்று பார்த் தால், அனைவரும் பாத்ரூம் வாசலிலேயே காத்திருந்தார்கள். அத்தனை பேருக்கும் பேதி! அந்தப் பெண் சாயங்காலம் வந்து ‘பையா, எப்படி இருக்கிறீர்கள்? இனிப்பு எல்லாம் எப்படி இருந்தது?’ என்று கண் சிமிட்டிக்கொண்டே விசாரித்தாள். அவள் புன்னகையில் அர்த்தம் இருந்தது.

டெல்லியில், ஹோலி பண்டிகையின்போது, தென்னிந்தியர்கள் அதிகம் வசிக்கும் கரோல்பாகில், பெரும்பாலும் மாடியிலிருந்து வேடிக்கைதான் பார்ப்போம். திடீரென்று கை வெடிகுண்டு போல், கலர் தண்ணீர் நிரப்பிய பலூன்கள் எதிர்பாராத திசைகளிலிருந்து வந்து மார்பில் சொட்டேல் என்று மோதும். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்! இப்போதெல்லாம் பலூ னுக்குள் கலர் தண்ணீர் மட்டுமின்றி ஊதல், கோலிக்குண்டு போன்ற பிற பொருள்களும் சேர்த்து அனுப்புகிறார்கள் என்று கேள்வி.

என் மனைவி ஜப்பானிய பாஷை பரீட்சை எழுதி, பாஸ் செய்துவிட்டாள். நாமும் ஏதா வது செய்ய வேண்டும் என்று தமிழ் எம்.ஏ., கரஸ் சேரலாமா என்று யோசித்தேன். தற்செய லாக பொதிகை டி.வி-யில் ப்ளஸ் டூ தமிழ் வினாத்தாள் படித்துக் காட்டிக்கொண்டு இருந்தார்கள். அந்த வினாக் களுக்கு முதலில் விடை தெரிகிறதா என்று பரிசோதித்தேன். வியங்கோள் வினைமுற்று, குற்றியலிகரம், ஐகாரக் குறுக்கம்... ம்ஹூம்! சான்ஸே இல்லை!

என்ன செய்வது, இந்த வருஷத்துக்குள் ஏதாவது செய்ய வேண்டுமே! அதனால், ஓர் எளிய ஆங்கில - தமிழ் அகராதி தயாரிப்பது என்று தீர்மானித்து, a (ஒரு) வில் ஆரம்பித்து anorexia (பசியின்மை... ஒல்லியாக விருப்பம்) வரை வந்திருக்கிறேன். வருஷ இறுதிக்குள் முடித்துவிடு வேன். தமிழ் எம்.ஏ.? அது கிடக்கட்டும். இதனிடையே, பரீட்சை இல்லாமல் எனக்கு முனைவர் பட்டம் தர விரும் பும் பல்கலைக்கழகங்கள் விண்ணப் பிக்கவும்.

Jokes apart இதற்கு முன் ஒரு தடவை பெங்களூருவில் வேலையில் இருந்தபோது, சென்னை ஐ.ஐ.டி-யில் ஆட்டோமேட்டிக் டெஸ்டிங்கில் ஒரு எம்.எஸ்., பண்ணுவதற்கு விண்ணப் பித்தேன். ஆறு மாசம் தங்கியிருந்து மற்ற தேவைகளை வேலையிலிருந்த படியே முடிக்கக்கூடிய திட்டம். அதற்கான இன்டர்வியூ, என்ட்ரன்ஸ் டெஸ்ட் எல்லாம் இருந்தது. பேரா சிரியர் முத்துகிருஷ்ணன், மகாபலா போன்றவர்கள் என்னைப் பரிசோதித்துப் பார்த்து சம்மதம் தெரிவித்தார்கள். எந்த மெஸ்ஸில் இட்லி போடுகிறார்கள் என்பது வரை விசாரித்து வைத்தேன். செகண்ட் ஹாண்ட் சைக்கிளுக்குக்கூட சொல்லிவைத்துவிட்டு, பெங்களூரு திரும்பி வந்தேன்.

பி.இ.எல்-லில், ‘நீ இதுவரை படித்திருப்பது எங்களுக்குப் போதும்’ என்று சொல்லி, சம்மதம் தர மறுத்து விட் டார்கள்.

இப்போது உண்மையாகவே முனைவர் பட்டம் வேண்டுமென்றால் வளையாபதியின் கதையை ஆராய்ச்சி செய்யலாம். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான வளையாபதி நமக்குக் கிடைக்கவில்லை. புறத்திரட்டு என்னும் பிற்காலத்து நூலில் எடுத்துக் காட்டாக 66 பாடல்களும், அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையிலும் தொல்காப்பியத்தின் நச்சினார்க்கினி யார் உரையிலும் குறிப்பிட்ட (சந்தேகத்துக்குரிய) மேற்கோள் காட்டிய ஆறு பாடல்களிலிருந்துதான் இந்தக் காவியத்தைத் துப்புத் துலக்க வேண்டும்.

இது ஒரு ஜைனர் எழுதியது என்பது தெரிகிறது. 40 வயது வந்தால் நரை வந்துவிடும், நில்லாது இளமை என எச்சரிக்கும் பாடல்கள்தான் அதிகம் கிடைத்துள்ளன. கதை முழு வதும் தெளிவாக இல்லை. வளையாபதி என்பது பெண் பெயர் என்று தெரிகிறது. வைர வியாபாரிகள் தென்படுகிறார்கள். வைசிய புராணம் வேறு இதில் சேர்ந்து குழப்புகிறது.

சரியான வைர வேட்டை நிச்சயம்! இரண்டு பி.ஹெச்டி., உத்தரவாதம்.

பாலிண்ட்ரோம் போட்டிக்கு வந்தவற்றில் பெரும்பாலானவை அர்த்தமற்றவையாக இருந்தன. கொஞ்சம் புரியும்படியாக இருந்தது ஒன்றே ஒன்றுதான். பலர் பழைய மாலை மாற்றுப் பாடல்களை ரீ-சைக்கிள் செய்திருந்தார்கள். நான் கேட்டது சொந்தச் சரக்கு.

'மாதா தேடாதே எனை நீ...' என்று எழுதிய சிவகாசி மீனாட்சிசுந்தரம் was almost there! அவருக்குப் புத்தகப் பரிசு.

### எ.பி.க.



**எ**ன் வீடு மிகச் சிறிய வீடு
ஆனாலும்,
வீடு திரும்ப விரும்புகிறேன்!

*** ஒவ்வொரு வீடும் நிரந்தரச்
சூரியனை
ஜன்னல் வழியே அழைக்கிறது
அதை கைக்குழந்தையைப் போல்
படுக்கவைத்துக் கொள்கிறது
தினமும் படியில் ஏறியதும்
பயங்கள் மறையும்
என் சிறிய வீட்டின் பின்கதவைத் திறந்து
பார்க்கிறேன்
வீட்டிற்கு அப்பால்
வேறு எதுவும் இல்லை!

**-தேவதச்சன்**

'என் வீடு' கவிதையிலிருந்து
தொகுப்பு: 'யாருமற்ற நிழல்'

### எ.பி. மே(ற்கோள்)

**'பி**ரசாரம் பொய் சொல்வதின் ஒரு பிரிவு. அதனால், உங்கள் நண்பர்களை ஏமாற்றலாம். நிச்சயம் எதிரிகளை ஏமாற்ற முடியாது!'

**- வால்டர் லிப்மன் சொன்னதாக**

## தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை...

**சு**ற்றுலா என்பது சமீபத்திய வழக்கு. உலா - பழைய சொல். உலா, கலம்பகம் என்பதெல்லாம் இலக்கிய வகைகள். உலா, ராஜாக்களுக்கு சோப்பு வைக்க புலவர்கள் பாடிய பாராட்டுச்செய்யுள் களின் தொகுப்பு. 'உன்னைப் போல் வீரனில்லை; தீரனில்லை; அழகில்லை. நீ வலம் வந்தால் பெண்கள் அப்படியே மயங்கி விழுவார்கள். அவர்கள் வளையெல்லாம் கழன்று விழும்...' இம்மாதிரியான பூ சுற்றும் விஷயங்கள் கொண்ட நூல்கள் பல தமிழில் உள்ளன.

இன்று ராஜாக்களுக்குப் பதிலாக தலைவர்களுக்குச் சுற்றுகிறார்கள். அப்போது எல்லா குட்டி தெய்வங்கள் மேலும் உலா பாடினார்கள்.




யாத்திரை என்கிற வடமொழிச் சொல்லுக்கு தமிழ்ச்சொல் தேவைப்பட்டு 'சுற்றுலா' அமைக்கப்பட்டது என்று நினைக்கிறேன். அரசின் அங்கீகாரம் பெற்று ஒரு இலாகாவாக இது நிலைத்துவிட்டது. நல்லவேளை, மகிழ் செலவு என்பது நிலைக்காமல் தப்பித்தோம்.

நான் சென்ற சுற்றுலாக்களை அவ்வப்போது எழுதி வந்திருக்கிறேன். 'தமிழ்நாடு 2000 மைல்', 'கடவுளின் பள்ளத்தாக்கு' போன்ற கட்டுரைகளை அன்பர்கள் படித்திருக்கலாம். நான் எழுதாமல் விட்டது நவ திருப்பதிக்கு நான் சென்ற விவரம். அதைப் பற்றிச் சொல்வதற்கு முன் நம்மாழ்வாரைப் பற்றியும், குரு பரம்பரை பற்றியும், ஆர்.எம்.கே.விஸ்வ நாதன் பற்றியும் கொஞ்சம் சொல்ல வேண்டும்.



நம்மாழ்வாரின் காலம் கி.பி. 785 - 820 என்பது சரித்திர ஆதாரங்களு டன் பொருந்துகிறது. இவர் பெயர் சடகோபன். பிறந்த ஊர் - தென்குருகூர். இப்போது ஆழ்வார் திருநகரி என்று சொல்லப்படுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் மிகச் சிறந்த பகுதியான திருவாய்மொழியைப் பாடியவர். திராவிட வேதம் என்றுகூட அதைச் சொல்வார்கள்.

*'யானே என்னை*
*அறியகிலாதே*
*யானே எந்தனதே என்றிருந்*
*தேன்*
*யானே நீ, என் உடைமையும் நீ*
*வானே ஏத்தும் வானவர் ஏறே'*

*(ஏத்தும் - வாழ்த்தும்; ஏறே - தலைவனே)*

இம்மாதிரி எளிமையான 1,102 பாடல்கள் கொண்ட திருவாய்மொழியைப் பாடிய நம்மாழ்வார் வைணவத் தின் முதலும் முடிவுமாக இருப்பவர். ஆழ்வார்களின் கடைசியும் ஆச்சார்யப் பரம்பரையில் முதலும் இவர் என்று சொல்வார்கள். இவருடைய சீடர், இவரைவிட வயதான பிராமணர் மதுரகவி ஆழ்வார்.

13-ம் நூற்றாண்டின் கடைசியில் நம்பிள்ளையின் சிஷ்யராக வாழ்ந்த பின்பழகிய பெருமாள் ஜீயர் செய்த 'குரு பரம்பராப் பிரபாவம் ஆறாயிரப் படி' என்ற நூலே ஆழ்வார், ஆச்சார்யர்கள் வரலாற்றுக்கு மூலம். மணிப்பிரவாள நடையில் வடமொழியும் தெளிவான தமிழும் கலந்து முற்றுப்புள்ளி இல்லாமல் படிக்கத் தமாஷாக இருக்கும். பழகிவிட்டால், இதன்மேல் காதலாகி விடுவோம்.

ஒரு சாம்பிள் பாருங்கள்...

'ஆழ்வார்களெல்லாரையும் அவயவ பூதராகவுடைய நம்மாழ்வார் திருவவ தாரக் கிரமம் எங்ஙனே என்னில் வண்டலம்பும் சோலை வழுதிவள நாட்டிலே கங்கா நதி சகல நதிகளிலும் உத்க்ருஷ்டதமமாகச் சொல்லப்பட்டிருப்பதான தாமிரபருணியென்னும் பொருநையாற்றின் கரையிலே ஸ்ரீநகரி என்று பிரக்கியாதமான நல்லார் நவில் குருகூர் நகருக்கு நிர்வாஹகரான இவ்வாழ்வார் தாமே எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை என்றருளிச் செய்கையாலே ஏழாட் காலும் புறந்தொழாமே குடி குடியாட் செய்யும் தொண்டக் குலத்திலே பிறந்து ஏழாட்காலும் பழிப்பிலாரா யிருப்பர் எங்ஙனே என்னில்...'

இப்படி முடிவில்லாமல் செல்லும் வசீகர நடை. அந்தக் காலத்தில், கமா ஃபுல்ஸ்டாப்பெல்லாம் கிடையாது.



திருக்குருகூரைச் சூழ்ந்துள்ள ஒன்பது தலங்களை நவ திருப்பதி என்பார்கள். அவை... திருக்குருகூர், இரட்டைத் திருப்பதி என்னும் துலைவில்லிமங்கலம் (இங்கே இரண்டு தலங்கள்), திருப்புளியங்குடி, தென்திருப்பேரை, ஸ்ரீவைகுண்டம், திருக்குளந்தை, வரகுணமங்கை, திருக் கோளூர். பெரும்பாலும் பாண்டிய மன்னர்கள் நிறுவிய கோயில்கள்.

இவை எல்லாமே தாமிரபரணி நதிக்கரையில் உள்ளன. இவற்றோடு திருக்குறுங்குடி, ஸ்ரீவரமங்கை என்னும் வானமாமலையையும், மலையாள நாட்டுத் திருப்பதிகளையும் நம்மாழ் வார் பாடியிருக்கிறார்.

நவ திருப்பதிகளுக்கு, நம்மாழ்வாரின் பிறந்த தினமாகிய வைகாசி விசாகத்தில் ஆர்.எம்.கே.விஸ்வநாதனுடன் சென்றிருந்தது மறக்க முடியாத அனுபவம். அவர் திருநெல்வேலிக் காரர். சைவப் பிள்ளைமார். அவ ரைக் கட்டாயப்படுத்தி ஆழ்வார் திருநகரிக்கு அழைத்துச் சென்றேன். மாற்று உடை ஏதும் எடுத்துச் செல்லவில்லை. நாங்கள் எல்லாம் ஆழ்வாருடன் நதியில் முங்குவதைப் பார்த்து அவரும் முங்கினார். 'நீங்கள் என் நண்பர். உங்களோடு ஒரு சாயங்காலம் நனைந்த சட்டையில் அலைந்தால் என்ன போச்சு?' என்றார். இளம் இன்ஜினீயர். பட்டு வியாபாரத்தில் நேர்மையும், புதுமையும், நவீனமும், நெசவாளிகளுக்கு நியாயமும் கொண்டுவந்தவர். என் வாழ்வில் கிடைத்த பெரிய அதிர்ச்சி களில் ஒன்று, அவர் சாலை விபத்தில் இறந்துபோனார் என்ற செய்தி.

நம்மாழ்வாரை நினைக்கும்போதெல்லாம் நவ திருப்பதியையும், ஆர்.எம்.கே.விஸ்வநாதனின் நட்பையும் நினைத்துக் கொள்கிறேன்.



### எ.பி.க.

**ஒ**ருதரம் காதல்
என்னை மீட்டுத் தந்தது
ஒருதரம் புல்லாங்குழல்
என்னை மீட்டுத் தந்தது
ஒரு வண்ணத்துப்பூச்சியும்
என்னை மீட்டுத் தந்தது
நான்தான் அடிக்கடி
தொலைந்துவிடுகிறேன்!

- **பூமா ஈஸ்வரமூர்த்தி**

### எ.பி. மே(ற்கோள்)

**'ப**த்துக் கட்டளைகளைப் பற்றி என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள். மொத்தம் பத்துதான் இருக்கிறது, நல்லவேளை!'

- **எச்.எல்.மென்க்கென்**

## வீசி எறியுங்கள் பெருங்காய டப்பாக்களை!

**உ**லகக் கோப்பை கிரிக்கெட்டில் மற்ற குழுவினருக்கு ஆளுக்கு இரண்டு கோழியாவது

இருக்கையில், நமக்கு பெர்முடா ஒன்று மட்டுமே இருப்பது நியாயமல்ல. இந்த minnows என்னும் நோஞ்சான் டீம்களை எதற்குத் தான் சேர்க்கிறார்களோ... கடவுளுக்கே வெளிச்சம்! ஆளாளுக்கு அவர்களைக் கூறு போட்டு ஆறு பந்தும் சிக்ஸர் அடித்துத் துரத்தி அழவைத்து நூறுக்குள் அடக்கும் என்ன ஆட்டம் இது? இதில் அயர் லாந்து ஒன்றுதான் தேறு கிறது.

ஸ்ரீரங்கத்தில் எங்களைப் பெரிய டீம் விளையாடக் கூப்பிட்டால், நாங்கள் 'சைடு கட்டாது' என்று விலகிவிடுவோம். ஆனால், மாஹேளா ஜெயவர்த்தனே சொன்னதும் யோசிக்க வைக்கிறது. முதல் உலகக் கோப்பை போட்டியில் இலங்கை இப்படித்தான் வெஸ்ட் இண்டீஸிடம் உதை வாங்கினார்களாம். 'அதிலிருந்து மெள்ள மெள்ள முன்னேறி வந்தோம். அதனால், இந்த நோஞ்சான்கள் தேவைதான்' என்றார்.

போகிற போக்கைப் பார்த்தால் இந்தியாவும் பாகிஸ்தானும்கூட இந்த நோஞ்சான் பட்டியலில் சேர்ந்துவிடும் போலத் தோன்றுகிறது. பதினேழு வயசு பங்களாதேஷ் பசங்கள் எல்லாம் ஏறி ஏறி அடிக்கிறார்கள். நூறு கோடி பேர் பதினொரு பேரின் தோளில் ஏறிக்கொண்டால் இது தான் ஆகும். கெட்டகேட்டுக்கு இதற்காகவே பாலிவுட் மியூஸிக் வீடியோ வேறு!

உலகிலேயே மிக அதிக விளம்பர வருமானம் இந்திய கிரிக்கெட் டீமுக்குதான்! உலகிலேயே அதிக வருமானமுள்ள விளையாட்டு வீரர் சச்சின் டெண்டுல்கர். ஒரு சின்னப் பையனின் ஸ்பின்னுக்குத் தடவுகிறார். ஒன்றை யோசித்தீர்களோ? மற்ற கிரிக்கெட் நாடுகளின் உடைகளில் அவரவர் தேசியக் கொடியின் அடையாளங்கள் இருக்க, இந்திய வீரர்கள் ஏன் நீல நிற உடை அணிகிறார்கள்? 'பெப்ஸி'!



பெர்முடாவைச் சொல்லிச் சொல்லி அடித்தோம். இப்போது இலங்கையிடம் தோற்று, உலகக் கோப்பையிலிருந்து விலகி விட்டோம்; இல்லை, நீக்கப்பட்டு விட்டோம். பங்களாதேஷ், அயர்லாந்து ரேஞ்சுக்குக்கூட நாம் இல்லை என்பதை நம்பக் கஷ்டமாக இருக்கிறது.



அடுத்த உலகக் கோப்பைக்குள்ளாவது சில பெருங்காய டப்பாக்களையும், மிகைப்படுத்தப்பட்ட திறமையாளர்களையும் வீசி எறிய வேண்டும். செய்வார்களா?




இன்றைய தினங்களில் எல்லாமே விழுக்காடு அல்லது எண்ணிக்கைதான். பெண்களுக்கான இட ஒதுக்கீட்டிலிருந்து ஐ.ஐ.டி. அனுமதித் தேர்வு வரை வாழ்வில் உள்ள இலக்கங்களும் விழுக்காடுகளும் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள கீழ்க்காணும் கேள்விகளின் அருகில் ஒரு பென்சிலால் விடை எழுதிப் பாருங்கள்(பேனாவால் எழுதினால், அப்புறம் மாற்ற முடியாது).

## நீங்கள் எத்தனை விழுக்காடு?



1. சம்பளத்தில் தர்ம காரியங்களுக்காக எவ்வளவு செலவழிக்கிறீர்கள்?

2. எத்தனைக் கடிதங்களுக்குப் பதில் எழுதுகிறீர்கள்?

3. எத்தனை மணி நேரம் வீட்டை ஒழித்து, சுத்தப்படுத்துகிறீர்கள்?

4. எத்தனை மணி நேரம் குடும்பத்துடன் செலவிடுகிறீர்கள்?

5. எத்தனை மணி நேரம் தூங்குகிறீர்கள்?

6. எத்தனை முறை ஓட்டுப் போட்டிருக்கிறீர்கள்?

7. அரட்டை அடிக்காமல் எத்தனை மணி நேரம் நிஜமாக வேலை செய்கிறீர்கள்?

8. உங்களுக்கு எத்தனை ஆப்த நண்பர்கள்?

9. தினம் எத்தனை மணி நேரம் வேண்டாத வேலைகளைச் செய்கிறீர்கள்?

10. எத்தனை மணி நேரம் புத்தகம் படிக்கிறீர்கள்?

11.எவ்வளவு நேரம் டி.வி. பார்க்கிறீர்கள்? என்ன பார்க்கிறீர்கள்?

12.பாட்டு மட்டும் எவ்வளவு நேரம் கேட்கிறீர்கள்?



13.போன வருஷம் எத்தனை பேருக்குப் புத்தாண்டு, பொங்கல் வாழ்த்து அனுப்பினீர்கள்?

14.தினம் எத்தனை மணி நேரம் செய்திப் பத்திரிகை படிக்கிறீர்கள்?

15. எத்தனை மணி நேரம் ஜஸ்ட் சும்மா இருக்கிறீர்கள்?

16. தினம் எத்தனை மணி நேரம் பஸ், ஸ்கூட்டர் அல்லது காரில் பயணிக்கிறீர்கள்?

17. பள்ளியில் உங்களுக்குப் பிடித்திருந்த பாடம் எது?

18. இப்போது பிடித்த நடிகர், நடிகை யார், யார்?

இந்த 18 கேள்விகளுக்கும் பதில் எழுதிவிட்டு... எனக்கு அனுப்பா தீர்கள்! ஒரு வாரம் கழித்து அவற்றைப் பாருங்கள். உங்களை நீங்களே அறிந்து கொள்வீர்கள். கீழ்க்கண்டவற்றில் ஒன்றை உங்களால் தேர்ந்தெடுக்க முடியும்.

நான் ஒரு...

1. சோம்பேறி

2. சாதாரண மனிதன்

3. நல்ல குடிமகன்

4. அறிவு ஜீவி



இந்தப் படத்துக்கு ஏற்ப ஒரு ஹைக்கூ, ஒரு வாரத்துக்குள் அனுப்பவும்.
சிறந்ததற்கு வழக்கம் போல் புத்தகப் பரிசு!

**எ.பி.ஹை**

வீடியோ பேருந்து
படத்தின்
முடிவு தெரியுமுன்னே
முடிந்துவிடுகிறது பயணம்!

**-கல்யாண்குமார்**



## எ.பி. மே(ற்கோள்)

**'தா**ஸ் காபிதால்' எழுத நான் குடித்த சுருட்டுகளுக்கான பணம் கூட அதிலிருந்து வரவில்லை!

**- கார்ல் மார்க்ஸ்**



# முள் கம்பி விடு தூது!

## எ.பி. மேற்(கோள்)

**"த**யவுசெய்து இனிமேலாவது பட்டாம்பூச்சிகளை, அய்யனார்களை, சிட்டுக்குருவிகளை, நிலாவை, பூக்காரிகளை, குறிப்பாக விதவைகளை விட்டுவிடுங்கள்... ஹைகூ புலவர்களே! அவர்கள், அவை பிழைத்துப் போகட்டும்!" - **நக்கீரன்@நறுமுகை.காம்.**

10 டிமாண்டி லேன், மும்பை 400 064-லிருந்து வெளிவரும் 'அணி' என்னும் இதழில், இதுபோல சில சுவையான அறிவுரைகள் கிடக்கின்றன.



தமிழில் இப்போது வெளிவரும் சிறு பத்திரிகைகளின் பட்டியலும் கிடைக்கிறது. புன்னகை, இனிய நந்தவனம், இனிது இனிது, கதவு, புதிய காற்று, இறக்கை, சிறகு, கல்வெட்டு, கூட்டாஞ்சோறு என்று சுமார் ஐம்பதை என்னால் கணக்கிட முடிந்தது. இவையெல்லாம் அச்சுப் பத்திரிகைகள். இணையத்தில் உள்ள வலைப்பூக்களைச் சேர்த்தால், நூற்றுக்கணக்கில் தேறும். இது ஆரோக்கியமான விஷயம்தான். தமிழார்வத்துக்கும் எழுத் தார்வத்துக்கும் கருத்துக் கட்டாயங்களுக்கும் வெகுஜன வியாபாரப் பத்திரிகைகளில் இடம் போதாது.

பல சிறு பத்திரிகைகள் எனக்கு அனுப்பப்படுகின்றன. 'ஏழைதாசன்' போன்றவை பல நாட்க ளாகவே வருகின்றன. இவற்றில் சில நல்ல கவிதைகள் பளிச்சென்று தெரிந்துவிடும்.

*'எத்தனை பேர் இழுத்தும் என்ன*
*இன்னும் வரவில்லை*
*சேரிக்குள் தேர்'* என்ற கவிதை எனக்கு இப்ப டித்தான் கண்ணில்பட்டது. நல்ல கவிதை எந்த மூலையில் இருந்தாலும், யாராவது கவனித்துவிடுவார்கள்.

'20-ம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ்க் கவிதைகள்' புத்தகத்தில் ஏறக்குறைய 150 கவிஞர்களின் படைப்புகள் அகர வரிசையில் உள்ளன. செல்வி, சிவரமணி, மஹாகவி உருத்திர மூர்த்தி, சேரன், ஜெயபாலன், காசி ஆனந்தன். கி.பி.அரவிந்தன் போன்ற பல தெரிந்த பெயர்களு டன் (எனக்குத்) தெரியாத பெயர்களும் உள்ளன. பொதுவாக, இலங்கைக் கவிஞர்களுக்கு மரபுக் கவிதை என்னும் முதிர் கன்னியின்மேல் உள்ள காதல் இன்னும் விலகவில்லை என்பதும், அந்த நாட்டின் போராட்டம் அவர்கள் சிந்தனையை ஆக்கிரமிக்கிறது என்பதும் தெரிகிறது. சில ஆச்சர்யமான, வழக்கத்துக்கு மாறான உவமைகள் கிடைக்கின்றன.

உதாரணம்... ச.முகுந்தன் முள் கம்பியைக் காதலிக்குத் தூதனுப்புகிறார்.

*‘வேட்டுக் கோதினைப் போல நிறத்தவள்*
*வெட்கத்தில் ‘பரா’ லைற்றாய் ஒளிர்பவள்*
*றோட்டுச் சோதனைச் சாவடி போலவென்*
*இரவுத் தூக்கப் பயணம் தடுப்பவள்*
*காட்டிக் காட்டி முகத்தை மறைப்பதில்*
*கண்ட தீர்வுப் பொதியினைப் போன்றவள்*
*வீட்டைத் தேடிப் பிடித்து என்னிலை*
*எஃகுக் கம்பியே சொல்லிவா சீக்கிரம்.’*



(**வேட்டுக் கோது** - உபயோகமற்றுப்போன துப்பாக்கி ரவை; **‘பரா’ லைற்றாய்** - எதிரிகளைத் தேடத் தற்காலிகமாக விண்ணில் ஏவப்படும் பிரகாசமான விளக்கு போல; **தீர்வுப் பொதி** - இருவருக்கு இடையிலான பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான ஒரு ஒப்பந்தம் அல்லது ஏற்பாடு!)

சு.முரளிதரனின் ‘கூடைக்குள் தேசம்’, அகதிகளின் அவதியை உணர்த்த கவிதை எத்தனை வலுவான ஆயுதம் என்பதை உணர்த்துகிறது.

*‘கூடையை கனக்கக்*
*கனக்க சுமந்து செல்கிறார்கள்*
*உள்ளே இந்தத் தேசம்.’*

காசி ஆனந்தன் வெண்பாவிலும் விளையாடுகிறார்...

*‘புறமுக அகப்பாட்டும் காப்பியனால் பூத்த*
*இறவா இலக்கணத்தின் ஏடும் - குறள்மொழியும்*
*ஆர்க்கும் சிலம்பின் அழகு தமிழ்நடையும் பார்க்காத கண்பாவக் கண்.’*

இலங்கை பூபாலசிங்கம் புத்தக சாலையின் வெளியீடான இந்தப் புத்தகத்தை எனக்கு அனுப்பியது கவிதா பப்ளிகேஷன்.

**‘க**ற்றதும்... பெற்றதும்...’ சென்ற ஆண்டுக் கட்டுரைகளின் 4-வது தொகுப்பாக வெளிவருகிறதென்று விகடன் பிரசுரத்தினர் முன்னுரை கேட்டிருந்தார்கள். இந்தப் பகுதிக்காக மட்டும் விகடன் வாங்குகிறேன் என்று சொல்பவர்களை நம்புகிற அளவுக்கு லூசு இல்லை நான். ஒல்லியான உரைநடையில், குறைவான வார்த்தைகளில் நிறையச் சொல்வது தான் என் உத்தேசம். வாசகரைவிட நான் புத்திசாலி இல்லை என்பதை அடிக்கடி நினைவுகொள்வதும் முக்கியம். இதற்கு மேல் தம்பட்டம் கூடாது.

‘கற்றதும்... பெற்றதும்...’ உலகெங்கிலும் படிக்கப்படுவது தெரிகிறது. இதில் தவறு எதுவும் நிகழ்ந்தால், அடுத்த மின் தபாலில் சுட்டிக் காட்டப் பலர் ஆர்வமாக இருக்கிறார்கள். இது ஒருவகையில் பாராட்டே!




**சென்**ற பாராவில் பயன்படுத்திய லூசு என்ற வார்த்தையைக் கொஞ்சம் ஆராய்வோம். சென்னையின் அன்றாடத் தமிழில் பல ஆங்கிலச் சொற்கள், பிறந்த வீட்டை மறந்து தமிழுக்குப் பொருத்தமாக வேஷம் மாறிவிட்டன. குறிப்பாக, கோடம் பாக்கம் திரையுலகத்தவர்கள் பயன்படுத்தும் ஆங்கிலச் சொற்களுக்கென்று தனி அகராதியே போடலாம். உதாரணமாக, தாட்- thought என்ற

சொல் எண்ணத்தைக் குறிப்பதல்ல. ஒரு கதைக்கான மையக் கருத்தைக் குறிப்பது. இதையே நாட்-knot என்றும் சொல்வர். அது முடிச்சல்ல; கதையின் சுருக்கம். 'Feel' ஆயிட்டான் என்றால், மிகவும் வருத்தப்பட்டு விட்டான் என்று அர்த்தம். 'சப்ஜெக்ட்' என்பது லவ் சப்ஜெக்ட், ஃபேமிலி சப்ஜெக்ட், ஜூபிலி சப்ஜெக்ட் போன்ற பிரயோகங்களில் மட்டும் பயன்படுகிறது. 'டாக்கோ டாக்' (talk) என்றொரு சுவரொட்டி விளம்பரம் பார்த்திருப்பீர்கள். இந்த 'டாக்' பேச்சல்ல; word of mouth.

## சின்ன வயசில் இத்தனை ஏமாற்றமா?

**"'பி**ரிவோம் சந்திப்போம்' என்று ஒரு புதுப் படம் அறிவித்திருக்கிறார்களே. அது உங்கள் கதையா?" என்று 'சாட்'டில் கேட்டார்கள் கடிதங்களும் வந்தன. வரப் போகும் படத்துக்கும் எனக்கும் சம்பந்தம் ஏதும் இல்லை.



'பிரிவோம் சந்திப்போம்' என்ற தலைப்பில் 22 ஆண்டுகளுக்கு முன் விகடனில் தொடர்கதை எழுதினேன். திருநெல்வேலி ஜில்லா, பாபநாசத்தில் மின் உற்பத்தி நிலையத்தில் என் தந்தை டிவிஷனல் இன்ஜினீயராகப் பணி புரிந்தார். நான் எம்.ஐ.டி படித்துக் கொண்டு இருந்தேன். லீவுக்குப் போவேன். அகஸ்தியர் நீர்வீழ்ச்சி, டைவர்ஷன் வியர், பாண தீர்த்தம் போன்ற அழகான தாமிரபரணி யின் ஆரம்பப் பிரதேசங் கள் மனதில் பதிந்திருந்தன. படித்து முடித்து வேலைக்குப் போய் கல்யாணம் செய்துகொண்டு பல வருடங்கள் கழித்து எழுதத் தொடங்கியபோது, அந்தச் சூழல் மனதில் பத்திரமாக இருந்தது. அதைக் களனாக வைத்து ஒரு தொடர்கதை எழுதினேன்.

படித்து முடித்த ஓர் இளைஞன், ஒரு வெகுளிப் பெண்ணின் நட்பைக் காதல் என்று எண்ணிக்கொள்கிறான். அந்தப் பெண்ணை அமெரிக்க மாப்பிள்ளை கொத்திச் சென்றுவிடு கிறான். ஏமாற்றத்தில் இந்த இளைஞன் தற் கொலை செய்துகொள்ள முயற்சிக்க, அவன் தந்தை அவனை நிலைப்படுத்தி, 'இதற்குப் போய் உயிரை விடுவதா? நீயும் அமெரிக்கா போய் எதையாவது சாதிக்கலாமே!' என்று தைரியம் சொல்வதாகக் கதை முடிந்தது.

ஆசிரியர் பாலசுப்ரமணியன், "இந்தக் கதையை நீங்கள் இரண்டாம் பாகமாக அமெரிக்காவில் வைத்துத் தொடரலாமே!" என்றார்.

"நான் அமெரிக்கா போனதில் லையே!" என்றேன்.

"அதனால் என்ன, போய் வாருங் களேன்" என்று டிக்கெட் தந்து அனுப்பினார்.

அமெரிக்கா சென்று திரும்பியதும், 'பிரிவோம் சந்திப்போம் - பாகம் இரண்டு' சில மாதங்களிலேயே தொடர்ந்தது. இளைஞன் ரகு, அந்த வெகுளிப் பெண் மதுமிதாவை அமெரிக்காவில் சந்திக்கிறான். பலர் அதை என்னுடைய சிறந்த நாவல்களில் ஒன்றாகச் சொல்கிறார்கள். இன்றும் மதுமிதா என்ற பெயர் பெண் குழந்தை களுக்கு வைக்கப்படுகிறது.

22 ஆண்டுகள் கடந்தும், 'பிரிவோம் சந்திப்போம்' நாவல் ஒவ்வொரு முறை மறுபதிப்பாக வரும்போதும், ஆசிரியர் பாலனின் திறமையையும் தாராள மனசையும் நினைத்துக்கொள்கிறேன். ஃபிலிம் சேம்பரில் போய்ப் பணம் கொடுத்து டைட்டிலைப் பதிவு செய்து கொண்டு, அவ்வப்போது புதுப்பிக்க வேண்டிய அவசியமெல்லாம் எனக்கில்லை. மக்கள் மனதில் பதிவு செய்துவிட்டேன். அது போதும்.



டைரக்டர் ஏ.ஆர்.காந்திகிருஷ்ணா இந்த நாவலைப் படம் எடுக்கத் திரைக்கதை அமைத்து வைத்திருக்கிறார். இதற்காகவே பாபநாசம் போய் வந்தார். ஆனால், இதற்காக இன்னும் அமெரிக்கா போகவில்லை. இடையே அவர் 'சிவாஜி'க்காக அமெரிக்கா போகவேண்டி வந்து விட்டது.

'சிவாஜி' எப்போ ரிலீஸ் என்று என்னை அடிக்கடி கேட்கிறார்கள். ஸ்காட்லாண்டில் ஏ.ஆர்.ரஹ்மான் ரீ-ரிக்கார்டிங் செய்துகொண்டு இருப்பதாகத் தகவல். எப்படியும் மே மாதம் வந்துவிடும். கவனம் கலைக்க கிரிக்கெட்தான் இல்லையே!

கதீட்ரல் ரோடில் ஒரு நகைக் கடைக்குப் போயிருந்தபோது, அங்கிருந்த சேல்ஸ்மேன் 'சிவாஜி' கதை சொல்லுங்க, விலை ஆயிரம் ரூபாய் குறைக்கிறோம்' என்றபோது, இந்தப் படத்தின் மேல் உள்ள எதிர்பார்ப்பு என்னைத் திகைக்க வைக்கிறது. ரிச்சி ஸ்ட்ரீட் டில் காசெட் சி.டி வாங்கும் போதே ஆரத்தி சுற்றி வாங்குகிறார் களாம் ரஜினி ரசிகர்கள்.

விஜய் டி.வி-யின் சூப்பர் சிங்கர் ஜூனியர் பாட்டுப் போட்டியில், தமிழ்நாட்டின் சிறுவர் சிறுமியரால் எத்தனை விதமாக 'முன்பே வா என் அன்பே வா' பாடலைப் பாட முடியும் என்பதை அறிய முடிகிறது. இந்தக் குழந்தைகள் பாடிக்காட்டும் பாடல்களைவிட அவர்களின் அங்க அசைவுகளையும், ஏமாற்றத்தைச் சமாளிக்கும் முறைகளையும் அதிகம் கவனிக்கிறேன். 'நல்லா பாடறேம்மா, அடுத்த வருஷம் இன்னும் நல்லா பாடுவே' என்று சொன்னால், சில குழந்தைகள் சமர்த்தாகத் தலை யாட்டிவிட்டுச் சிரித்துக்கொண்டே செல்கிறார்கள். சில குழந்தைகள் படக்கென்று கண்களில் நீர் தளும்ப, துடைத்துக்கொண்டு செல்கிறார்கள். ஒரு குழந்தை கதவைத் தட்டி உள்ளே சென்று நடுவரை அதட்டி, 'என்னை எப்படி நிராகரிக்கலாம்? நல்லாத் தானே பாடினேன்' என்று சண்டை போட்டுப் பேப்பரைப் பிடுங்கியது.




இத்தனை ஏமாற்றங்கள் சின்ன வயசில் தேவையா என்று யோசிக்கிறேன்.

பெற்றோர்களும் ஓரத்தில் நின்றுகொண்டு கண்கலங்குகிறார்கள். தத்தம் சின்ன வயசு ஏமாற்றங்களை மறுவாழ்கிறார்கள்.

இவ்வகைப் பெற்றோர்கள் குழந்தை களிடம் அதிக எதிர்பார்ப்புகளை ஏற்படுத்திவிடுகிறார்கள். பையன்கள் என்றால், எட்டாவது வயசிலேயே கிரிக்கெட் பேட்டைப் பிடுங்கிவிட்டு, ஐ.ஐ.டி கோச்சிங் ஆரம்பித்துவிடு கிறார்கள். பெண்கள் என்றால், ஆறாவது வயசிலேயே கலர் பென்சிலைப் பிடுங்கிவிட்டு, பரத நாட்டியம், பாட்டு கிளாஸ், கம்ப்யூட்டர் கிளாஸ் என அனுப்பிவிடுகிறார்கள்.

நல்லவேளை, எதிர் பார்ப்புகள் ஏதும் இல்லாத பாட்டியிடம் நான் வளர்ந்தேன். "அவன் யாருடைய பேரன்... பாஸ் பண்ணிடுவான்' என்ற ஒரே நம்பிக்கையை, சின்ன வயசில் காலமான தன் கணவரின் பேரில் வைத்து வளர்த்தாள். இதனால் போட்டிகள் எதற்கும் என்னை அவள் அனுப்பவில்லை. நானாகச் சென்று ஒரே ஒரு

முறை எம்.ஐ.டி-யில் பாட்டுப்போட்டியில் கலந்துகொண்டு, கர்நாடக இசைப் பிரிவில் ‘காரணம் கேட்டு வாடி’ பாதி பாடிவிட்டு, மூன்றாவது பரிசாக சொப்பு மாதிரி ஒரு கப்பு வாங்கினேன். அந்தப் பிரிவில் மொத்தம் கலந்து கொண்டவர்கள் எண்ணிக்கை மூன்று.

அந்தக் கப்பை அலமாரியில் வைத்து, பக்கத்தில் ஒரு பூதக் கண்ணாடியையும் வைக்கணும் என்பாள் என் மனைவி.

**கேள்வி:** ஜெம்மாலஜி பற்றி உங்கள் கருத்து என்ன? நீங்கள் அதை நம்புகிறீர்களா?



**பதில்-1:** இயற்பியல் படித்த எனக்கு, கண்ணாடிக் கற்களின் வண்ணங்களுக்கான காரணங்கள் தெரியும். சூரியனின் ஸ்பெக்ட்ரல் நிறமாலை ஒளியில், மற்ற அலை நீளங்களை கிரகித்துக்கொள்வதால் ஏற்படுவது ஒற்றை வண்ணம் என்பதையும், முழுமையான உள் பிரதிபலிப்பான total internal reflection பற்றியும் அறிந்த ஒருவனால் எப்படி நம்ப முடியும்?

**பதில்-2:** என் மனைவி ஒரு நவரத்தின மோதிரம் தந்திருக்கிறாள். அதைக் கழற்றாமல் அணிந்து கொள்வதால் நல்ல பலன் உள்ளது - வீட்டில் நிம்மதி!

### எ.பி.க.



**க**டைசி மடல் என்று
கனவிலும் நினையாதே
மீள
வித்தாய் விழுதலும்
வீரியமாய் முளைத்தலும்
பூவும் பிஞ்சும் கனியும் தாங்கிப்
போராட வருதலும்
எவ்வாறு கடைசியாகும்?

\- **சஞ்சுதன்**(சிறையிலிருந்து மடல்கள்)



எ.பி.மே(ற்கோள்)

‘என் நீண்ட ஆயுளுக்கும் ஆரோக்கியத்துக்கும் காரணம் தெளிவாகத் தெரிந்துவிட்டது. நான் ஒரு சிகரெட்கூடப் பிடித்ததில்லை; ஒரு பெண்ணைக்கூடத் தொட்டதில்லை... என் பத்து வயது வரை!’

\- ஜார்ஜ் மூர்

## அழிவின் விளிம்பில்...

புதுமைப்பித்தன் (1906-1948) விளையாட்டாகச் சில வெண்பாக்கள் எழுதியுள்ளார்.

*‘கந்தா கடம்பா கதிர்வேலா கட்டழகா*
*சந்தார் தடந்தோளா சட்டுனுவா - இந்தவூர்*
*ரேடியோக் காரரெனை நெருக்குகிறார் லேட்டாச்சாம்*
*ஓடியே ஓடியே வா.’*

நூற்றாண்டு நிறைவுபெறும் புதுமைப்பித்தன் அற்புதமான கதைகள் எழுதியது போதாதா? எதற்காகத் தளைதட்டும் வெண் பாக்கள் எழுத வேண்டும்? படைப்பாளிக்கு ஒரு வடிவம் சில வேளைகளில் போதுவதில்லை. எதையாவது அவசரமாகச் சொல்ல/ செய்ய வேண்டிய அவசியம் நேரும்போது கிடைக்கிற வடிவத்தைப் பயன்படுத்துவார்கள். விக்கிரமாதித்தன் கதை(கட்டில் சொன்ன கதை), உருவகக் கதை (கயிற்றரவு), குறுநாவல் (சிற்றன்னை) எனக் கையில் கிடைத்த எந்த வடிவத்தையும் பயன்படுத்தியுள்ளார் புதுமைப் பித்தன். வெண்பாவையும் விட்டு வைக்கவில்லை.


தி.ஜானகிராமன்


கு.ப.ரா.


ந.பிச்சமூர்த்தி


சி.சு.செல்லப்பா


கல்கி


வைத்தீஸ்வரன்

இது போல கு.ப.ரா., பிச்சமூர்த்தி, சி.சு. செல்லப்பா போன்றவர்கள் புதுக்கவிதை வடிவத்தை நாட, அதுவே ஒரு தனி இயக்கமாகி, இப்போது தமிழின் பிரதான வடிவ மாகி கவியரங்கங்களில் சீப்படுகிறது.

கல்கி, சங்கீதப் பிரியர். அதனால் சில அருமையான இசைப் பாடல்கள் இயற்றினார். தி.ஜானகிராமன் பாடியே காட்டுவார். வைத்தீஸ் வரன் போன்ற கவிஞர்கள் கவிதையுடன் நவீன சித்திரங்கள் வரைந்திருக்கிறார்கள். கமல்ஹாசன் ஒரு தொகுப்பு கொண்டுவரும் அளவுக்குக் கவிதைகள் எழுதிவைத்துள்ளார். ரஜினிகாந்த்தின் ஆன்மிக அறிவு ஆழமானது. சுஹாசினி, ராதிகா போன்றவர்கள் படப்பிடிப்பின் இடையில் நிறையப் புத்தகங்கள் படிப்பதைப் பார்த் திருக்கிறேன்.

ஆர்.எஸ்.மோகனராஜன், ‘குமரி மாவட்டத்துத் தமிழ் வழக்கு’ என்ற தன் ஒல்லியான புத்தகத்தை அனுப்பி யிருந்தார். (விலை 50 காசு, செந்தமிழ் நிலையம், நாவலர் இல்லம், நாகர்கோவில்-2). குமரி மாவட்டத்தின் அன்றாடச் சொற்களில் வடமொழி, பிறமொழிக் கலப்பு இல்லை என்பதை நிலைநாட்ட பல உதாரணங்கள்கொடுத்திருக்கிறார்.




அவற்றில் சில...

சாதம் - சோறு, ஜாஸ்தி - கூடுதல், நிஜம்தான் - நேர் தான், புரிஞ்சுதா- விளங்கியதா, சட்டை - உடுப்பு, சாப்பிட்டான் - தின்றான், வேஷ்டி - முண்டு, மோசம் - ஐயம், பரவாயில்லை - கொள்ளலாம்.

மலையாளம், தமிழின் கிளை மொழி. ‘நம்பூதிரிகள் என்னும் ஆரியர்கள் சேர நாட்டில் நுழைந்து, அதில் வட மொழியைக் கலந்துவிட் டார்கள்’ என்பது போன்ற விவாதத்துக்குரிய கருத்துக் களை நாம் அடிக்கடி உரக்கச் சொல்வதால்தான் முல்லைப் பெரியாறுக்கு இன்னொரு அணை கட்டித் தண்ணீரைத் தடுக்க வேண்டும் என்கிறார் கள் மலையாளிகள்.

நம் உலக உருண்டையை பூகோளப் பாட வகுப்பறைகளில் வைத்திருக்கும் அளவுக்குச் சுருக்கினால், நம்மைச் சுற்றியுள்ள காற்று மண்டலம் இரண்டு

பூச்சு பெயின்ட் அளவுக்குதான் வரும். அத்தனை மெல்லியது. உண்மையில் அது சுமார் 1,900 கி.மீ. பரவியிருந்தா லும் உலகின் அளவுடன் ஒப்பிட்டால் ரொம்பச் சின்னது. ஆனால், மிகமிக முக்கியமானது. இதுதான் நம்மைக் காப்பாற்றுகிறது. உயிர் வாழ அனுமதிக் கிறது. விண்வெளியிலிருந்து பூமியின் மேல் மோத வரும் அபாயகரமான காஸ்மிக் கதிர்களை வடிகட்டுவதில் இது நாலரை மீட்டர் கான்க்ரீட் சுவருக்குச் சமம். இந்தக் காற்று மண்டலம் இல்லையேல், மழை பெய்வதைக்கூட நம் மண்டை தாங்காது. மழையை மழுப்புவதும் இதே! இவ்வ ளவு நன்மைகள் தரும் சுற்றுச்சூழலை நாம் பொறுப்பில்லாமல் பாழடித்துக் கொண்டு இருக்கிறோம்.

நாம் எரிக்கும் பொருள்களால் காற்றில் விடுவிக்கும் புகை, கார்பன் சக்கரத்தைக் கலைக்கும்போது சுற்றுச் சூழலின் சராசரி உஷ்ணம் அதிகமாகி வருகிறது. அதற்கேற்ப நாம் பழகும் வழிகளைக் கற்றுக்கொள்ளத் திணறுவோம். மனித இனமே அழிவின் விளிம்புக்குக்கூடச் செல்லலாம் என்று எச்சரிக்கிறார்கள். இது எப்போது நிகழும் என்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு.

இதற்கு முன்பே பூமியின் சரித்திரத்தில் ஒரு தடவை இம்மாதிரி நிகழ்ந்திருக்கிறதாம். அதிலிருந்து ஆற 60 ஆயிரம் ஆண்டுகள் ஆயிற்றாம்!

ஃபாஸில் ஃப்யூல் என்னும் பெட்ரோல், டீசல், எரிவாயு காலியாகி விடும். அதற்கு இன்றைய கணக்கின் படி 40 ஆண்டுகள் ஆகும் என்கிறார்கள். அதற்கு முன்பே ஹைட்ரஜன் அல்லது சூரிய சக்தி சார்ந்த வாகனங்கள் கண்டுபிடிக்கப்பட வேண்டும். அணுமின் உற்பத்தி அதிகமாக வேண்டும். அணுமின் நிலையங்களில் சுற்றுச்சூழலைப் பாதிக்கும் பிரச்னை இல்லை. ஆனால், அதன் கழிவுப் பொருள்கள் கதிரியக்கம் ஒரு பிரச்னை.

எனவே, இப்போதைக்குக் கவலை இல்லை.



## போட்டி ஹைகூ

**வி**கடன் 4.4.07 தேதியிட்ட இதழில், ‘கற்றதும்... பெற்றதும்...’ பகுதியில் ஒரு போட்டோவைக் கொடுத்து, அதற்குப் பொருத்தமாக ஹைகூ எழுதச் சொல்லிக் கேட்டிருந்தோம்.

ஏராளமானவை வந்தன. பெரும்பாலானவை ‘எனக்கு எங்கேம்மா ஹெல்மெட்?’ என்று கூடைக் குழந்தை கேட்பதுபோல் வந்தன. இட ஒதுக்கீட்டைத் தொடர்புபடுத்தியும் பல ஹைகூக்கள் வந்தன.

தேறினவற்றில் ஒன்றை மட்டும் தந்துள்ளேன். இதை அனுப்பிய எடப்பாடி வான்மதிக்கு புத்தகப் பரிசு.

*‘கைக்குழந்தை எல்லோருக்கும் தெரியும்.*
*இதென்ன*
*பைக் குழந்தை.’*

எ.பி.க.

## முன்னாள்



தினம் சமைக்கும்போது
இந்தத் தண்ணீரில்தான்
நீந்திச் சாதனைகள் செய்தோம்
என்று நினைத்ததுண்டா
என்ற கேள்விக்கு சிரித்தாள்
குடும்பத் தலைவி ஆகி
கொஞ்சம் குண்டாகவும் ஆகிவிட்ட
அந்த முன்னாள் நீச்சல் வீராங்கனை!

- **முகுந்த் நாகராஜ்**

## என்னது?!



'சுத்தத்தில் சென்னை இந்திய நகரங்களில் இரண்டாவதாக இருக்கிறது!'

- **ஹிந்து 7.4.07 செய்தி** (இம்மாதிரியான தமாஷான செய்திகள் கிடைத்தால் வாசகர்கள் அனுப்பலாம்!)

## வறட்டு மிடுக்கு... சிறு பிள்ளைத் துடுக்கு..!

**பெ**ரியோர்களே, வயோதிகர்களே... பொருள்களைக் கையால் பிடிக்கச் சிரமமாக இருக்கிறதா? எப்போதும் கை, கால்கள் நடுங்கிக் கொண்டே இருக்கிறதா? உட்கார்ந்து எழுந்திருக்கும் போது தள்ளாடுகிறீர்களா? குழந்தையைப் போல சிற்றடி வைத்து நடக்கிறீர்களா? உங்களுக்கு பார்க்கின்ஸன்ஸ் வியாதியின் ஆரம்ப அறிகுறிகள் இருக்கலாம். உடனே நரம்பு டாக்டரைப் பார்க்கவும்.

1817-ம் ஆண்டு, லண்டனில் டாக்டர் ஜேம்ஸ் பார்க்கின்ஸன் என்பவர்தான் முதலில் இந்த அறிகுறிகளை ஆறு பேரிடம் கண்டார்.

நடுக்கம், தசை இறுக்கம், உடல் மெத்தனம், தள்ளாட்டம்... மூளையின் ந்யூரான்கள் என்னும் நரம்பு செல்கள் உற்பத்தியாகும் இரண்டு பகுதிகளில் இரண்டினிடையே ‘கருத்து’ப் பரி மாற்றத்துக்குப் பயன்படும் டோப்பாமின் குறைவினால் ஏற்படுவதாம் இந்த வியாதி (குடிப்பழக்கம் உள்ளவர்களின் சாயங்காலக் கை நடுக்கமும், குடித்த பின் தள்ளாட்டமும் பார்க்கின்ஸன்ஸுடன் சேராது!). இதற்கு நிரந்தர சிகிச்சை சென்ற வாரம் வரை இல்லை.

மாசே துங்



ஹிட்லர்



முகமது அலி



ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஆண்களை அதிகம் பாதிக்கும் இந்த நோயின் அறிகுறிகள் என்ன, தடுப்பது எப்படி, என்னென்ன உணவுகள் கொள்ளலாம், என்ன கூடாது போன்ற பல விவரங்கள் கொண்ட ‘பார்க்கின் ஸன்ஸ் பயங்கரம்’ என்ற நூலை (தலைப்பில் மிரட்டலைத் தவிர்த் திருக்கலாம்) டாக்டர் ஏ.வி.ஸ்ரீனி வாசன் எழுதியிருக்கிறார்.

பார்க்கின்ஸன் அறிகுறிகள் இருப் பவர்களுக்கான சில உடற்பயிற்சிகளைப் படம் போட்டு விளக்கியிருக்கிறார். மாவீரன் அலெக்ஸாண்டர், மாசே துங், ஹிட்லர், முகமது அலி போன்றவர்கள் இந்த நோயை வென் றிருக்கிறார்கள். சிகிச்சையைக் காட் டிலும் அன்பும் அரவணைப்பும் தான் தேவை என்பது இந்தப் புத்தகத்தின் செய்தி. டாக்டர் ஸ்ரீனிவாசன், காமன்வெல்த் மெடிக்கல்/ஃபெலோஷிப் வழங்கப்பட்ட ஒரே தமிழக நரம்பியல் நிபுணராம்!

தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று காலை மழை பெய்ததால், சீக்கிரமே எழுந்து, வராந்தாவிலிருந்து மழையைப் பார்த்துக்கொண்டு இருந்தேன். இளம் வயதில் நனைந்திருப்பேன்.

‘கற்றதும்... பெற்றதும்...’ மூலம் வாரா வாரம் நேசிக்கும் விகடன் வாசகர்களுக்குத் தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள். தொலைக்காட்சியில் 45 விளம்பரங்கள் முடியக் காத்திருந்து கிடைக்கும் சந்தில், கவியரங்கத்தையோ பட்டிமன்றத்தையோ சினிமாக் கலைஞர்களின் பயனுள்ள பேட்டிகளையோ பாட்டுக்களையோ பார்க்கும் பொறுமையைத் தமிழன்னை உங்களுக்குத் தரப் பிரார்த்திக்கிறேன்.

எனக்கு அது சுத்தமாக இல்லையாதலால், டச்சு சித்திரக்காரர் பியத் மோந்திரியன் (Piet Mondrian) பற்றித் தேனுகா எழுதிய புத்தகத்தின் அற்புதமான சித்திரங்களிலும், அம்மன்கிளி முருகதாஸ் எழுதிய சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும் நூலிலும் ஆழ்ந்துவிட்டேன்.

உயிர்மை பதிப்பகத்தின் ஹமீது வந்திருந்தார். தமிழக அரசின் லைப்ரரி ஆர்டர்களில் தாமதம் பற்றிச் சொன்

னார். ‘உங்களுக்கு மட்டுமா?’ என்று கேட்டதற்கு, ‘எல்லோருக்கும் தான்’ என்றார். அரசின் லைப்ரரி ஆர்டரையே நம்பிக்கொண்டு இருக்கும் பல சிறுபதிப்பாளர் களுக்கு இந்தப் புத்தாண்டில் கலைஞர் ஆறுதல் அளிப்பார் என நம்புகிறேன்.

தமிழ்ப் புத்தகங்கள் லைப்ரரி ஆர்டரை மட்டும் நம்பும் நிலையை மாற்ற, மாதா மாதம் புத்தகச் சந்தை கள் நடைபெறவும், புத்தகச் சந்தைக்காக வாக்களிக்கப்பட்ட நிரந்தர இடம் கிடைக்கவும் மீண்டும் தமிழன்னையைப் பிரார்த்திக்கிறேன்.

பியத் மோந்திரியன் சித்திரம்



ஆங்கிலச் செய்தி சேனல்களில் ‘டைம்ஸ் நவ்’ சுவாரஸ்யமாகவும், விளம்பரங்கள் குறைவாகவும், செய் திப் பின்னணிகள் அதிகமாகவும் இருக்கிறது. உதாரணமாக, சில ஆண்டுகளுக்கு முன் மிகப் பிரபல மாக இருந்த ஒனிடா மொட்டை, ‘ஐ லவ் யூ ரஸ்னா’ சிறுமி, சோப்புத் தூள் லலிதாஜி போன்றவர்கள் என்ன ஆனார்கள், எங்கே இருக்கிறார்கள் என்று ஒரு நிகழ்ச்சி செய்திருந்தார்கள்.

ரஸ்னா சிறுமி இன்று கோலிவுட்டில் நடனமாடுகிறார். ஒனிடா மொட்டை பெண்மை மிளிரும் குரலில், இன்னும் மொட்டையாகத் தான் இருக்கிறார். லலிதாஜிக்கு வயசாகிவிட்டது. இந்த விளம்பரங் களைத் தயாரித்த பதம்ஸி, பியுஷ் பாண்டே போன்றவர்கள் மிகப் பெரிய நிறுவனங்களின் அதிபர் களாகிவிட்டார்கள்.

Faux pas (ஃபா பா) - ‘தப்பான தப்படி’ என்று ஒரு பிரெஞ்ச் சொலவடை, சமூகப் பொறுப்பற்ற சங்கடப்படுத்தும் செயல்களைக் குறிக்கும். சென்ற வாரம் இன்ஃபோசிஸ் நாராயணமூர்த்தி, ராகுல் காந்தி இருவரின் செய்கைகளை அப்படிச் சொல்லலாம். நாராயண மூர்த்தி, ஜனாதிபதி அப்துல்கலாம் வந்திருந்தபோது, ‘எங்கள் இன்ஜினீயர் களுக்கு தேசிய கீதம் பாட வராது. தெரியாது. அதனால் மெட்டை மட்டும் வாசிக்கச் சொன்னேன்’ என்று சொல்லியிருக்க வேண்டாம். தேசியகீதம் வாசித்தபோது, அப்துல்கலாம் மட்டும் பாடிக்கொண்டு இருந்தார்!

ராகுல்காந்தி, ‘இந்தியாவை ஒருமைப்படுத்தியதும், பாகிஸ்தானை இரண்டாகப் பிரித்ததும் தனது குடும்பத்தின் சாதனை’ என்று உ.பி. தேர்தல் பிரசாரத்தில் சொல்லியிருக்க வேண்டாம். இன்றைய தினங்களில், தொலைக்காட்சி செய்திச் சேனல்கள் எப்படா தப்பு வரும் என்று காத்திருக் கின்றன.

நாராயணமூர்த்தி சொன்னது வறட்டு மிடுக்கு; ராகுல் சொன்னது சிறுபிள்ளைத் துடுக்கு!

**என்னது?!**



**தி**ருநீர்மலை அருகில் உள்ள கிராமத்தில், மனிதக்கழிவுப் பொருளிலிருந்து ‘கேஸ்’ எடுத்து 50 தெருவிளக்குகள் எரிகின்றன!

- **13.4.07 செய்தி**

**எ.பி.க.**



**பி**த்தளைச் சட்டிகளுக்குப்
புளிச்சக்கை
சில்வர் தட்டுகளுக்கு
விம் பவுடர்
வெள்ளிப் பாத்திரங்களுக்கு
விபூதி மட்டும்
பளபளவென
விளக்கிவைக்கும்
அம்மாவால்
கடைசிவரை
விளக்கவே முடியவில்லை
அப்பாவிடம் தன் மனசை!

- **ஜீவி**

## பாவாடை ஜித்தரும் பட் படீல் ஜனங்களும்!

**இ**தை எழுதிக்கொண்டு இருக்கும்போது, பாபநாசம் அஷோக் ரமணியின் இரண்டு சி.டி-க்களைக் கேட்டு ரசித்துக் கொண்டு இருக்கிறேன்.

க்ளீவ்லாண்டு தியாகராஜ உற்சவத்தில் பாடிய விரிவான தோடி, 'தென்றல்' என்ற தலைப்பில் பெரும்பாலும் தாத்தாவின் பிரபலமான பாடல்களான 'காணக் கண் கோடி வேண்டும்', 'நானொரு விளையாட்டுப் பொம்மையா' போன்ற கிருதிகளின் தொகுப்பு. நல்ல குரல் வளம்; பயிற்சி; தமிழிசைக்கு மிகப் பெரிய தொண்டு செய்த பரம்பரையைச் சேர்ந்த அஷோக் ரமணியை உலகம் இன்னும் விரிவாக அறிய, ஒரு சினிமா பாட்டு பாடினால் போதும். நம் இசையமைப்பாளர்கள் அதிக நாள் இந்த மென்மையான குரலை விட்டுவைக்க மாட்டார்கள் என்பது என் யூகம். தமிழ் தியாகராஜர் எனக் கருதப்படும் பாபநாசம் சிவனின் நூற்றுக்கணக்கான பாடல்களையும் உலகம் அறிய முடியும்!



காஸ்ட்லி கல்யாணம்



அழகான அலங்காரம்

தமிழின் முதல் இசை நாடகம் 1877-ல் வெளியான 'பிரதாப சந்திர விலாசம்'. இதை 'எனி இந்தியன்' பதிப்பகத்தார் தேடிப் பிடித்து அழகாக மறுபதிப்பு செய்திருக்கிறார்கள். ரசித்துப் படித்தேன். இதை எழுதிய ராமசாமி ராஜு, (பி.ஏ. பாரிஸ்டர் அட் லா, எச்.ஆர்எச்.எஸ் (லண்டன்) எம்.ஆர்.ஏ.எஸ் (லண்டன்) (whatever that means) இந்த நாடகத்தின் குறிக்கோளைச் சொல்லும்போது அவரது விநோத மொழி நடையையும் கவனிக்க முடிகிறது.

'நம்முடைய நாட்டில் அநேகர் இயற்கையாக நல்லறிவு படைத்துக் கல்வி கற்றுத் தேர்ந்து, அவரவர் அதிர்ஷ்டத்துக்கும் முயற்சிக்கும் தக்கபடி மதிப்புள்ள ஸ்திதிக்கு வந்ததும், அற்ப வயதிலேயே தங்காலத்தை

முடித்து, மனைவி மக்களை வருத்தத்தில் முழுத்தி, பந்து மித்திரர்களுக்கெல்லாம் தீராத கிலேசத்தை உண்டாக்கி விட்டுப் போகின்றனர். இந்த விபரீதத்துக்கு பெரும்பாலும் காரணம் ஏதோவென்று ஆராயப் புகின், இந்நூலில் வெளியிட்டு மறுத்திருக்கும் துன்பங்களேயோம். அந்தோ! வேசையர் முதலிய மாதர் களோடும், ஒயின், பிராந்தி, முதலிய சாராய வர்க்கங்களோடும் தம் வாழ்நாளை நமனார்க்குக் கொள்ளை கொடுக்கும் துரதிர்ஷ்டப் பிராணிகளின் தொகையை எண்ணி முடியுமோ?'

காப்புச் செய்யுள், கட்டியங்காரர் உரை, ராகம், தாளம் பல்லவி, அனுபல்லவி என எடுத்ததற்கெல்லாம் ஆங்கில வார்த்தைகள், கொச்சை வார்த்தைகள் விரவிய பாடல்களுடன் ஷோக் சுந்தரம், மத்தாப்பு சுந்தரம், பாவாடை ஜித்தர், பட்பட் படீல் முதலிய ஜனங்கள் தத்தம் இயல்புக்கிசைய வார்த்தையாடுகின்றனர்.


கண்ணிவெடி
கவலை

இந்நாடகத்தை யாராவது தியேட்டர் க்ரூப் எடுத்து, (மியூஸியம் தியேட்டர்தான் இதற்குப் பொருத் தம்) அதில் நடித்துக் காட்டினால், சிகரெட் குடிக்கும் பெண்களும் ஜோல்னாப் பையர் களும் வந்து பார்க்கலாம்.

சர்வஜித் ஆண்டு பிறக்கும் வேளையில், 'கற்றதும்... பெற்றதும்...' தரும் ஆண்டுப் பலன் - அபிஷேக் பச்சனும் ஐஸ்வர்யா ராயும், ராஜஸ்தானிலிருந்து 50 கிலோ ஹென்னா வரவழைத்து மருதாணி தடவிக்கொண்டு, ராஜீவ்மேனன் அழைத்துச் சென்ற நாகஸ் வரக்காரர்களும் கொண்டாடுவதையும், அமிதாப் பச்சனின் நாயையும், திருமண வீட்டின் மூடிய வாசற்கதவையும் NDTV 24X7-ல் தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கப் பெற்றோம். நாள் முழுவதும் நிரப்பச் செய்தி கிடைக்காமல் தவிப்பது நம் உலக மயமாக்கத்தின் அடையாளமாகிவிட, வர்ஜீனியா டெக் பல்கலைக்கழகத்தில் கொரிய மாணவன் பாயைப் பிராண்டி விட்டு, 32 பேரை சகட்டுமேனிக்குச் சுட்டுக் கொன்றதற்குக் காரணம், அமெரிக்க கேம்பஸ் வாழ்வில் உள்ள தனிமையும் அலட்சியப் போக்கும்தான் என்று சைக்கலாஜிஸ்ட்டுகள் கண்ணாடியைக் கழற்றி விட்டு அலசியதை அறிந் தோம்.

இராக்கில் வழக்கம் போல நூற்றுக்கணக்கில் சன்னிக்களும் ஷியாக்களும் கண்ணி வெடித்துச் சாவதைக் கவனிக்க மறந்தோம். நம் எம்.பி-க்கள், மனைவியின் பாஸ்போர்ட்டில் போட்டோவை மாற்றி ஒட்டி, பஞ்சாபிப் பெண் மணிகளை முப்பது லட்சத்துக்கு திருட்டுத்தனமாகக் கனடா கொண்டு சேர்ப்பதையும் யதார்த்தமாக எடுத்துக்கொண்டோம். இதெல்லாம் முக்கியக் கிரகங்களான குருவும், கேதுவும், சனியும் நன்மை செய்யாத நிலையில் சஞ்சரிக்க இந்தப் புத் தாண்டு பிறந்ததால் ஏற்பட்ட சங்கடங்கள்! இருப்பினும் கூடுதல் சங்கடங்கள் ஏற்படாமலிருக்க, பொறுமையும் கைப்பணத்தில் கவனமும் செலுத்தி, அட்சய திருதியைக்கு ஒரு குபேர விளக்கு வாங்கி ஏற்றிவைத்தால் போதும்!

உலக பூமி தினம் என இரண்டு தினங்களைக் கொண்டாடுகிறோம். மார்ச் மாதம் இரவும் பகலும் சரிபாதியாக 12 மணி நேரம் நீடிக்கும் 'வெர்னல் ஈக்விநாக்ஸ்' தினத்தை ஐ.நா., ஜப்பான் தந்த மணி ஒன்றை அடித்துக் கொண்டாடுகிறது. ஏப்ரல் 22-ம் தேதியை சுற்றுச்சூழல் விழிப்பு உணர்வுக்காக 175 தேசங்கள் கொண்டாடுகின்றன.


ஃபோர்ஜரி பெண்டாட்டி


கொரிய கொலைகாரன்

இவ்விரு பூமி தினங்களில் மட்டுமின்றி, எந்தத் தினத்திலும் விண்வெளியிலிருந்து பார்க்கையில் நீலப்பந்தாகத்

தோன்றும், அகழ்வாரையும் தாங்கும் நிலமென்னும் நல்லாளுக்குச் சில காரியங்கள் நம்மால் செய்ய முடியும். கடைகளில் பிளாஸ்டிக் பைகளில் பொருள்கள் பெறுவதைத் தவிர்க்கலாம், விளக்கை அணைக்கலாம், பல்பை மாற்றலாம், குழாயை மூடலாம், குப்பையை ரகம் பிரிக்கலாம், முடிந்தால் ஆபீஸுக்கு நடந்து செல்லலாம். அப்படிச் செல்கையில்... தி.ஜானகிராமன் ஒரு முறை எனக்கு டெல்லியில் சொன்னது போல, மரங்களை நிமிர்ந்து பார்த்து அவற் றுக்குப் பெயர் சொல்லலாம், கணக்கெடுக்கலாம்.

பிரபஞ்சத்தில் இன்று வரை உயிரினங்கள் வாழும் ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு என்று எப்படியோ தப்பிப்போய் சமச் சீதோஷ்ணத்தில் சுற்றும் கிரகம் பூமி. இதைப் பொறுப்பின்றிப் பாழடிக்க நம்மால் ஆனதைச் செய்வதை நிறுத்தினாலே போதும்..! இல்லையேல், கொள்ளுப் பேரர்கள் நமக்கு எள்ளு போட மாட்டார்கள்!

### ஹைகூ!

**கோடை**



குதித்துப்பறக்கும் குருவிகளும்
மலர் மொட்டுகளும்
விட்டுவிட்டு வீசும்
உஷ்ணக் காற்றும்!

**-மார்கன்**

### எ.பி.க.



**இ**ன்றைய சூதாட்டத்தில்
மிச்சமிருந்த எல்லாவற்றையும் இழந்த பிறகு
இழக்க முடியாமல் மிஞ்சிவிட்டன
கத்தரிக்கப்பட்ட ஒரு தலைமுடிச் சுருள்
எப்போதோ திருடி வந்த ஓர் உள்ளாடை
கிழிக்கப்பட்ட ஒரு கடிதத்தின் துண்டுகள்
பாதி அழிந்த ஒரு தொலைபேசி எண்
எல்லா விளக்குகளும் அவிந்த இருளில்
உற்றுப்பார்க்கும் ஒரு ஜோடிக் கண்கள்!

**- மனுஷ்ய புத்திரன்**

### என்னது?!



சென்னை ராஜா முத்தையா செட்டியார் ஹாலில் மார்ச் 30-ம் தேதியன்று 3,000 பேர் கலந்துகொண்ட மெகா சுயம்வரத்தில் கூடுதல் அட்ராக்ஷன்... கிளி, எலி ஜோசியம்!

**எ.பி. மேற்கோள்!**

**இ**லக்கணத்தை மாற்றுகிற காரியமும் இலக்கணத்தை உடைக்கிற செயலும் இலக்கணம் அறியாத பலவீனத்திலிருந்து எழுந்து அமைதல் கூடாது!

- **ஜெயகாந்தன்**

## வெல்வான் தமிழன்!

**சி**ல வாரங்களுக்கு முன் ஈழத்துத் தமிழ்க் கவிதைகள் பற்றி எழுதும்போது, ‘கூடைக்குள் தேசம்’ என்பதில், கூடை என்பது தேயிலை சேகரிக்கும் முதுகுக்கூடை என்று லண்டனிலிருந்து இளைய அப்துல்லா போன் பண்ணிச் சொன்னார். இந்தப் பகுதியில் ஒரு தவறு நிகழ்ந்தாலும், உலகெங்கிலும் தமிழர்கள் சுட்டிக் காட்டக் காத்திருக்கிறார்கள் என்று சொன்னேன் அல்லவா?

அதே தொகுப்பில், நாமகளின் ‘யதார்த்தம்’ என்ற கவிதையின் ஒரு பகுதி, இந்த வார எ.பி.க. தமிழ்நாட்டில் இது சாத்தியமா? யோசியுங்கள்.

என்சைக்ளோபீடியா பிரிட்டானிகாவை கலைஞர் வெளியிட, தமிழில் தந்திருக்கும் விகடன் பிரசுரத்தார் இந்த வாரப் பாராட்டுக்குரியவர்கள். உலகின் மொத்தமான அறிவின் கருவூலமாகத் திகழும் பிரிட்டானிகா என்சைக்ளோபீடியா, நம்மிடையே புழங்கும் பல தப்பான தகவல்களைச் சரிபார்க்கவும் சீர்படுத்தவும் அறிவை மேம்படுத்தவும் உதவும். நம் மொழி கலாசாரங்களைப் பற்றி விவாதங்களுக்கு உணர்ச்சிவசப்படாமல் முற்றுப்புள்ளி வைக்கவும் பயன்படும். முக்கியமாக நம் பட்டி/வழக்காடு மன்றங்களில் கட்டாயமாக ஒரு பிரதி வைத்துக்கொள்ளவேண்டும்.






இந்தச் சமயத்தில் தமிழில் முதல் கலைக் களஞ்சியங்களைக் கொண்டு வந்த முன்னோடிகளை நினைவு கொள்வது பொருத்தம். தமிழின் முதல் ‘என்சைக்ளோபீடியா’ அபிதான சிந்தாமணிதான். அது 1899-ல் எழுதப் பட்டு, 1910-ல் வெளிவந்தது. அதன் ஆசிரியர் சிங்காரவேலு முதலியார். அதை எழுதிய காலத்தில் தனக்குத் தெரிந்த பொது அறிவு விஷயங்களையும், புராண இதிகாச விஷயங்களையும், கொஞ்சம் அறிவியலையும் சேகரித்து எழுதினார். அதற்கு இன்று தகவல் மதிப்பைவிட சரித்திர மதிப்புதான் அதிகம். முதலியாரின் பரந்த அறிவு இன்றும் வியக்கவைக்கும்.

அடுத்த உண்மையான என்சைக்ளோபீடியா, அவினாசிலிங்கம் செட்டியார் தலைமையில் அமைக் கப்பட்ட தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலம் பெரியசாமித் தூரன் அவர்களை (1908-1987) பிரதம ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த, பத்து பாகங்கள் கொண்ட பிரமாண்டமான கலைக் களஞ்சியம். அதிலிருந்து கிளைத்தெழுந்த சிறுவர் கலைக் களஞ்சியமும் மிக முக்கியமானது. நான் படித்திருக்கிறேன். பல கட்டுரைகள் இன்றும் பழசாகாமல் உள்ளன. எடிட் செய்து யாராவது ஒரு சிறிய கலைக் களஞ்சியம் வெளியிடலாம்.

பிரிட்டானிகா கட்டுரைகள் அவ்வப்போது புதுப்பிக்கப்படுகின்றன. புதிய விஷயங்கள் சேர்க்கப்படுகின்றன. அது ஒரு உலகளாவிய அமைப்பு. பல மொழிகளில் வந்திருக்கிறது. மலை யாளத்தில் 30,000 பிரதிகள் விற்றிருக்கிறதாம். தமிழர்கள் இந்தச் சாதனையை நிச்சயம் வெல்வார்கள்.



பாப் உல்மர்



ஒரு வழியாக முடிந்தது. என்ன ஒரு உலகக் கோப்பை இது? இந்தியா - பாகிஸ்தான் இல்லாத காலிக் கோப்பை. பாப் உல்மரின் மரணம் தொட்ட ரத்தக் கோப்பை. இங்கிலாந்து - மேற்கிந்தியத் தீவுகளுக்கிடையே ஒரே ஒரு ஆட்டத்தைத் தவிர, மற்ற தெல்லாம் ஒருபட்ச கொட்டாவிக் கோப்பை! மழையால் நனைந்த டக்வொர்த் கோப்பை. இதில் ஏதாவது நல்லது நிகழ்ந்ததா? பங்களாதேஷும் அயர்லாந்தும் பெற்ற புது தைரியம். தவிர, நம் தர்ட்டி ப்ளஸ் வீரர்கள் இனி கொஞ்ச காலத்துக்காவது பிஸ்கட் வாங்கு, பிளேடு வாங்கு, இன்ஷூரன்ஸ் வாங்கு என்று வற்புறுத்தமாட்டார்கள்.

'அப்பாடா ஒழிந்தார்கள்' என்று பார்த்தால், அபிஷேக்பச்சனின் பார்கின்ஸன் தலையாட்டலையும், அப்பா பச்சனின் மிஸ். மணப்பாறை மாட்டையும் யாராவது நிறுத்தமாட் டார்களா? இதற்கெல்லாம் பரிகாரம் தேடினால், பொதிகையில் விவாதி ராகங்களும் (போகிறபோக்கில் தொட் டுக்கொள்ளும் ஸ்வரங்கள் உள்ள ராகங்கள். உதாரணம் - கான மூர்த்தி) அல்லது, மக்கள் டி.வி-யில் பேராசிரியர் நன்னனுடன், 'உன் பெயர் என்ன? உன் பெயர் எது? இரண்டுக்கும் வேறு பாடு சொல்வதில் உற்றார் உறவினர் நொதுமலருடன் (அயலார் என்று பொருள்) ஈடுபடலாம்.

'உன் பெயர் என்ன?' என்பது நிஜ மாகவே தெரியாமல் கேட்பது; மற்றது பல பெயர்கள் தெரிந்து, அதில் உன் பெயர் எது என்று கேட்பது subtle.

## ஏ.பி.மேற்கோள்!

"அதைச் செய்ய முடியாது, சாத்தியமில்லை என்பதை அறியாத பல இளைஞர்களை சேர்த்துக்கொள்ளவும்!"

- வில்லியம் ராண்டால்ப் ஹார்ஸ்ட் - புத்தக பதிப்பாளர் ஒரு புதிய நிறுவனத்தைத் தொடங்க அறிவுரை!

## என்னது?!



புதுக்கோட்டையிலிருந்து 18 கி.மீ தொலைவில் உள்ள அந்த 9-ம் நூற்றாண்டு குகைக் கோயிலுக்குச் செல்கையில் பார்த்தது - 'திருமயம் ஷாரூக்கான் ரசிகர் மன்றம்'. -நண்பர் தேசிகன் நேரில் கண்டு சொன்ன தகவல்

## எ.பி.க.



**ஆ**ம்புலன்ஸ் வந்து
எல்லாவற்றையும் அள்ளிக்கொண்டு போனது

எஞ்சியதாய்
கொஞ்சமாய் அவனது ரத்தம்
ஒன்றிரண்டு சைக்கிள் கம்பிகள்
ஷெல் துண்டுகள்
அவ்வளவுதான்

வாகனங்கள் அவற்றையும்
துடைத்துக்கொண்டு கடந்தன

வீதியில் இப்போது எதுவுமேயில்லை

மண்ணெண்ணெய் வரிசை
முன்பைவிட நீண்டிருக்கிறது
தேநீர்க் கடையிலும் புதிதாய்
ஒரு பாட்டு ஆரம்பமாகிறது
சனங்கள் விரைந்து கொண்டிருக்கிறார்கள்
ஒன்றுமே நிகழாத மாதிரி!

- **நாமகள்**

## எ.பி.ஹை



குழாயைத் திறந்தால் சூரியன் கோடி மைல்கள் கடந்து தரும் வெந்நீர்

**-மார்கன்**

## சிரிப்பு வருவது எப்போது?

**பா**ர்க்கின்ஸன்ஸ் அறிகுறிகள் பற்றி, மே 2 தேதியிட்ட விகடன் இதழில் எழுதியிருந்தது ஞாபகம் இருக்கலாம். அதன் விளைவு... டாக்டர் ஸ்ரீனிவாசனின் அந்தப் புத்தகம் எங்கே கிடைக்கும், என்ன விலை, வி.பி.பி.யில் அனுப்புவீர்களா, கிரெடிட் கார்டு ஏற்றுக்கொள்வீர்களா போன்ற விவரங்கள் கேட்டுஎனக்கு நிறைய கடிதங்களும், தொலைகூவல்களும், அலை கூவல்களும் வந்தன. அந்தப் புத்தகம் கிடைக்குமிடம்... எண்- 33/15, எல்டாம்ஸ் ரோடு, ஆழ்வார்பேட்டை, சென்னை-18. இந்த விலாசத்துக்குக் கை நடுங்காமல் கடிதமெழுதிப்பெற்றுக் கொள்ளவும்.




**"எனக்கு சட்டமியற்றும் அதிகாரமிருந்தால் மத மாற்றத்தை உடனடியாகத் தடை செய்துவிடுவேன்!"**

– மகாத்மா காந்தி சொன்னதாக ஹிந்துமித்திரன் இதழில்...

மற்ற அன்பர்களுக்கு என் விண்ணப்பம்... 'கற்றதும் பெற்றதும்'மில் வைத்தியப் பகுதி எதுவும் துவக்கும் உத்தேசமில்லை. எனவே, எனக்கு 'சோரியாசிஸ் வருவது ஏன்?', 'வெண்புள்ளியை விரட்டும் மூலிகைகள்', 'வெள்ளை விழும் தொல்லையா?', 'மூட்டு வலிக்கு பூண்டுத் தைலம்' போன்ற புத்தகங்களை தயைகூர்ந்து அனுப்பவேண்டாம் அவற்றில் எதைப் படித்தாலும், அந்தந்த உபாதை எனக்கும் இருப்பதுபோல ஒரு பிரமை ஏற்படுகிறது. Jerome K. Jerome-ன் 'Three Men in a Boat' ஞாபகம் வருகிறது.

ஒவ்வொரு ஆண்டும், மே மாதத்தின் முதல் ஞாயிற்றுக்கிழமையை உலக சிரிப்பு தினமாக கொண்டாடும் போது, 'It is always the best policy to speak the truth - unless, of course, you are an exceptionally good liar' என்று சொன்ன ஜெரோம் கே. ஜெரோம் பற்றிச் சொல்கிறேன்

மே 2, 1859 முதல், ஜூன் 14, 1927 வரை வாழ்ந்த ஜே.கே.ஜே., ஆங்கில இலக்கியத்தின் மிகச் சிறந்த நகைச்சுவை நூலை எழுதியவர். தன் வாழ்வில் நான்கு குறிக்கோள்கள் வைத்திருப்பதாக நண்பர்களிடம் சொன்னார். அவை...




1. ஒரு வெற்றிகரமான பத்திரிகை நடத்துவது;
2. ஒரு வெற்றிகரமான நாடகம் எழுதுவது;
3. ஒரு வெற்றிகரமான புத்தகம் எழுதுவது;
4. எம்.பி ஆவது.


ஜே.கே.ஜே

கொஞ்ச நாள் 'idler' (சோம்பேறி) என்ற பத்திரிகையை வெற்றிகரமாக, யாரோ கேஸ் போடும் வரை, நடத்தினார். ஓரளவுக்கு வெற்றிபெற்ற சில நாடகங்கள் எழுதினார். எம்.பி ஆகவில்லை. ஆனால், நான்கில் மூன்றாவது குறிக்கோளில், எங்கேயோ போய்விட்டார். இன்றும் பேசப்படும் புத்தகம், 'ஒரு படகில் மூன்று பேர்'. தேம்ஸ் நதியில் ஒரு படகில் செல்லும் மூன்று நண்பர்களின் உற்சாகமான அனுபவங்கள் பற்றியது. ஒரு நாயும் உண்டு.

முதல் அத்தியாயத்தில், ஜெரோம் பிரிட்டிஷ் மியூஸியத்துக்குச் சென்று நூலகத்தில் ஒரு மருத்துவப் புத்தகத்தை எடுத்துப் படிக்கிறார். அதில், அகர வரிசையில் வியாதிகளின் அறிகுறிகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. அந்த வியாதிகள் அத்தனையும் தனக்கும் இருப்பதாக அவருக்குத் தோன்றுகிறது. 'Housemaids Knee' என்னும் ஒரே ஒரு வியாதி

மட்டும்தான் தனக்கு இல்லை என்பதை அறிந்து, உடனே அதற்காகக் கவலைப்படுவார்!

'முதலில், இது எனக்கு வருத்தமாக இருந்தது. என்னை அலட்சியப்படுத்துவதாகத் தோன்றியது. ஏன், எனக்கு அந்த வியாதி இல்லை? ஏன் இந்த வெறுக்கத்தக்க ஒதுக்கீடு? சிறிது நேரம் யோசித்துப் பார்த்ததில் சமாதானமானேன். புத்தகத்தில் உள்ள அத்தனை வியாதிகளும் இருக்கிறது எனக்கு. அதில் திருப்திப்படாமல்... ஒன்று மட்டும் இல்லாவிட்டால் என்ன போச்சு? உட்கார்ந்து யோசித்தேன். மருத்துவ இயலுக்கு எத்தனை முக்கியமான சொத்து நான். மருத்துவம் படிக்கும் மாணவர்கள் ஆஸ்பத்திரியைச் சுற்றி வரத்தேவை இல்லை. என்னை ஒரு சுற்றுச் சுற்றி வந்தால் போதும், பட்டயம் பெற்றிடலாம்!"

நகைச்சுவை எழுத்தில் இது ஒரு வகை. வார்த்தைகளில் கோமாளித்தனம், கிச்சுகிச்சு எதுவும் இருக்காது. சீரியஸாகவே எழுதப்பட்டு வாசகரைப் புன்னகைக்க வைக்கும்!

சிரிப்பு என்பது இயல்பாக வரவேண்டும். நாகேஸ்வரராவ் பார்க்கில் அதிகாலையில் நடை பயில்பவர்கள் கூடி, வட்டமாக நின்றுகொண்டு சிரிக்கிறார்கள். காரணம் எதுவும் தேவையில்லை, வெறும் சிரிப்பு போதும் என்பதை என்னால் எற்றுக்கொள்ள முடியவில்லை. சிரிப்பதற்கு இரண்டு முரணான கருத்துகள் மோத வேண்டியது அவசியம். ஆர்தர் கேஸ்லர் இதை விலாவாரியாக அலசியிருக்கிறார். உதாரணங்கள்...

1. "அந்தாளு ரொம்ப மோசம். கைக் குழந்தையை அடிஅடின்னு அடிக்கிறார்."

"குச்சியாலயா, கையாலயா?"

2. "அப்பா! அவன் மூக்கு ஏன் கிளியாட்டம் இருக்கு?"

"அவன் மூக்குன்னு சொல்லக் கூடாது கண்ணு, அவர் மூக்கு!"

அட்கின்ஸன் சொன்னது போல... சிரிப்பு வருவது எப்போது?

ஒருவர் தப்பான இடத்தில் இருக்கும்போது; அல்லது, தப்பாக நடந்து கொள்ளும்போது; அல்லது, தப்பான அளவில் இருக்கும்போது! அத்தனை ஜோக்குகளையும் இந்த மூன்று வகைக்குள் அலசிவிடலாம்.

வசந்த் சொன்ன இந்த ஜோக்கை எந்த வகையில் சேர்க்கலாம் என்று யோசிக்கிறேன்.



வயதான ஒருவரை டாக்டர் ஸ்டெதாஸ்கோப் வைத்துப் பரிசோதித்துவிட்டு, "ஐயா! உங்க இதயத்தில் மர்மர் இருக்கு. சிகரெட் பிடிப்பீங்களா?"

"இல்லை டாக்டர்!"

"குடிப் பழக்கம் உண்டா?"

"ம்ஹூம்!"

டாக்டர் தயக்கத்துடன்... "செக்ஸ் வாழ்க்கை உண்டா?!"

"உண்டு."

"அதனால பரவால்ல, அதைப் பாதியாக் குறைச்சுக்கிறது நல்லது!" என்றார் டாக்டர்.

"எந்தப் பாதி? பார்க்கிறதையா, நினைக்கிறதையா?"

**ம**ற்றொரு பிறந்ததினம் வந்துபோனது. சென்ற வருஷம்போல் திருவல்லிக்கேணி கோயிலுக்குச் சென்று பார்த்தசாரதியைத் தரிசித்து விட்டு, நான் பிறந்த வீட்டை ஒரு முறை பார்த்துவிட்டு, சேவாலயா முதியவர்களுக்கு ஒரு நாள் உணவுக்குப் பணம் அனுப்பினேன். மெயில் மூலம் வாழ்த்திய அன்பர்களுக்கெல்லாம் நன்றி! ('வாழ்த்த வயதில்லை, வணங்குகிறேன்' என்கிற கேனத்தனமான சொற்றொடரை, ஒரு ஜி.ஓ. போட்டு தமிழில் தடைசெய்ய முதல்வருக்கு ஒரு கடிதம் எழுதத் தீர்மானித்தேன்.) ஏ.டி.எம்மில் எனக்கு முன் நின்றிருந்த ஒரு தாத்தா என்னைப் பார்த்ததும், "ஓல்டுமேன்! நீங்க போங்க முதல்ல. எனக்கு அவசரம் இல்லை" என்றார். யாரும் பசுமாடு தடுக்கி விழும் வரை வயசாவதை ஒப்புக்கொள்வதில்லை!

## எ.பி.ஹை



மடியில் பூனைக் குட்டியின் லேசான உஷ்ணம். நகர மாட்டேன்!

**- லவ்லேஸ்**

## எ.பி.க.



நான் எழுதாது செல்லும்
என் கவிதையை
எழுதுங்களேன்
எழுந்து வர முடியவில்லை
எல்லையில் என் துப்பாக்கி
எழுந்து நிற்பதால்!

- **வானதி**

**எ.பி.மே**

**'மனசாட்சி நம் எல்லோரையும் கோழைகளாக்கிவிடுகிறது!'**

- ஷேக்ஸ்பியர் (ஹாம்லெட்டில்)

## சிவாஜி சில கேள்விகள்!

**மி**குந்த எதிர்பார்ப்புகளுடன் 'சிவாஜி' படம் அடுத்த வாரம் வெளியாகிறது. இதன் உருவாக்கத்தில் பங்குகொண்டவன் என்கிற தகுதியில், இந்தப் படத்தைப் பற்றி ஒரு FAQ.

### 1. 'சிவாஜி' ரஜினி படமா, ஷங்கர் படமா?

ரஜினி நடிக்கும் ஷங்கர் படம்.

### 2. ரஜினி ரசிகர்களின் எதிர்பார்ப்புகள் அனைத்தும் நிறைவேறுமா?

நிறைவேறும், அவரது சூப்பர் ஸ்டார் அந்தஸ்துக்குப் பங்கம் வராமல்! அதே சமயம்...



### 3. அதே சமயம்..?

ஒரு ஷங்கர் படத்தின் கதைத் திருப்பங்களுக்கும் சுவாரஸ்யமான முரண்பாடுகளுக்கும் பிரமாண்டத்துக்கும் குறைவிருக்காது.

### 4. ரஜினி என்றால், பன்ச் டயலாக் இருக்குமா?

இருக்கிறது. விவேக் மூலம் சொல்ல வைத்துவிட்டோம். பன்ச்சுக்கு பன்ச்; டிக்னிட்டிக்கு டிக்னிட்டி!

### 5. ஏன் இத்தனை தாமதம்?

நல்ல கேள்வி! படத்தில் பணிபுரிந்த அத்தனை கலைஞர்களும் இந்தியாவின் சிறந்த கலைஞர்கள். ரஜினி, ஷங்கர், ஏவி.எம். படம் என்பதால் தனிப்பட்ட சிரத்தையுடன் பார்த்துப் பார்த்துச் செய்ததால் தாமதம். லேட்டாக வந்தாலும் நீட்டாக வந்திருக்கிறது.

### 6. படத்தின் tagline என்ன?

'சிவாஜி' அமெரிக்காவிலிருந்து வந்து, முதல் பாதியில் விழுகிறார்; இரண்டாம் பாதியில் எழுகிறார்!

### 7. கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்களேன்..?

சொல்கிறேனே... அடுத்த வாரம்!

**க**தைகளையும் குறும்படங்களையும் சி.டி. வடிவத்தில் அனுப்பும் புதுப்பழக்கம் துவங்கியிருக்கிறது. அவற்றைக் கேட்கவோ, பார்க்கவோ எனக்கு நேரமும் ஆர்வமும் இந்த வயசில் மிகக் குறைவு. ஆர்வமளிப்பதாக இருந்தாலும், பொறுமையும் நேரமும்தான் இப்போது என் முக்கியச் சொத்து.

கூரியர் கம்பெனிகளின் பிழைப்பைக் கெடுக்கக் கூடாது; அது மரியாதை யாகாது என்பதால் ஒவ்வொரு நாளும் வருகிற புத்தகங்களையும் சி.டி-க்களையும் வாசலில் கையெழுததுப் போட்டு வாட்ச்மேன் வாங்குவதை நான் தடுப்பதில்லை. அவற்றைப் படிக்கிறேனா, கேட்கிறேனா, பார்க்கிறேனா என்பது வேறு விஷயம்.

அதற்கு எனக்கு ஆர்வம் இருக்கிறதா என்பதை அறிய இனிமேல் ஒரு சிறிய காரியம் செய்தால் போதும்! புத்தகத்தின் அல்லது குறும்படத்தின் சாரம் என்ன என்பதைச் சுருக்கமாக ஒரு பாராவில் எழுதி, writersujatha@hotmail.com என்ற மின்-அஞ்சலுக்கு முன்னதாக அனுப்பினால், நான் அதைப் படிக்க விரும்பினால், உடனே 'அனுப்பவும்' என்று பதில் எழுதிவிடுகிறேன். அதன்பின் அனுப்பினால் போதும். தங்களுக்கும் கூரியர் செலவு மிச்சமாகும்!

**நா**ன் படிக்க விரும்பி நாடிய ஆங்கிலப் புத்தகங்களில் ஒன்று ராஜ்மோகன் காந்தியின் 'மோகன்தாஸ் - ஒரு உண்மைக் கதை' என்னும் காந்தியின் வாழ்க்கைச் சரித்திரம். காந்தியின் பேரன் ராஜ்மோகன் காந்தி, தற்போது அமெரிக்க இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தில் பணிபுரிகிறாராம். தாத்தாவின் வாழ்க்கை விவரங்களை எவ்விதத் தயக்கமும் மழுப்பலும் இல்லாமல் 700-க்கும் மேற்பட்ட பக்கங்களில் எழுதியிருக்கிறார்.

காந்தி ஒரு யுகபுருஷர் என்பதில் சந்தேகமில்லை. யுகபுருஷர்களுக்கும் தயக்கங்கள், சந்தேகங்கள், கோபதாபங்கள்... ஏன் வக்கிர சுபாவங்கள்கூட உண்டு என்பதை அறிகிறோம். முழுமையாகப் பார்க்கும்போது, காந்தி என்கிற பொய்யே சொல்லாத மனிதர் வெளிப்படுகிறார். தென்னாப்பிரிக்காவில் ஜோஹன்பர்க் அருகில் அவர் அமைத்துப் பரிசோதித்த டால்ஸ்டாய் பண்ணை வாழ்க்கையை விவரிக்கிறார். சில தினங்களில் நிலக்கடலை, வெண்ணெய் வாங்க, காலை இரண்டரை மணிக்குப் புறப்பட்டு 21 மைல் நடந்து போய், மாலையில் திரும்பி வருவாராம்.




'பாப் உல்மர் இறந்தது மாரடைப்பால்!'
- ஸ்காட்லாண்டு யார்டு ரிப்போர்ட்

"இளைஞர்களும் பெண்களும் சுதந்திரமாகச் சந்தித்துக்கொண்டார்கள். காந்தி நன்னடத்தை முழுவதும் விளக்கிவிட்டு, அவர்கள் ஒன்று சேர்ந்து குளிக்கும் வழக்கத்தை அனுமதித்தார். அவர் அதை கண்காணித்துக்கொண்டு இருப்பார். மற்றொரு துணிச்சலான பரிசோதனை, அவர்களைத் தன்னைச் சுற்றி வராந்தாவில் மூன்றடி தூரத் துக்குள், இரண்டு படுக்கைகளில் தூங்கவைப்பார். அந்த இளைஞர்களின் பெற்றோரும் இதை அனுமதித்தனர். காந்தி 'கடவுள் இவர்களைப் பாது காப்பார்' என்று நம்பினார்.

ஒருநாள் ஓர் இளைஞன் இரண்டு பெண்களைக் கேலி செய்தான். அதைக் கேட்ட காந்தி, கரங்கள் நடுங்க அவனைத் திட்டித் தீர்த்தார். பெண்களிடமும் தப்பு இருக்கிறது என்று அந்தப் பெண்களிடம் சில அடையாளங்கள் தேடினார். இளம் பெண்களின் தூய்மைக்கு எச்சரிக் கையாக என்ன செய்யலாம் என்று ராத்திரி முழுக்க யோசித்துவிட்டு, அந்தப் பெண்களின் நீண்ட கூந்தலை வெட்டிவிடும்படி ஆணையிட்டார். பன்னிரண்டு வருஷங்கள் கழித்து காந்தி, 'அந்தப் பெண்களின் கூந்தலை இந்த வரிகளை எழுதும் கரங்களே வெட்டின' என்று எழுதினார்!"

எரவாடா சிறையில் சோமாலியைச் சேர்ந்த வார்டர் தன்னைத் தினம் சோதிக்கும்போது கண்ட இடங்களில் தொட்டுப் பார்ப்பதற்கு எதிர்ப்புத் தெரிவித்த காந்தி, அதே வார்டர் ஒரு முறை தேள் கடி பட்டுத் துடித்தபோது, காயத்தில் தன் வாயை வைத்து விஷத்தை உறிஞ்சித் துப்புகிறார். குஜராத்தியில் குழந்தைகளுக்குப் பாட்டுப் புத்தகம் எழுதுகிறார். தினம் சரியாக 15 நிமிஷம் கீதைக்கு அரும் பத உரை எழுதுகிறார்.

எந்த வரையறைக்குள்ளும் எளிதில் அகப்படாத மனிதர் காந்தி!



## எ.பி.மே

'என் எண்ணங்கள் என் செயல்களைக் கட்டுப்படுத்த அனுமதித்தால், நான் வீணாவேன். அதே சமயம், நாம் இந்தக் கெட்ட எண்ணங்களைப் பற்றிக் கவலைப்படக் கூடாது!'

- மகாத்மா காந்தி

## எ.பி.ஹை.



**இ**லையுதிர்கால முதல் மாலை நான் வெறித்து நோக்கும் கண்ணாடி அப்பாவின் முகத்தைக் காட்டுகிறது!

- **முரகாமி கீஜோ** (1865-1938)

## எ.பி.க.



**யா**ருக்கும்
நான் யாரென்று
தெரியவில்லை
சொல்லிவிட்டேன்
நான்தான்
போப்பாண்டவரென
புரட்சி செய்கிறவன்
போப்பாண்டவராய்
இருக்க
முடியாதென்றார்கள்!

**- கோசின்ரா** (என் கடவுளும் என்னைப் போல் கறுப்பு)



**க**லைஞர், ஸ்டாலின் பற்றிய செய்திகள் இப்போது ராஜ் டி.வி-யில் அதிகம் வருவதன் 'சப்டெக்ஸ்ட்'டை அன்பர்கள் கவனித்திருக்கலாம். ஓர் அரசியல் கட்சிக்குத் தொலைக்காட்சி, செய்தித்தாள் ஊடகங்கள் மிக முக்கியம்.

முன்னால் நீட்டப்படும் மைக்குகளையும் பளிச்சிடும் ஆர்கான் விளக்குகளையும்

நீக்கிவிட்டால், ஹைப்பர்வென்டிலேஷன் வந்து மேல்மூச்சு வாங்க ஆரம்பித்துவிடும்.

புறக்கணிப்பதும் மறக்கடிப்பதும் பெரிய சோகம்!

இன்றைய செய்தித்தாளைப் பிரித்துப் பார்த்து, அதில் ஏதாவது ஒரு மூலையில் தன் பெயர் வரவில்லையென்றால் பசி தாகம் மறந்து, கவலை வயிற்றை நிரப்பும். ஆதலால், அரசியல் கட்சிகள் ஒரு சேனலின் அவசியத்தை நாடுவதில் ஆச்சர்யமில்லை.

**'ரா**ட் ஸெர்லிங்'கின் (Rod Serling) 'ட்வைலைட் ஜோன்' தொலைக்காட்சித் தொடரில், ஒரு கதை வருகிறது. ஒரு காலத்தில் கொடிகட்டிப் பறந்த ஒரு முன்னாள் நடிகை, இப்போது தன்னந் தனிமையில் ஒரு வேலைக்காரனுடன் வசிக்கிறாள். அவளை மக்கள் மறந்துவிட்டார்கள். நிறையப் பணம் சம்பாதித்துவிட்டாள். வசதியாகத்தான் இருக்கிறாள். அவளுடைய ஒரே ஒரு பொழுதுபோக்கு, தனது பழைய திரைப்படங்களை ப்ரொஜெக்டரில் போட்டு, நாள் பூரா திரும்பத் திரும்பப் பார்த்துக்கொண்டு இருப்பது. அந்த அரையிருட்டு அறைக்குள், தான் கதாநாயகியாக நடித்த பழைய படங்களின் சூழலில்தான் அவள் சாப்பாடு, தூக்கம், வாசம் எல்லாம்!

ஒரு நாள், வேலைக்காரன் வழக்கம் போல அறைக்குள் உணவளிக்கச் சென்றபோது, அவளைக் காணவில்லை. எல்லா இடங்களிலும் தேடிப் பார்க்கிறார்கள். அறைக்குள், இருட்டில் ப்ரொஜெக்டர் சுழன்று, படம் ஓடிக்கொண்டு இருக்கிறது.

தற்செயலாகத் திரையில் ஓடிக்கொண்டு இருக்கும் சினிமாவைப் பார்ப்பவர்கள், ஆச்சர்யப்படுகிறார்கள். அவள் அந்தத் திரைப் படத்துக்குள் நுழைந்து, தன் பழைய சக நடிகர்களுடன் ஒன்று சேர்ந்துவிட்டாள்!

இந்த மாதிரியான ஃபேன்டஸி முடிவுள்ள பல கதைகளை ராட் ஸெர்லிங் சொல்லியிருக்கிறார். ஐம்பதுகளில், அமெரிக்கத் தொலைக்காட்சியின் கறுப்பு-வெள்ளை யுகத்தில் வந்த சிறந்த சிறுகதைகளின் தொகுப்பு, 'ட்வைலைட் ஜோன்'. தொண்ணூறுகளிலும் மறு ஒளிபரப்பாகியது.

ஆல்பிரட் ஹிட்ச்காக், இந்த வகையில் ஒரு தொடர் செய்தார். இந்தியத் தொலைக்காட்சியில் சத்யஜித் ரேயின் மகன் சந்தீப் ரே ஒருமுறை இவ்வகைத் தொடரை தூர்தர்ஷனில் செய்தார். ஆனால், இவை எதுவும் 'ட்வைலைட் ஜோ'னின் உன்னதத்தை எய்தவில்லை. டி.வி.டி-கூட வந்திருக்கிறது; வாங்கிப் பாருங்கள்.


ராட் ஸெர்லிங்


சத்யஜித் ரே


சந்தீப் ரே

'திண்ணை டாட் காம்' வலைமனையில் வந்த சில அறிவியல் புனைகதைகளைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிட்டு இருக்கிறார்கள்... 'எதிர்காலம் என்ற ஒன்று' (எனி இந்தியன் பதிப்பகம்) என்ற தலைப்பில்! தொகுப்பாசிரியர் கோபால் ராஜாராம். இதில் சில சொந்தக் கற்பனைக் கதைகளும், சில மொழிபெயர்ப்புக் கதைகளும் உள்ளன. 'நான்ஸி க்ரெஸ்' எழுதிய 'நாலாவது குழந்தை' என்கிற கதை சிறப்பாக மொழிபெயர்க்கப்பட்டு இருக்கிறது. அறிவியல் புனைகதைகளை, இணைய இதழ்கள் தொடர்ந்து ஆதரித்து வரவேண்டும். மெள்ள மெள்ளத்தான் அவை அச்சேறும்.




**எ.பி.க.**

## இருவர் பாடல்



ஆமிக்காரன் வாற வழி
அய்யனும் நானும் போற வழி
வட்டைக்குள்ள போகாட்டா
வகுத்துச் சோத்துக்கென்ன வழி
வகுத்துச் சோத்தப் பாத்தியெண்டா
வம்புல நீ மாட்டிருவ
ஆமிக்காரன் சுட்டுப்போட்டா
ஆரு தருவா உசிருனக்கு
போற வழி வாற வழி
பெரும் பயமே என்று போனால்
ஊட்டுக்குள்ள நானிருந்து
உசிரக் காத்து என்ன பயன்
உன்னை நம்பி நானிருக்க
உசிரை நீ உடலாமோ
எண்டகின் மச்சானே
இண்டைக்கு நீ போகாத!

- **கா.சாருமதி** (ஈழத்துத் தமிழ்க்கவிதைகளிலிருந்து)

**எ.பி.ஹை.**



**இ**ரவில் நிலவில்
பக்கத்து வீட்டுக்காரன் வாசிக்கும்
புல்லாங்குழல் அபசுரமாக!

- **கோஜோ**

## அப்பா சொன்னாரென...

**அ**ப்பா சொன்னாரென
பள்ளிக்குச் சென்றேன்
தலை சீவினேன்
சில நண்பர்களைத் தவிர்த்தேன்
சட்டை போட்டுக்கொண்டேன்
பல் துலக்கினேன் வழிபட்டேன்
கல்யாணம் கட்டிக்கொண்டேன்
காத்திருக்கிறேன்
என் முறை வருமென்று

1995-ல் கனிமொழி எழுதிய இந்தக் கவிதை ஏறக்குறைய எல்லாப் பெண்களுக்கும் பொருந்தும்.

இன்று கனிமொழி, இந்தக் கவிதையின் கடைசி வரியை எழுதிவிட்டார்... 'மாநிலங்களவையில் நுழைந்தேன்!'



கனிமொழி

**மா**நிலங்களவையில் கவிஞர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். மைதிலி சரண்குப்தா, 1965-ல் அவர் இறக்கும்வரை மாநிலங்களவை உறுப்பினராக இருந்தார். விவாதங்களிலும் கவிதையில் பேசுவாராம். வாஜ்பாய்கூட கவிஞர்தான். அம்ருதா ப்ரீத்தம், ஹர்வம்சராய் பச்சன் (அமிதாப்பின் அப்பா), குஷ்வந்த்சிங், ஆர்.கே.நாராயண் போன்ற எழுத்தாளர்கள் எல்லாம் அந்த அவையை அலங்கரித்திருக்கிறார்கள்.



டிராவிட்

இந்த வரிசையில் கனிமொழி முதன்முதலாக தமிழ் புதுக் கவிதைகளின் நயத்தை டெல்லிப் பெரியவர்களுக்கு எடுத்துச் சொல்வார் என்று எதிர்பார்க்கலாம். என்ன, டெசிபெல் லெவல் கொஞ்சம் அதிகமாக இருக்கும். அதில் அவரது மெல்லிய குரல் அமுங்கிப்போய்விடாமல் இருக்க வேண்டும். வாழ்த்துக்கள்!

ஐந்து நாள் டெஸ்ட் பந்தயம் என்பது மெள்ள வழக்கொழிந்துபோய்விடும். பங்களாதேஷை மூன்று நாளில் வென்றுவிட்டோம். அதே போல், இங்கிலாந்திடம் மேற்கிந்தியத் தீவுகள் படு மோசமாகத் தோற்றது. ஒரு நாள் பந்தயமும், 20/20-ம் வந்து, ஆற அமர ஐந்து நாள் ரசிக்கும் சந்தோஷத்தைக் கெடுத்துவிட்டன. இந்த வகை 'இன்ஸ்டன்ட் க்ராட்டிஃபிகேஷன்' - உடனடித் திருப்தி, எல்லாத் துறைகளிலும் வந்துகொண்டு இருக்கிறது, புதுக்கவிதையே ஒருவிதத்தில் அவசர யுகத்துக்கு ஏற்பட்ட சமரச வடிவம் என்று சொல்வேன். சிறுகதைகள், ஒரு பக்கக் கதைகளாகி விட்டன. படக்கதையாகச் சொன் னாலும் உத்தமம் என்கிறார்கள்.

துணுக்குகள், நகைச்சுவைக்கான நாலு வரிக் கடி ஜோக்குகள், வார்த்தையற்ற ஜோக்குகள், இவையெல்லாமே அவசர யுகத்தின் விளைவுகள்!

கடைசிக் காவியங்கள் தமிழில் 12-ம் நூற்றாண்டிலேயே எழுதப் பட்டுவிட்டன. இனி, 'அனைத்தும் சுருக்கமாக, ஏன் ஜாடையாகக் கூடச் சொல்ல முடிந்தால் சொல்; இல்லை, வேறு வழி செல். ஒரு குறிப்பாக எழுதிவைத்துவிட்டால் சமயம் வரும்போது பார்த்துக்கொள் கிறேன்' என்று நமக்கே உண்டாக்கிக் கொண்ட அவசரங்களில் ஆழ்ந்திருக்கிறோம்.


ஜி.சீனிவாசன்

திரையுலகில் ஒரு தயாரிப்பாளருக்குக் கதை சொல்ல, ஒரு அசிஸ்டென்ட் டைரக்டருக்கு கிடைக் கும் நேரம் மிஞ்சிப்போனால் அரைமணி. அல்லது, "அவசரமா ஏவி.எம். போய்ட்டிருக்கேன். முன் சீட்ல உக்காரு. கோடம்பாக்கம் பாலம் வர்றதுக்குள்ள 'நாட்' சொல்லிரு!". அவ்வளவுதான்!

"இது ஒரு வித்தியாசமான லவ் சப்ஜெக்டுங்க..!"

"எல்லாரும் அதைத்தான் சொல்றாங்க. என்னய்யா வித்தியாசம்?"


குஷ்வந்த் சிங்

"ரெண்டு பேரும் ஒரே கிராமத்துல, ஒரு தெருவுல, பக்கத்துப் பக்கத்து வீட்டுல வளர்ந்தவங்க. ரெண்டு பேருக்கும் காதல் எப்படி வளந்துச்சுன்னே க்ளைமாக்ஸ் வரை காட்றதில்லைங்க. ஒரு நாள், அவங்க வீட்டுக்குத் திருடன் வரான். அந்தப் பெண்ணை ரேப் பண்ணிட்டுப் போயிர்றாங்க..."

தயாரிப்பாளர், "டிரைவர்! காரை நிறுத்துய்யா, சார் இறங்கிக்கட்டும்!"


ஆர்.கே.நாராயண்

அலை மோதும் கூட்டத்தின் மேல் கன்னாபின்னாவென்று உலவும் ஒளிக்கற்றை போன்றது புகழ் அல்லது சந்தர்ப்பம். கொஞ்ச நேரம் வெளிச்சம் தங்கும்போது, உலகின் கவனத்தை ஈர்க்க வேண்டும். கிரிக்கெட் மேட்ச்சில் சட்டென்று பெரிய திரையில் நம் உருவம் தெரிய, பிரமித்துப்போய் என்ன செய்வதென்று தெரியாமல் தப்பான திசையில் பார்த்துக் கையசைப்போமே, அது போல!

There is a tide in the affairs of men
Which, taken at the flood, leads on to fortune;
Omitted, all the voyage of their life
Is bound in shallows and in miseries.


ஹர்வம்சராய் பச்சன்

'ஒவ்வொருவருக்கும் ஒரு அலை இருக்கிறது. வெள்ளம் வரும்போது, அதில் சென்றால் அதிர்ஷ்டத்துக்கு அழைத்துச் செல்லும். தவறவிட்டால், வாழ்வின் பயணங்கள் அனைத்தும் துன்பத்தில் முடியும்' என்று ஷேக்ஸ்பியர் சொன்னது சரி தான். ஆனால், அலை வருவது தான் தெரிவதில்லை!

மெட்ராஸ் டாக்கீஸ் நிறுவனத்தின் அதிபர் ஜி.சீனிவாசனுடன் என் நட்பு அவரது மூத்த சகோதரர் டைரக்டர் மணிரத்னத்தின் மூலம் ஏற்பட்டது. பழகுவதற்கு இனியவர், திறமையுள்ள சார்ட்டர்ட் அக்க வுன்ட்டன்ட். மெட்ராஸ் டாக்கீஸ் நிறுவனத்தைப் பொறுப்பாக நிர்வகித்து, படைப்பாளிகளுக்கும் உழைப் பாளிகளுக்கும் உரிய நேரத்தில் நேர்மையாக ஊதியமளித்து, அந்த நிறுவனத்தை ஒரு சினிமா கம்பெனி போலில் லாமல் கம்ப்யூட்டர் சாஃப்ட் வேர் கம்பெனி போல புரொபஷனலாக நடத்தலாம் என்பதற்கு உதாரணம் காட்டினார்.


அம்ருதா ப்ரீத்தம்

'இருவர்', 'கன்னத்தில் முத்தமிட்டால்', 'ஆய்த எழுத்து', 'யுவா', 'குரு' போன்ற படங்களையும், கணேஷ் - வசந்த் போன்ற தொலைக்காட்சித் தொடர்களையும் தயாரித்தார். அவருடன் பணிபுரிந்தது எனக்கு ஒரு சந்தோஷமான அனுபவமாக இருந்தது. மணிரத்னம் போன்ற படைப்பாளியை வியாபார கட்டாயங் களிலிருந்து விடுவித்து, படத்தில் கவனம் செலுத்தவைத்தார். சென்ற வாரம், மனாலியில், ஒரு ட்ரெக்கிங் விபத்தில் ஜி.எஸ். இறந்துபோன செய்தி கேட்டு அதிர்ச்சியுற்றேன். அவருடைய மனைவிக்கும், மூன்று இளம் மகள்களுக்கும், சகோதரர் மணிரத்னத்துக்கும் எப்படி ஆறுதல் சொல்வது?

'வாழ்வின் அபத்தங்களைக் காலத்தின் மழுப்பல்தான் புரியவைக்கும்' - ஜோனாத் தன் ஸ்விஃப்ட் May you live everyday of your life என்று சொன்னதன் முழு அர்த்தமும் புரியும்.

**எ.பி.க.**

**அ**மைதி நெறியும் சமர் வெறியும்
ஒருவகையில் ஒன்றுதான்
சமாதானக் கொடியும் சடலத்தைப் போர்த்துவதும்
வெள்ளைத் துணிதான்!

**- குமர விருச்சிகன்**






## "ஸ்ரீரங்கம் போயிருந்தேன்!"

**பி**றந்த தினத்தன்றே போக நினைத்து, டிக்கெட் கிடைக்காமல், சென்ற வாரம்தான் ஸ்ரீரங்கம் சென்றேன்.

லல்லு வந்ததில், ரயில் நிலையச் சுத்தத்தை கான்ட்ராக்ட் விட்டு எழும்பூர், திருச்சி ஜங்ஷன்கள் எல்லாம் பளபளவென்று இருக்கின்றன. பெட்டிகளும் சுத்தமாக இருந்த ராக்ஃபோர்ட் எக்ஸ்பிரஸில் வந்து சேர்ந்தேன். பாயும் நீர் அரங்கத்தின் இரு நதிகளிலும் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட இல்லை.



வெயில் வருவதற்குள் கோயிலுக்குப் புறப்பட்டேன். கோபுரங்களை ஓவராக வெள்ளையடித்ததில் அல்பைனோ தோற்றமளிக்க, வாட்டர் ஸ்ப்ரே வைத்துக் காலலம்பிக்கொண்டு கோயிலுக்குள் நுழைந்தேன். பூச்சாற்றி உற்சவம் முடிந்துபோன ஒரு சாதாரண வெள்ளிக்கிழமையிலேயே இத்தனை கூட்டத்தைப் பார்த்தபோது, என் இளமைக் கால ஸ்ரீரங்கம் கோயிலை எப்போதோ இழந்துவிட்டேன் என்பது மறு ஊர்ஜித மாயிற்று.

டிரஸ்டி திருமதி கிரிஜா மோகன் உதவியுடன், அதிக சிரமமில்லாமல் அரங்கனை வணங்க முடிந்தது. அர்ச்சகர்கள் வரவேற்றனர். நல்லவேளை... "சிவாஜி கதை என்ன?" என்று கேட்கவில்லை. "வாங்கோ! உங்களுக்காக இன்னிக்கு வைரமுடி சேவை. அதிர்ஷ்டம் பாருங்கோ!" இலவச அதிர்ஷ்டத்தைப் பெற்றுக்கொண்டு, வெளியே வந்தேன். ஒரு கண்ணாடிப் பாத்திரம் போலதேசிகன் என்னைப் பத்திரமாக அழைத்துச் செல்ல, பெருமாள் தாயார் மட்டும்

சேவித்துவிட்டு, ஆசுவாசத்துக்கு தாயார் சந்நிதிக்கு முன் மண்டபத்தில் உட்கார்ந்துகொண்டேன்.

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்ட கோயில் பெரியவாச்சான்பிள்ளை உபன்யாசங்கள் செய்ய முதுகு சாய்த்த மண்டபத்தின் முன் மேட்டு அழகியசிங்கர் சந்நிதியில் உள்ள பழங்காலச் சுவர் சித்திரங்களை தேசிகன் படம் எடுத்து டிஜிட்டலில் உடனே காட்டினார்.

மண்டபத்தில், சின்ன வயசில் இங்கே தேவதாசிகள் தீபம் கொண்டுவருவதைப் பார்த்திருக்கிறேன். அழகழ காக ஆபரணங்களுடன் நிற்பார்கள். 1954 வரை இந்தப் பழக்கம் இருந் திருக்கிறது. இப்போது சொன்னாலே உதைப்பார்கள்.

வடக்கு உத்தர வீதியில் எங்கள் ஆசார்யன் சிறுபலியூர் அண்ணன் சுவாமிகளுக்குத் தண்டம் சமர்ப் பித்துவிட்டு, தாத்தாச்சாரியார் தோட்டத்து 'இமாம் பசந்த்'தைப் பாதிக் கதுப்பு ருசித்துவிட்டு, தம்பி ராஜகோபாலனின் புத்தகங்களில் 'கோயில் ஒழுகு' - பகுதி 111, கேரன் ஆர்ம்ஸ்ட்ராங்கின் 'A History of God' இரண்டை மட்டும் கவர்ந்துகொண்டு, அடுத்து அரங்கன் எப்போது அழைக்கப்போகிறான் என்பது தெரியாமல், மறுதினம் பல்லவன் எக்ஸ்பிரஸில் திரும்பினேன்.

**அ.**கிருஷ்ணமாச்சார்யார் தொகுத்த 'கோயில் ஒழுகு' தொகுப்பில், தேவஸ்தானப் பத்திரிகையில் வந்த பல சுவாரஸ்யமான துணுக்குகள் உள்ளன. புனுகு எங்கே கிடைக்கும், பஞ்சகவ்யப்ரயோகம், திருவரங்கம் தேவஸ்தானத்தில் பட்டப்பகலில் உண்டி உடைக்கப்பட்டது (சாவி தொலைந்துபோனதால்), 'விசித்ர வஸ்து புத்தக சாலை' திறக்கப்பட்டது... இது போன்ற ஒழிபியல்குறிப்பு கள் பல உள்ளன. 1.1.1953-ல் வந்தஒரு கட்டுரையில், கோயிலுக்குச் செல்லும் நியமங்கள் பட்டியலிடப்பட்டுள் ளன.

1.கோயில்களுக்குள் நடக்கும் கீதம், வாத்தியம் முதலானவற்றை இந்திரியானந்தமாகக் கேட்கிலும் பார்க்கிலும் ஊர் வம்பு பேசினாலும் பாபம்; ஒருவருக்கொருவர் கோபமாகப் பேசக் கூடாது; கறுப்பு உடுத்திக் கோயி லுக்குள் வரக் கூடாது; நகம், மயிர்களைக் கீழே போட்டாலும், தலையை விரித்துக் கொண்டு உதறினாலும் தப்பு; எச்சில் துப்பக் கூடாது; மலஜலம் கழிக்கக் கூடாது; மயானம் சென்ற நாளில் கோயிலுக்குப் போகக் கூடாது; விமான நிழலை மிதிக்கக் கூடாது; இரைந்து பேசக் கூடாது; கோயில் விளக்குகளைத் 'துரோக புத்தி'யுடன் அணைக்கக் கூடாது.




இதையெல்லாம் மீறுபவர்களுக்குக் கடுமையான தண்டனைகள் குறிப்பிடப்பட்டு இருக்கின்றன. உதா: 'இந்த அதர்மர்களை நெடுநாள் நரகத்தில் தள்ளிவைத்துக் கழுதையாகப் பிறக்கச் செய்வேன்' என்று வராஹப் பெருமாள் பூமிப்பிராட்டியிடம் சொல்கிறார். 'தண்டிக்க வேண்டிய அதிகாரி தண் டிக்க மாட்டார்' என்ற அக்கிரமத்தில் துணிகிறவர்களுக்கு, (அதுதானேஇப் போது பிரச்னை!) பயம் உண்டாக்கவே, சாஸ்திரம் கடுமையான தண்டனையைக் காட்டுகிறது.

உலகின் இறைவனைத் தொழும் அத்தனை இடங்களிலும் இவ்வாறான கட்டுப்பாடுகள் இருப்பதன் ஆதார நோக்கம், புறத் தூய்மைதான். இதன் விளைவாக, மெள்ள மெள்ள அகத் தூய்மை வரும் என்று நம்பிக்கை.

**கே**ரன் ஆர்ம்ஸ்ட்ராங்கின்புத்தகத் தில், கடவுள் மனித மனதில் எப்படித் தோன்றினார், எப்படி மாறினார் என்பதை ஜூடாயிஸம், கிறிஸ்தவம், இஸ்லாம் இவற்றின் சரித்திரத்தையும் இறைத் தத்துவங்களையும் ஆராய்ந்து ஓர் அழகான அறிமுகம் தருகிறார்.

"ஆரம்பத்தில் மனிதன் கடவுளை எல்லாவற்றுக்கும் முதற்காரணமாகவும், விண்ணையும் மண்ணையும் ஆள்பவ ராகவும் படைத்தான். முதலில் உருவமில்லை; கோயிலில்லை; பூசாரிகள் இல்லை. குறைபட்ட மானுட நம்பிக் கைக்கு, கடவுள் கொஞ்சம் அதிகமான கண்ணியராக இருந்தார். மெள்ள அவர் மக்களின் நினைவிலிருந்து விலகினார். நாளடைவில் தேவையற்றுப் போனார். பின், மறைந்தும் போனார்."

கடவுள் எப்படித் தோன்றினார் என்பதைப் பற்றிய ஒரு சித்தாந்தம் இது. 'முதலில் ஒரே கடவுளாகத்தான் தோன்றியது; பல வடிவங்களைத் தொழும் பழக்கம் பிற்பட்டது' என்கிறார் கேரன்.

**கா**லஞ்சென்ற நகுலனின் இயற் பெயர் டி.கே.துரைசுவாமி. திருவனந்தபுரத்தில் அவர் ஆங்கில ஆசிரியராக இருந்தபோது, சென்னைக்கு வந்திருந்தார். மீனம்பாக்கத்தில் அவரைச் சந்தித்திருக்கிறேன். அதற்கு முன் அவருடைய 'நிழல்கள்' நாவலைப் பற்றி கணையாழியின் கடைசிப் பக்கத்தில் எழுதியிருந் ததைக் கவனித்து, எனக்கு லெட்டர் போட்டிருந்தார். தான் ஒரு தொகுப்பு கொண்டுவரப் போவதாகவும், அதற்கு ஒரு கதை எழுதித் தரும்படியும் கேட்டார். அப்போது நான் பிரபலமில்லை.

சுஜாதாவாக மாறியிருக்கவில்லை. எஸ்.ரங்க ராஜன் என்ற பெயரில் உடனே ஒரு கதை எழுதி அனுப்பி வைத்தேன். அவர் அந்தக் கதையில் முதல் பாதியை மட்டும் எடுத்துக் கொண்டு, மறுபாதியை எனக்குத் திருப்பி அனுப்பிவிட்டார். 'கதை

முடிந்த பின்னும் எழுதியிருக்கிறாய். அப் பகுதியைத் திருப்பி அனுப்பியிருக்கிறேன்' என்று குறிப்பிட்டு இருந்தார்.

கதை வெளிவந்தபோது, நகுலனின் தீர்ப்பு சரியென்றே தெரிந்தது. அந்தத் தொகுப்பு, 'குருக்ஷேத்திரம்'. அந்தக் கதை 'தனிமை கொண்டு'. இன்றும் பலர், அதை என் சிறந்த கதையாகச் சொல்கிறார்கள்.

நகுலனைச் சென்னையில் சந்தித்தபோது, ஒல்லியான தேக அமைப்பு; மெல்லிய குரல். தமிழிலும் ஆங்கிலத்திலும் நிறையப் புத்தகங்கள் படித்திருக்கிறார் என்பதும், ஒரு நல்ல கவிஞர் என்பதும் தெரிந்தது. இலக்கியப் பத்திரிகைச் சூழலில் அவரைப் பலரும் அறிந்திருந்தார்கள்.

எழுத்தாளனுக்கும் வாசகனுக்கும் நடுவில் வார்த்தைகள் நிற்கின்றன என்று அவற்றை ஒரு தடையாகவே கருதி, வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட விஷயங்களைத் தேடியவர் அவர்.

'எந்தப் புத்தகத்தைப் படித்தாலும் நமக்குள் இருப்பதுதான் அந்தப் புத்தகத்திலும் இருக்கிறது' என்றார்.






எ.பி.மே.

அச்சமும் மடமையும் இல்லாத பெண்கள் அழகிய தமிழ்நாட்டின் கண்கள்!

**- பாரதிதாசன்**

### ஏ.பி.ஹை.



காபிக் கடை
அடுத்த மேஜையில்
இலவச உபதேசம்!

**- கிராண்ட் ஸ்டாப்**

### ஏ.பி.க.



**க**டைசிப் பக்கங்கள்
கிழிந்துபோன
துப்பறியும் நவீனத்தை
தெரியாமல் எடுத்துப்
படித்திருக்கிறீர்களா?
அதுதான் வாழ்க்கை!

**- அப்துல் ரகுமான்**

ஹைதராபாத் போக வேண்டாம்... உயிரோடு மீனை விழுங்க வேண்டாம்..!

**தி**ருமங்கை மன்னனின் பதினோரு திருவிடவெந்தை பாசுரங்களின் ஆங்கில மொழி பெயர்ப்பை கவிஞர் ஏ.கே.ராமானுஜன் செய்ததன் குறுந்தகட்டை அவரது சகோதரர் ஏ.கே.ஸ்ரீனி வாசன் எனக்களித்தார்.

ராமானுஜனைப் பற்றி அதிகம் தெரியாதவர்களுக்கு ஒரு சிறிய அறிமுகம்... மைசூரில் 1929-ல் பிறந்தவர். கன்னடத்தில் படித்தவர். தாய்மொழி, தமிழ். மைசூர் பல்கலைக்கழகத்தில் ஆங்கில இலக்கியம் படித்துவிட்டு, அமெரிக்கா சென்று

விட்டார். அங்கே 30 ஆண்டுகள், பல பல்கலைக்கழகங்களில் தெற்காசிய இலக்கியப் பிரிவுகளை உண்டாக்கினார். சோஷியோலிங்விஸ்ட்டிக்ஸ் என்னும் சமூக மொழியியலிலும் நாட்டுப்புற வியலிலும் பல ஆராய்ச்சி மாண வர்களைத் தயாரித்து வழிநடத்திக் கட்டுரைகள் செய்தவர். இதையெல் லாம்விட அருமையான கவிஞர். The Strider, The Black Hen, Relations Second Sight போன்ற தொகுப்புகள் பிரசித்திபெற்றவை.



தேர்ந்த மொழிபெயர்ப்பாளர். சங்க இலக்கியங்களையும் பக்தி இலக்கியங்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். சங்கப் பாடல்களுக்கும் ஆழ்வார் பாடல்களுக்கும் அவர் தந்திருக்கும் அறிமுகங்கள் துல்லியமானவை. இந்திய இலக்கியங்களின் பெருமையை மேற்கத்திய மனங்களுக்கு அறிமுகப்படுத்தியவர்களில் முக்கியமானவர் ராமானுஜன்.

அவரை ஒரு முறை டெல்லியில் சந்தித்திருக்கிறேன். பின்னர்தான் அவர் செய்த நூல்களுக்கு அறிமுகமாகி... , அடடா, ஒரு பெரிய சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டோமே என்ற வருத்தம் இன்னமும் எனக்கு இருக்கிறது.

ராமானுஜன் முதலில் ஒரு கவிஞர் என்பதால், அவர் மொழிபெயர்த்த பாசுரங்களின் அத்தனை உவமைகளையும் உருவகங்களையும் விட்டுவைக்காமல் எப்படியோ தன் மொழிபெயர்ப்பில் கொண்டு வந்துவிடுவார். 8-ம் நூற்றாண்டுத் தமிழின் சிந்தனைகளை 20-ம் நூற் றாண்டின் மேற்கத்திய சிந்தனைகளுக்குக் கடத்துவது அத்தனை எளிதல்ல! ராமானுஜன் அதை சிறப்பாகச் செய்தார்.

திருவிடவெந்தைப் பாசுரங்களின் ஓர் உதாரணம் இது.

துளம்படு முறுவல் தோழியர்க்கு அருளாள்
துணைமுலை சாந்து கொண்டு அணியாள்
குளம்படு குவளைக்கண் இணை எழுதாள்
கோல நல்மலர் குழற்கு அணியாள்
வளம்படு முந்நீர் வையம் முன்அளந்த
மால் என்னும் மால் இனமொழியள்
இளம்படி இவளுக்கு என்நினைந்து இருந்தாய்
இடவெந்தை எந்தைப் பிரானே

She will not bestow on her friends that smile of hers

with teeth like pomegranate seeds

nor adorn her close set breasts with sandal paste

nor apply collyrium to her eyes dark as blue pond-lilies

nor dress her hair with a weave of flowers

She talks of the dark one who once measured the earth surrounded by the richest seas

And her words are equal to her love

Now what did you mean to do with this young thing

O Lord and father of Itaventai?



ராமானுஜன் திவ்யப் பிரபந்தத்திலிருந்து மொழிபெயர்த்த பல பாடல்கள் இன்றும் சிகாகோ போன்ற பல்கலைக் கழகங்களில் சொந்தத் தொகுப்புகளில் முடங்கிக்கிடக்கலாம். அவை அனைத்தையும் சேகரித்து வெளியிட முயற்சித்துக்கொண்டு இருக்கிறார்கள் என்று ஸ்ரீனிவாசன் சொன்னார்.

ராமானுஜன் இருந் திருந்தால் இந்தப் பணியை முடித்திருப்பார். 1993-ல், ஒரு நாடக ஒத்திகையின்போது இறந்துவிட்டார். மற்றொருவரால் அவரைப்போல மொழிபெயர்க்க முடியாது.

அவரது சொல்லாட்சி, மேதைமை, புலமை, படிப்பு, பின்னணி எல்லாம் அவருடன் மறைந்துவிட்டன. ஒரே ஒரு கணித மேதை ராமானுஜன்போல ஒரே ஒரு ஏ.கே.ராமானுஜன்தான் இருந் திருக்க முடியும்!

கிடைத்தவரை அதிர்ஷ்டமே!

**ஆ**ஸ்துமா பற்றிய பல தவறான கருத்துக்களைத் திருத்தும் வகையில், டாக்டர் ஸ்ரீதரன் ஒரு சுவாரஸ்யமான ஆடியோ விடியோ குறுந்தகடு வெளியிட்டுஇருக்கிறார். சிறப்பாக நடிக்கப் பட்டு, எஸ்.பி.காந்தனின் டைரக்ஷனில் படமெடுத்துத் தொகுக்கப்பட்டு, சரியான விவரங்கள் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. ஆஸ்துமா பற்றி பயப்படவே வேண்டியதில்லை. அது ஒரு முடிவல்ல; வேகத் தடை. அவ்வளவே! அருமையான இன்ஹேலர்கள் இப்போது வந்துள்ளன. எனவே, ஆஸ்துமாவுக்காக ஹைதராபாத் போய் மீன் சாப்பிடத் தேவையில்லை என்பதுதான் டாக்டர் செய்தியின் அடிநாதம். இந்தக் குறுந்தகடு இந்தி, தெலுங்கு மொழிகளிலும் டப் செய்யப்பட்டுள்ளதாம்.



### ஏ.பி.மே.

‘**அ**ம்பு நேராகப் பறக்க
ஏதுவாக
கழுகின் இறக்கையிலிருந்து
இறகுகள் எடுத்துப்
பயன்படுத்துவது போல்,
நாம் பல முறை
நம் எதிரிகளுக்கு
நம் அழிவுக்கே
வழி காட்டுகிறோம்!’

- **ஈஸாப்**(கி.மு. 620-560)

### ஏ.பி.க.



‘குமரிப்பெண்’ ‘வினிதா’
‘மும்தாஜ்’ ‘மருதம்’
‘ஜாலி’ ‘கன்னி’
‘இரவுப் பறவை’ ‘கும்தலக்கா’
‘உங்கள் வசந்தி’ ‘குளிர்கால சுந்தரி’
என்று பல புத்தகங்களைப்
படித்த பின்னரும்
பள்ளிக்கூடத்திலிருந்து
திரும்பிவரும் வழியில்
ரயில் தண்டவாளத்தில் கிடந்த,
அட்டையில்லாத
கிழிந்த புத்தகம் போல் ஒன்று
படிக்கக் கிடைக்கவில்லை இன்னும்.
அப்படி என்ன விசேஷம்
அதில் என்று சொல்ல
அந்தப் புத்தகம்
என்னிடம் இல்லை இப்போது
அந்த வயதும்!

- **முகுந்த் நாகராஜ்**

**எ.பி.ஹை.**

ஆட்டுக் குட்டிகள்
முதுகு தேய்த்துரச உதவட்டும்
என் கல்லறைச் சுவர்கள்!

- **மகுடேசுவரன்**

'மண்ணே மலர்ந்து மணக்கிறது' தொகுப்பிலிருந்து...

## அங்கே யாரும் அழுவதில்லை!

**'கா**ர்ப்பெட் பாமிங்' (Carpet Bombing) என்ற ஒரு தாக்குதல் முறையை அமெரிக்கா, வியட்நாம் போரில் பயன்படுத்தியது. ஒரு சதுர அடியைக்கூட விட்டுவைக்காமல், அந்த நாட்டின் மேல் குண்டு வீச்சு செய்தது. அது போன்ற முறைதான், சென்ற வாரம் 'சிவாஜி' திரைப்படத்தின் ரிலீஸில் பயன்படுத்தப்பட்டது. சென்னையில் மட்டும் 16 தியேட்டர்களில் இடைவிடாமல் ஒரு நாளைக்கு நூறு(?!) காட்சிகள் வரை காட்டப்பட்டது. அபிராமி ராமநாதனின் இந்த 'ஸாச்சுரேஷன்' உத்தி, இந்திய சினிமாவுக்கு முதன்முறை!

ரஜினி ரசிகர்களுக்கு இடைவிடாமல் ஆரவாரம் செய்யவும் கிராஃபிட்டி ஜிகினா வீசவும் சந்தர்ப்பங் கள் தரும் இந்தப் படத்தை, ஷங்கருடன் ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு முன் தேக்கடியிலும் ஹைதராபாத்திலும், ஒவ்வொரு காட்சி யையும் க்ளைமாக்ஸ் வரை தீர்மானித்து முழுசாக எழுதி விட்டது இதன் வெற்றிக்கு முக்கியக் காரணம். ரஜினியின் பன்ச் டயலாக்குகள், கண்ணாடியைத் திருப்பிப் போடுவது, மொட்டை போன்ற இதர அலங்காரங்கள் பின்பு தேர்ந்தெடுக்கப்பட்டன.



ஒரு பெண்மணி, "ஹாய்... ஐ யம் ப்ரதீபா ஃப்ரம் சிஎன்என்-ஐபிஎன். உங்ககிட்டருந்து ஒண்ணு ரெண்டு 'சவுண்ட் பைட்ஸ்' (இது ஒரு புதிய இதழியல் பிரயோகம்) தேவை. சிவாஜி பன்ச் டயலாக்ஸ் சொன்னா, ரெக்கார்ட் பண்ணிக்கிறோம்!" என்றார். "ரஜினியை ஒண்ணு ரெண்டு சவுண்ட் பைட்டில் எளிமைப்படுத்தி அலசுவது கொஞ்சம் கஷ்டம்" என்று அந்தப் பெண்மணியிடம் சொன்னேன்.

ரஜினியே போன் பண்ணியிருந்தார். படத்தின் மிகப் பரவலான வெற்றி பிரமிப்பாக இருக்கிறது என்றார். அதற்குப் பல காரணங்களில் ஒன்று, எனக்குத் தற்செயலாக ஒரு லண்டன் தமிழர் அனுப்பியிருந்த விமர்சனத்தில் கிடைத்தது. "எங்கள் குட்டிக் குழந்தை எப்போது சினிமாவுக்குப் போனாலும் விடாமல் அழும். 'சிவாஜி'யை என் குழந்தை அழாமல், கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு இருந்தது!"

பாலு மகேந்திராவிடம் 'சிவாஜி' பற்றி கேட்டபோது, த்ருபோ (Truffaut) ஒரு சந்தர்ப்பத்தில் சொன்னதைச் சொன்னார்... "ஒரு படம் வெற்றிபெற்றால், அதைப் பற்றி விவாதிக்காதே!"

இஎஸ்பிஎன்னில், 'ஸ்பெல்லிங் பீ' என்னும் அமெரிக்க வார்த்தைப் போட்டியைக் காட்டினார்கள். தேசமெங்கும் 13 வயதுக்குட்பட்ட மாணவ- மாணவிகளிடையே போட்டி நடத்தி, 500 பேரைத் தேர்ந்தெடுத்து, வாஷிங்டனுக்கு அழைத்து, ஒவ்வொருவரிடமும் வார்த்தைகளின் ஸ்பெல்லிங் எழுத்து வரிசையைக் கேட்டு, 500-ஐ 50 ஆக்கி, 50-ஐ ஐந்தாக்கி, ஐந்தை ஒன்றாக்கி, தேசிய அளவில் வெள்ளை மாளிகையில் சாம்பியன் பட்டம் கொடுத்தார்கள்.

வார்த்தைகளின் வேர்ச் சொற்களையும், அது எந்த மொழியிலிருந்து வந்தது, அதன் பொருள் என்ன போன்ற மூன்று விஷயங்களை வைத்து, தெரியாத வார்த்தைகளைக்கூட சரியாக எழுத்தமைப்பைச் சொல்லிவிடுகிறார்கள். இதில், இறுதிப் போட்டியில் வென்ற சிறுவனின் மற்ற ஆர்வங்கள், கணிதமும் இசையும் என்றான். பிற்காலத்தில் பாதிரியாராகப் போகிறானாம்.

இந்தப் போட்டியுடன், சிறுவர்களுக்கிடையே விஜய் டி.வி. நடத்திய ஏர்டெல் சூப்பர்சிங்கர் போட்டியை ஒப்பிட முடிகிறது. இதிலும் சிறுவர் சிறுமியரின் திறமையை வெளிப்படுத்தும் போட்டிதான். இரண்டு போட்டிகளுக்கும் ஒரே ஒரு வித்தியாசம்... இறுதிச் சுற்றில் தோற்றுப்போனால் அமெரிக்காவில் பெற்றோர்கள் கட்டிக்கொண்டு, முதுகில் தட்டிக் கொடுக்கிறார்கள். யாரும் அழுவதில்லை. நம் குழந்தைகள், பெற்றோர்கள், தொகுப்பாளினி அனைவரிடமும் கண்ணீர். மேலும், அந்தக் குழந்தைகள் பாடுவதை விட்டுவிட்டு, ஓட்டல் படுக்கையில் குதித்துத் தலையணை சண்டை போடுவது, ஐஸ்க்ரீம் சாப்பிடுவது போன்ற விஷயங்களையே மூன்று வாரம் காட்டி, கொஞ்ச நஞ்ச சுவாரஸ்யத்தையும் கெடுத்தார்கள்!

### எ.பி.ஹை.

பால்கூடக் கசந்தது
மாடு விற்ற பணத்தில்
குடித்தபோது!

- **வெ.இராம்குமார்,** வேலூர் (நன்றி: 'ஏழைதாசன்')







### எ.பி.மே.

'இந்த நாட்டுக்குத் தேவை, கேட்கத்தகுந்த பேச்சு சுதந்திரம்!'

- **ஹென்றி டேவிட் தோரு**




## சமகால சிண்ட்ரெல்லா!

இளவரசி டயானாவை நினைவுகூற, லண்டன் வெம்ப்ளி ஸ்டேடியத்தில் ஒரு மெகா நிகழ்ச்சி நடத்தினார்களே... பார்த்தீர்களா?

உலகின் மிகச் சிறந்த நவீன இசைக் கலைஞர்கள் ஆளுக்கு இரண்டு பாட்டு பாடிவிட்டு, டயானாவுடனான தன்ஞாபகங்களைப் பங்கிட்டுச் சென்றார்கள். எல்டன் ஜான், ராட் ஸ்டீவர்ட், டாம் ஜோன்ஸ்,ஆன்ட்ரு லாயிட் வெப்பர் போன்றவர்களின் இசை, லண்டன் பாலே நடனக் குழு ஆடிய 'ஸ்வான் லேக்' க்ளைமாக்ஸ் நடனம் என்று ஓர் உற்சாகமான கொண்டாட்டமாகத்தான் நிகழ்ச்சி இருந்தது.

நவீன யுகத்தில், அழகான பெண்ணின் எழுச்சிக்கும் வீழ்ச்சிக்கும் உதாரணமாக, உலக மக்களின் வாத்சல்யத்தைக் கவர்ந்துவிட்டார் டயானா. சாதாரணக் குடும்பத்தில் பிறந்து, ராஜ குடும்பத்தில் சேர்ந்து, இரண்டு அழகான ராஜகுமாரர்களைப் பெற்றுத்தந்து, தன் சந்தோஷத்தை இழந்து ஏங்கி, அதை மீண்டும் பெற முயன்று, காதலைத் தேடிச் செல்லும்போது மீடியாவால் துரத்தப்பட்டு, விபத்தில் இறந்த சமகால சிண்ட்ரெல்லா கதை!




லட்சோப லட்சம் மக்கள் ஆரவாரம் செய்தது, அவர் எந்த அளவுக்கு மக்கள் மனதில் இடம் பிடித்திருந்தார் என்பதை உணர்த்தியது.

### எனக்குப் பிடித்த 'தமிழ் ராப் பாடல்!'

'When will we rise from the miseries...'
யூ ட்யூபிலிருந்து அக்ஸென்ச்சர் கிரிபாபு அனுப்பியது!




**செ**ன்ற இதழ்களில் நான் குறிப்பிட்ட சில விஷயங்கள் எங்கே கிடைக்கும் என்று பலர் தொலைதூரத் தொலைபேசியில் கேட்கிறார்கள். இனி, கிடைக்கும் இடங்களையும் குறிப்பிடு கிறேன்.

‘கோயில் ஒழுகு’ புத்தகம் www.srivaishnavasri.com-ல் கிடைக்கும். ஆஸ்துமா நிபுணர் டாக்டர்களை www.internationalasthmaservices.com என்கிற வலைமனையில் தொடர்புகொள்ளலாம். இதோடு என்னை விட்டுவிடுங்கள். இதற்கு மேல் அப்பாயின்ட் மென்ட் வாங்கித் தருவீர்களா, அல்லது வி.பி.பி-யில் அனுப்புவாரா போன்ற கேள்விகள் எல்லாம் கேட்காதீர்கள், சரியா?

**மூ**லிகை மணி டாக்டர் வெங்கடேசனின் மகன் திருமண வரவேற்பில் பழைய நண்பர்கள் அமுதவன், குமார் இருவரையும் சந்தித்தேன். நான் பெங்களூரில் வசித்தபோது, மாதம் ஒரு முறையாவது இருவரும் ‘பெல்’ காலனி வந்து சந்தித்து இலக்கிய, சினிமா விஷயங்கள்பேசி விட்டுச் செல்வார்கள். நிறைய தகவல் சேர்த்து வைத்திருப்பார்கள்.


டயானாவின் மகன்கள்

இப்போது சந்தித்த கொஞ்ச நேரத்தில், பெங்களூரு தமிழர்களின் நிலை, ரஜினிகாந்த், ரவிச்சந்திரன் பற்றியெல்லாம் பேசிவிட்டுப் புறப்பட்டனர். அமுதவன் ‘ரெய்கி’யில் தீவிரமாக ஆழ்ந்திருக்கிறார். அவர் கைவைத்தாலே பல வலிகள் போய்விடுவதாகவும், அதற்காக கிளினிக் வைத்திருப்பதாக வும் சொன்னார். கதை எழுதுவதைக் குறைத்துவிட்டார்.

குமார், பெங்களூரு அடையாளம் தெரியாமல் மாறிப் போயிருப்பதை விவரித்தார். மல்லேஸ்வரம் மில் கார்னரில் அடுக்கு மாடிக் கட்டடங்களாம். நினைத்துப் பார்க்க முடியவில்லை. சம்பிகே ரோடின் அடர்ந்த மர நிழலில் உறங்கிக்கொண்டு இருந்த மல்லேஸ்வரம் காணா மல் போய்விட்டதாம்.



ஹெச்.எம்.டி., என்.ஜி.இ.எஃப் எல்லாம் மூடிவிட்டார்கள். ஐ.டி.ஐ. ஆள்குறைப்பு செய்துவிட்டார்கள். ஒசூரையும் தும்கூரையும் நோக்கிப் பரவலாக விரிந்துவிட்ட நகரம், தன் தூக்கத்தை இழந்து ஐ.டி. முன்னேற் றத்துக்கு அதிக விலை கொடுத்துவிட்டது தெரிகிறது.

அடுத்தது மைசூரு.

**ஸ்ரீ**ரங்கம் தாயார் சந்நிதி பிராகாரத்திலும், மேற்சுவரிலும் மேட்டு அழகியசிங்கர் சந்நிதி புறச்சுவர்களிலும் உள்ள பழைய சித்திரங்களுக்கு ஓர் உதாரணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இந்தச் சித்திரங்களை நானே சின்ன வயசிலிருந்து பார்த்து வந்திருக்கிறேன். குறைந்தபட்சம் 150 ஆண்டுகளாவது பழசாக இருக்க வேண்டும், இதன் வண்ணங்கள், சுதை.

பர்ஸ்ஃபெக்ட்டிவ் பற்றிக் கவலைப்படாமல் வரையப்பட்ட கச்சலான பெண்களும், அழகான கண்களும் ஆபரணங்களும் ஆராய்ச்சிக்குரியவை. இந்தக் கோயிலில் பல ரகசியங்கள் உள்ளன. தஞ்சாவூர் வரை செல்லும் ஒரு சுரங்கப் பாதை இருப்பதாகச் சொல்வார்கள். அதற்கான கம்பி போட்டு மூடிய கிணற்றைப் பார்த்திருக்கிறேன். யாரும் உள்ளே இறங்கிப் போய்ப் பார்த்ததாகத் தெரியவில்லை.

எ.பி.ஹை.

**மி**ன்சாரம் தடைப்பட
புத்தகத்தை மூடிவிட்டு
மழையைக் கவனிக்கிறேன்!



**கே.ரமேஷ்** (Soap bubbles)

## என்னது?!



**சா**ன் ஃப்ரான்சிஸ்கோவில் ஆப்பிள் கம்பெனியின் புதிய படைப்பான ஐ -போனை வாங்க க்யூவில் 40-வது ஆளாக நின்றது ஸ்டீவ் வாஸ்நியாக். ஆப்பிள் கம்பெனியின் நிறுவனர்களில் ஒருவர்!

## எ.பி.மே.



**இ**ந்த வாரம் எனக்குப் பிடித்த மேற்கோள்கள் இரண்டு. ஒன்று, எனக்கு இ-மெயிலாக வந்தது. மற்றது, மக்கள் டி.வி. பேட்டியில் 'பரப்புரை'யானது.

1. 'ஜூன் மாத இரவுக்குப் பேச முடிந்தால், காதலைக் கண்டுபிடித்ததற்குப் பெருமைப்பட்டுக்கொள்ளலாம்!' - பெர்ன் வில்லியம்ஸ்

2. 'புழுதி அடங்கட்டும். வந்தது கழுதையா குதிரையா, தெரியும்!'

**- ஸ்பானிஷ் பழமொழி**

## இவங்க எல்லாருக்கும் ஒரு ஒற்றுமை!

**கேள்வி:** அட்னன் சாமி, விவா கேர்ள்ஸ், நேகா பேஸின், ஷ்ரேயா கோஷல், ராகுல் நம்பியார், ஷங்கர் மகாதேவன், யுவன்ஷங்கர் ராஜா, சுதா ரகுநாதன்... இவர்களுக்கெல்லாம் பொது என்ன?

**விடை:** டைரக்டர் வஸந்தின் 'சத்தம் போடாதே' படத்தில் இவர்கள் அனைவரும் பாடி இருக்கிறார்கள்.

இப்போதெல்லாம் பாடகர்கள் மூலம் சத்தமில்லாமல் தேசிய ஒருமைப்பாடு நிகழ்ந்துகொண்டு

இருக்கிறது. யார் எந்த மொழியில் நன்றாகப் பாடினாலும், நம் இசையமைப்பாளர்கள் உடனே போன் பண்ணி, 'அடுத்த ஃப்ளைட்டைப் பிடித்து வாருங்கள்' என்று கூப்பிட, அவர்களும் வந்துவிடுகிறார்கள். தமிழ் தெரியாவிட்டால், 'பருவாயில்லை'.

மற்றொரு பக்கம், கர்னாடக சங்கீதத்தில் உன்னி கிருஷ்ணன், நித்யஸ்ரீ, பாம்பேஜெயஸ்ரீ துவங்கி

வைத்தது தொடர்கிறது. ஓ.எஸ். அருண்கூட பாட வந்துவிட்டார் (சஞ்சய் ஒருவர்தான் பாக்கி). இது நல்ல விஷயம்தான். அபஸ்வரம் இல்லாமல் பாடுவார்கள். மேலே தைரியமாக சஞ்சரிப்பார்கள். புதிய குரல்களைக் கேட்கலாம்.

குத்துப் பாட்டு பாடவைக்காமல் இருந்தால், இது வரவேற்க வேண்டிய விஷயமே! இது ஒன்றும் சினிமாவுக்குப் புதிதல்ல. ஜி.என்.பி, எம்.எஸ், எம்.எல்.வி, டி.கே.பட்டம்மாள், ஏன்... முசிறி சுப்ரமண்ய ஐயர், மகாராஜபுரம் விஸ்வநாத ஐயர் எல்லாம்கூட சினிமாவில் பாடி இருக்கிறார்கள். சிலர் நடித்தும் இருக்கிறார்கள். அப்போ தெல்லாம் ப்ளே பேக் வரவில்லை. பாடத்



தெரிந்தால் போதும்; தோற்றம், நடிப்பு, மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம்தான்!

'பொதிகை'யில் நடுராத்திரியில் 'ஆர்யமாலா' படத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் காட்டினார்களே,

உங்களில் என்னைப் போல் லேட்டாகத் தூங்கும், அல்லது தூக்கம் வராத சிலர் பார்த்திருப்பீர்கள். ‘ஆர்யமாலா’வில் என் கணக்குப்படி 52 பாடல்கள் இதுவரை எண்ணி யிருக்கிறேன். கதாநாயகன் பி.யு. சின்னப்பா நன்றாகவே பாடுவார். ‘பத்தினியே உன்போல்...’, ‘காதல் கனி ரசமே’, ‘கேலி மிகச் செய்வாள்’, ‘பார்த்தால் பசி தீரும்’ போன்றவை அனைத்தும் அந்தக் கால ஹிட் பாடல்கள்.

கதாநாயகிமார்கள் கண்களில் உயிரை வைத்துக்கொண்டு, தேசலாக இருந்தாலும் பரவாயில்லை... ஒரு பாட்டுப் பாடியாக வேண்டும். என்.எஸ்.கே., மதுரம், காத்தவராயனை வளர்க்கும் கள்வர் தலைவன், பார்வதி, சிவபெருமான் எல்லோரும் பாடுவார்கள். பாடாதது குதிரைகள் மட்டும்தான். இப்படிப்பட்ட நீண்ட பரம்பரையைக் கொண்ட தமிழ் சினிமா, முழுவதும் பாட்டைத் துறக்க 2020 ஆகும்.

**அ**பிராமி அந்தாதியில் பிக் பாங் (big bang) தத்துவம் பற்றிச் சொல்லி யிருக்கிறது என்று மேற்கு மாம்பலம் ஆர்.கணேசன் மின்னஞ்சல் அனுப்பி, ‘ஒன்றாய் அரும்பி பலவாய் விரிந்து உலகெங்குமாய் நின்றாள் அனைத் தையும் நீங்கி நிற்பாள்’ போன்ற மேற்கோள்களைக் காட்டியிருக்கிறார். தமிழிலக்கியங்கள் பலவற்றில் குறிப்பாக, திவ்யப்பிரபந்தத்திலும், கம்ப ராமாயணத்திலும் நவீன அறிவியல் கருத்துக்கள் இருப்பதற்குப் பல உதாரணங்கள் காட்டலாம். இதில் யாராவது குறைந்தபட்சம் ஒரு எம்.ஃபில்., பண்ணலாம்.

*‘ஒன்றே என்னின் ஒன்றே ஆம்*
*பலவென்றுரைக்கின் பலவே ஆம்*
*அன்றே என்னின் அன்றே ஆம்*
*ஆமே என்னின் ஆமே ஆம்’*

- என்று கம்பர் சொல்வது க்வாண்டம் இயற்பியலுடன் பொருந்திப்போகிறது. *‘நோயும் இன்றி நோன்கதிர் வேல் வாளும் இன்றி மாயும்’* என்று சொல்வது நிச்சயம் ஹார்ட் அட்டாக்தான். ஆரண்ய காண்டத்தில், *‘மண்ணின் மேல்வன தேர்சென்ற சுவடெல்லாம் மாய்ந்து விண்ணில் ஓங்கியது ஒரு நிலை’* என்று புஷ்பக விமானம், ஏரோப்ளேன் டேக் ஆஃப் போல வர்ணிக்கப்பட்டு இருக்கிறது. சீவக சிந்தாமணியில், மயிற் பொறி என்னும் ரோபாட் உள்ளது. இவ்வகையில் பல உதாரணங்கள் தரலாம். இதனால், அபிராமி பட்டருக்கு ‘பிக் பாங்’ தியரியும், கம்பருக்கு ஏரோ டைனமிக்ஸூம், திருத்தக்க தேவருக்கு ரோபாடிக்ஸூம் தெரிந்திருந்தது என்று சொல்ல முடியுமா? இதெல்லாம் அவர்கள் அந்தந்த நூற்றாண்டில் எழுதிய சயின்ஸ் ஃபிக்ஷன் என்றுதான் சொல்ல வேண்டும். எந்த நாற்றாண்டிலும் தங்கு தடையில்லாமல் இருந்தது கற்பனைக் குதிரைதான்!

## எ.பி.மே.

‘வலி விலகுவதை அனுபவி. ப்ரச்னை தீர்ந்த பின் பாடல் இனிக்கும்!’

-கொதே (Goethe)

## எ.பி.கா.



### ஏ.பி.ஹை.



காட்டு மரங்களிடையே
மின்னல் காட்டிய
தண்ணீரைப் பார்த்துவிட்டேன்!

- ஷிகி (1867-1902)

### ஏ.பி.க.



மகாபாரதம்
இதிகாசமானது
பகவத்கீதை
வேதமானது
கண்ணன்
அர்ச்சுனன்
அனைவரும்
கடவுளானார்கள்
எல்லாம் சரி
கூட்டம் கூட்டமாக
வெட்டிக்கொண்டும்
குத்திக்கொண்டும்
செத்துப்போன
சிப்பாய்கள்
என்ன ஆனார்கள்?

**-இரா. பூபாலன்**
நன்றி: 'புன்னகை' கவிதை இதழ்

கலை, இலக்கியம், இசை, அறிவியல், கடவுள்...

## என்ன வேண்டும் உங்களுக்கு?



**தெ**ரியாத்தனமாக என் இ-மெயில் முகவரியை இந்தப் பகுதியில் கொடுத்ததில், எனக்கு அனுப்பப்படும் குப்பைகள் ஏராளமாகிவிட்டன. உலகில் உள்ள உதவாத விஷயங்கள் அத்தனையையும் இணைத்து அனுப்பி, "இதைக் 'கற்றதும்... பெற்றதும்...' பகுதியில், என் பெயர் போட்டு எழுதவும். இல்லையேல் திட்டுவேன்" என்று ஆணையிடுகிறார்கள். இதைப் பற்றி என் மகனிடம் வருத்தப்பட்டுக்கொண்டு இருந்தபோது, "இன்டர்நெட்டில் நல்ல விஷயங்களை நாம்தான் நாடிப்போக வேண்டும். மற்றவற்றைப் படிக்காமல் ஒதுக்கிவிட வேண்டும். தெரிந்தவர்களிடமிருந்து இ-மெயில் வந்தால் மட்டும் திறக்க வேண்டும். இல்லையேல், சளைக்காமல் பயன்படுத்த இருக்கவே இருக்கின்றன 'டெலிட்', 'ஜங்க்' ஆணைகள்!" என்றவன், "இதை மட்டும் பார்!" என்று மூன்று அருமையான வலைமனைகளின் முகவரி தந்தான்.

அவற்றைப் பார்த்து யான் பெற்ற பரவசம் க-பெ வாசகர்களுக்கும் கிடைக்க வேண்டும் என்கிற உண்மையான நோக்கத்தில், அந்த மூன்று முகவரிகளையும் தருகிறேன். www.ted.com இதில் உலகின் சிறந்த அறிவுஜீவிகளின் சுருக்கமான, கருத்தாழமான

ஆடியோ, வீடியோ சொற் பொழிவுகள் உள்ளன. கலை, இலக்கியம், இசை, அறிவியல், கடவுள் போன்ற பல விஷயங்களைப் பற்றிய உண்மையான அறிவுஜீவிகளின் அவைக்கு அளிக்கப்பட்ட கலகலப்பான சொற் பொழிவுகள்.

அவற்றில் நான் சமீபத்தில் அனுபவித்தவை இவை... ரிச்சர்ட் டாக்கின்ஸின் 'நான் ஒரு நாத்திகன்' சொற்பொழிவு, லின் என்னும் சீன அமெரிக்கச் சிறுமியின் அட்டகாச மான பியானோ வாசிப்பு, 'உலகெங் கிலும் ஏழ்மையின் வடிவங்கள்' பற்றி ஆல்சன் என்ற ஐரோப்பிய பொதுநல ஆரோக்கிய நிபுணர் தந்த புள்ளிவிவரங்கள், ஐரோப்பா உபகிரகத்தில் மனிதன் இறங்கச் செய்து கொண்டு இருக்கும் ஏற்பாடுகள் பற்றி ஒரு வீடியோ ('ஐஸ் பாளங்களை உருக்க சிறிய நியூக்ளியர் கப்பலை முதலில் அனுப்புவோம்!')... இப்படி பிரமிப்பூட்டும் விஷய வீச்சு! அதே போல் www.edge.com என்பதில் அறிவியலும் மனித மனமும் பற்றிய சிறந்த கட்டுரைகள் உள்ளன. www.aldaily.com என்பதில் கலை, இலக்கியம் பற்றிய செய்திகளும் ஐம்பதுக்கும் மேற்பட்ட சிறந்த கட்டுரையாளர்களின் பத்திகள் அத்தனையும் கிடைக்கின்றன.

மூன்றுமே எனக்கு மூன்று வருஷத்துக்குப் போதும். எனவே, கேட்காமல் எதையும் தயைகூர்ந்து அனுப்பாதீர்கள். மீறி அனுப்ப ஆர்வம் பீறிட்டால், இந்த மூன்று வலைமனைகளையும் ஒரு 'கிளான்ஸ்' பார்த்துவிடுங்கள். அவை களை மிஞ்ச முடியுமா, பாருங்கள்!

Ted போல, தமிழில் சிறந்த சொற்பொழிவுகளை ஏதாவது ஒரு வலைமனையில் யாராவது வீடியோ எடுத்து வைக்க முன்வந்தால் நல்லது. சரியாக இருபது நிமிஷத்துக்கு மேல் போகக் கூடாது. ஒவ்வொரு துறையிலும் சிறந்த சொற்பொழிவாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆடியன்ஸ் முன்னிலையில் சிரிப்பும் கரகோஷமும் தவறாமல் பதிவு செய்ய வேண்டும். அருகே பேச்சாளரைப் பற்றிய ஒரு சிறு குறிப்பு தர வேண்டும்.


சாலமன் பாப்பையா மா.நன்னன் தென்கச்சி சுவாமிநாதன் பால் தினகரன் ஞானசம்பந்தன் சஞ்சய் சுப்ரமண்யன்

எனக்கு உடனே தோன்றும் முதல் பட்டியல் இது. தென்கச்சி சுவாமிநாதன் (தகவல் தருவது எப்படி?), பேராசிரியர் கு.ஞானசம்பந்தன் (பட்டிமண்டப அனுபவங்கள்), பேராசிரியர் மா.நன்னன் (பழமொழிகள் தேவையா?), சாலமன் பாப்பையா (சங்க இலக்கியம் - ஓர் அறிமுகம்), வேளுக்குடி கிருஷ்ணன் (பிரம்ம சூத்ரம் புரியுமா?), சுனந்தா பார்த்தசாரதி (18-ம் அத்தியாயம்), பால் தினகரன் (இயேசுநாதர் இன்று), சஞ்சய் சுப்ரமண்யன் (கர்னாடக இசையும் மேற்கத்திய இசையும்).

ஒவ்வொருவருக்கும் இப்படித் தலைப்பு தருவதில் குழப்பம் இருக்காது என எண்ணுகிறேன். அந்த வரிசையில் என்னைக் கேட்டால், நான் கொடுக்க விரும்புவது... 'பிரபஞ்சத்தின் முடிவும் ஆரம்பமும்!'




**எ.பி.ஹை.**

இலையுதிர் காலத்தில்
இந்தப் பாதையில்
யாரும் செல்வதில்லை
என்னைத் தவிர!

- **பாஷோ**(1644-1694)

ஏ.பி.மே.



'காதலிப்பது போல்
பாசாங்கு செய்யாதே.
காதல் நம்
ஆணைக்குப் படியாது!'

**-ஆலன் வாட்ஸ்**

## அறிஞர்களை அசத்திய ஆறு கேள்விகள்!

1. உப்பு ஏன் நீரில் கரைந்துபோகிறது?
2. பூமிக்கு என்ன வயசு?
3. ஒரு மின் விளக்கின் சுவிட்ச்சைத் தட்டும்போது, உண்மையாக என்னதான் நிகழ்கிறது?
4. இரட்டை என்பதும் க்ளோன் என்பதும் ஒன்றா?
5. தெர்மோடைனமிக்ஸின் இரண்டாவது விதி என்கிறார்களே, அது என்ன?

**உ**லகின் சிறந்த சிந்தனையாளர்களை, சமீபத்தில் ஆறு எளிய அறிவியல் சந்தேகங்கள் கேட்டுச் சோதித்தனர். அனைவரும் முயற்சி செய்தார்கள். இருந்தும், அவர்களின் விடைகளில் அலட்சியமும் குழப்பமும் தெரிந்தன. யாராலும் எல்லாவற்றுக்கும் பதில் சொல்ல முடியவில்லை. இத்தனைக்கும் அனைவரும் வேதியியல், இயற்பியல், புவியியல் போன்ற அவரவர் துறைகளில் சிறந்த அறிவாளிகள். காரணம் என்ன? அவர் களுக்குச் சரியான விடை தெரியாது என்றில்லை. குத்துமதிப்பாகத் தெரியும். தேவைப்படும்போது நுட்பமாகப் பார்த்துக்கொள்ளலாம் என்று தத்தம் துறை சார்ந்த அறிவுக்கு முதலிடம் கொடுத்ததுதான் காரணம்.

அந்த ஆறு கேள்விகளைத்தான் மேலே தந்திருக்கிறேன். பதிலளிக்க முயன்று பாருங்கள். உங்கள் அருகில் உள்ள அறிவுஜீவிகளையும் கேட்டுப் பாருங்கள். எத்தனை தெளிவு, எத்தனை மழுப்பல் என்று பாருங்கள்.

சரியான விடைகளின் சாரத்தைக் கடைசியில் கொடுத்துள்ளேன்.

**'எ**ந்த அடிப்படையில் ஹைகூ கவிதைகளைத் தேர்ந்தெடுக்கிறாய்?' என்று பலர்

கேட்டிருக்கிறார்கள். சுலபம். ஹைகூவின் காட்சியை என்னால் மனதில் சித்திரித்துக்கொள்ள முடிந்தால் போதும். இரண்டு வாரம் முன்பு,

*மின் வெட்டு*
*புத்தகத்தை மூடிவிட்டு*
*மழையைக் கவனித்தேன்* - என்ற ஹைகூவை மனதில் காட்சியாக நிகழ்த்திப் பார்ப்பதில் யாருக்காவது சிரமம் இருக்குமோ? அது போல, மழைத்தூறலையும் காக்கைகளையும் ஒரே ஒரு கட்டுமரத்தையும் மெரீனாவில் நடைபயிலும்போது நேரில் பார்த்திருக்கிறேன்.

தின வாழ்வின் அற்புத நிகழ்ச்சிகளை மறுபடி நினைவுபடுத்தினால் போதும். மற்றொரு தளத்தில், ஹைகூ கவிதைகளில்

‘இயற்கைக்குத் திரும்பிச் செல்’ என்ற செய்தி பொதிந்திருக்கும். அது மெள்ள மெள்ள விளங்கும்.

**‘ஹி**ந்துமித்திரன்’, ‘கீதாசார்யன்’ தவிர, மற்றெல்லா இதழ்களிலும் ‘சிவாஜி’ படம் விரிவாக விமர்சிக்கப் பட்டுவிட்டது. ‘ப்ளாக்’கர்களின் அல்வா சிவாஜி. எல்லோரும் தவறாமல் எனக்கு ஒரு அட்டாச்மென்ட் அனுப்பி, என் இன்பாக்ஸை நிரப்பிவிடுகிறார்கள். ‘ஐயா! நான் தேவைப்பட்டால் தேடிப் பார்த்துப் படித்துக்கொள்கிறேன்’ என்று சொல்லி அலுத்துவிட்டது.



மேலும், வழக்கம் போல் கேட்காமல் எனக்குப் புத்தகம் அனுப்பும் அன்பர்கள், நான் அந்தப் புததகங்களை இன்னும் படிக்கவில்லை என்று போன் போட்டுத் தெரிந்துகொண்டதும், இப்போது புதுசாக, ‘என்ன சார், நான்‘சிவாஜி’ பார்த்தேனே சார்!’ என்று அதட்டுகிறார்கள். அதன் நிறை, குறை, கறைகளுக்கெல்லாம் என்னை இலக்காக்கிவிடுகிறார்கள். படத்தில் மறுப்புத் தெரிவிக்கப் புதுசு புதுசாக விஷயங்கள் தேடிக்கொண்டு இருக்கிறார்கள். இதில் எல்லாம் எனக்கு வருத்தம் ஏதும் இல்லை.

‘சிவாஜி’யால் பல நல்லவை நிகழ்ந் திருக்கின்றன. முதன்முதலாக கோடம் பாக்கம் மும்பையை மிஞ்சியிருக் கிறது. யுகே டாப் டென் லிஸ்ட்டில் முதன்முதலாக ஒரு தமிழ்ப் படம் நுழைந்திருக்கிறது. இண்டஸ்ட்ரி யைத் தூக்கி நிறுத்தியிருக்கிறது. அமெரிக்க ‘லாஸ் ஏஞ்சலீஸ் டைம்ஸ்’ பத்திரிகையின் ஜூலை 15 இதழில், ‘சிவாஜி’ பற்றி ஒரு முழுக் கட்டுரையே வெளியாகி உள்ளதைக் குறிப்பிட்டு, எழுத்தாளர் கீதா பென்னெட் எனக்கு இ-மெயில் அனுப்பியிருந்தார். பாலிவுட் பற்றி அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது. முதல் முறையாக தெற்கில் ஒரு கோலிவுட் இருப்பதையும், தமிழ் என்றொரு மொழி ஏழு கோடி மக்களால் பேசப்படுவதையும் அந்தப் பத்திரி கையைக் கவனிக்க வைத்திருக்கிறது. இதில் எனக்குப் பெருமைதான்!

**விடைகள்:**

1. உப்பின் சோடியம் க்ளோரைடு அயான்கள், நீரின் ஹைட்ரஜன் ஆக்ஸிஜன் அயான்களால் இழுத் துப் பிரிக்கப்பட்டு மறைகின்றன. நீரை நீக்கிவிட்டால், மறுபடி சேர்ந்து கொள்ளும்.

2. ஜியோ க்ரோனாலஜி (புவியியல் காலக் கணக்கு) முறைப்படி, நாலரையிலிருந்து ஐந்து பில்லியன் ஆண்டுகள் (பில்லியன் என்பது 100 கோடி).

3. மின் உற்பத்தி நிலையத்தி லிருந்து உங்கள் பல்பு வரை இணைப்பு முற்றுப் பெறுகிறது.

4. அச்சு அசலாகப் பிறக்கும் இரட்டையும் க்ளோனும் ஒன்று தான்!

5. காற்று மண்டலத்தில் உள்ள தூசுகள், சூரிய ஒளியின் நிற மாலையில் உள்ள நீல நிறத்தை அதிகம் சிதறவைப்பதால்!

6. எளிதாகச் சொன்னால், ‘எண்ட்ரபி’ என்னும் பிரபஞ்சத்தின் ஒழுங்கற்ற தன்மை அதிகரித்துக் கொண்டே போகிறது. எந்தச் சக்திப் பரிமாற்றத்திலும் இழந்த சக்தி திரும்ப வராது.

### எ.பி.மே!

**‘ந**ல்ல நண்பன் உன் தப்பை
உடனே சொல்லிவிடுவான். அதன்
பின், அவன் நல்ல நண்பனாகத்
தொடர்வது சந்தேகம்!’

**- ஆர்தர் ப்ரிஸ்பேன்**

எ.பி.க.



## நான் அவன்

**நா**னாக அவனும் அவனாக நானும்
சாத்தியமில்லை
எனது சந்தோஷங்கள் அவனது சந்தேகங்கள்
எனது ஆசைகள் அவன் கற்பனை செய்யாதவை
அவனது ஆசைகள் என்னை அடிமைகொள்பவை
எனது கற்பனைகள் அவனுக்குப் புரியாதது
அவனது கற்பனைகள் அலுத்துப்போனவை
எனது நோக்கு அவனுக்குப் புதியது
அவனது நோக்கு எனக்குப் பழையது
அவன் வளர்ந்தும்... நான்
நான் குழந்தை... அவன்
நான் அவனாவதும் அவன் நானாவதும்
சாத்தியமே இல்லை
நான் நான் அவன் அவன்!

- **றஞ்சனி**

எ.பி.ஹை!



**ம**ழைத் தூறல்
சிறகடிக்கும் காக்கைகள்
கடலில் ஒற்றைக் கட்டுமரம்!

- **ம.தி.சாந்தன்** (ஏழைதாசன் - இதழ் எண் 149)

கம்ப்யூட்டரே, பதில் சொல்லு!

**வ**யசாவதன் தவிர்க்க முடியாத அடையாளங்களில் ஒன்று, சமீபத்திய ஞாபகங்கள் கண்ணாமூச்சி காட்டுவது. நினைவு இருப்பது போலிருக்கும்; வார்த்தை சிக்காது. இரண்டு நாட்களுக்கு முன், முகம்மது கைஃப் என்ற பெயர் சட்டென்று மறந்து போய், அதிகாலையில் ஒரு மணி நேரம் விழித்திருந்து யோசித்தேன். இந்த உபாதைக்கு நியூரான்களைப் புதுப்பிக்க மருந்து மாத்திரைகள் இருக்கிறதா? டாக்டர் ராமச்சந்திரன் போன்றவர்கள் சொல்லலாம்.

ஆனால், நான் கடைப்பிடிப்பது ஒரு நிச்சயமான மார்க்கம்... இன்டர்நெட்! ஞாபகம் வரவில்லை என்றால், அப்படியே விட்டு விட்டுக் காலை எழுந்ததும், கம்ப்யூட்டரைத் திறந்து google அலலது yahoo answers-ல் கேள்வி கேட்டால், கிடைத்துவிடும். இப்படித்தான் சாமர்செட் மாம் எழுதிய நான் படித்த மூன்றில் இரண்டு நாவல்களின் பெயர்கள் ஞாபக மிருந்தன (Of Human Bondage, The Moon and Sixpence). மூன்றாவது பூச்சி பறந்தது. நெட்டில் கேட்டதில், சட்டென்று பதில்! The Razor's Edge.



இணையம் இருக்கும் வரை இறப்பு இல்லை. அதில் தேடும் முறையை மறந்து போய்விட்டால், ஏறக்குறைய சங்குதான்.

**சா**மர்செட் மாமின் நாவல்களை நான் எம்.ஐ.டி. படிக்கும்போது, க்ளாஸ் கட் அடித்து விட்டுக்கூடப் படித்திருக்கிறேன். பால் கோகேன் என்னும் சித்திரக்காரரின் வாழ்க்கை சார்ந்த

கதையோ, சுயசரித்திரம் சார்ந்த கதையோ, தாமஸ் ஹார்டியின் வாழ்வைத் தழுவிய நாவலோ... மாமின் உரைநடையின் தெளிவு என் எழுத்தை ஒரு விதத்தில் பாதித்தது.

இப்போது படிக்கும்போது, அந்த நாவல்கள் அப்படியொன்றும் ஓஹோ என்று தெரியவில்லை. Razors Edge நாவல் அப்போது போர் அடித்தது. இப்போது அதுதான் சிறந்ததாகத் தெரிகிறது. மேற்கத்திய வாழ்வு அலுத்துப் போய், ஒருவன் நிம்மதி தேடி இந்தியாவுக்கு வந்து, ரமண மகரிஷியின் ஆசிரமத்தில் அமைதி காணும் கதை. சாமர்செட் மாம் எழுதிய எதையும் படித்திரா தவர்கள், அவருடைய ஸிணீவீஸீ என்னும் சிறுகதையை மட்டும் படித்தால் போதும்.

**'எ**ழுத்துக் கலைஞர் கந்தர்வன்' என்ற நூலை கவிஞர் மு.முருகேஷ் தொகுத்து, வந்தவாசியிலிருந்து 'அகநி' பதிப்பகத்தின் மூலம் வெளியிட்டிருக்கிறார். கந்தர்வனின் பன்முகத் திறமையைக் காட்ட, அவர் நண்பர்களுக்கு எழுதிய கடிதங்கள், முன்னுரைகள், அணிந்துரைகள் (என்ன வேறுபாடு?), நேர் காணல்கள், கட்டுரைகள் இவற்றைத் தொகுத்திருக்கிறார். கந்தர்வன் என்ற முற்போக்கு எழுத்தாளரைப் பற்றிய ஒரு முழு வடிவம் கிடைக்கிறது.

"எனக்குள் இரண்டு ஆட்களுண்டு. ஒருவன் முரட்டுத்தனமான தொழிற்சங்கவாதி. இன்னொ ருவன் கிராமத்தில் இருக்கும் அம்மாவுக்குக் கடிதம் எழுதும்போதே கண்ணீர்விடும் ஆள். மரம், மலர், மழலை எதுவானாலும் ரசித்துச் சிலிர்த்துப் போய்த் திரிகிற ஆளாகவும், அதிகாரிகள் முன்னால் சண்டைச் சேவலாகவும் திரிகிற குணம்..."

இவ்வகையிலான புத்தகங்களைத் தொகுக்கும்போது, கட்டாயமாக ஒரு பக்கம் வாழ்க்கைக் குறிப்பு தர வேண்டும். புதிதாகப் படிப்பவர் களுக்கு, கந்தர்வன் மறைந்த எழுத்தாளர் என்பதே தெரியாது. முருகேஷ் இதன் அடுத்த பதிப்பில் இதைச் சேர்த்துக்கொண்டால், இது ஒரு நல்ல நூல்!



கந்தர்வன்

**தி**ருமங்கையாழ்வாரின் காலத்தில் முதலில் கட்டப்பட்ட நீள்மதிலரங்கம் என்னும் திருவரங்கத்துக் கோயிலின் மதில் சுவர்கள் இப்போது சிதிலமடைந்து, காட்டுச் செடி பீறிட்டு உடைந்துவிழும் நிலையில் இருப்பதை ராஜ் டி.வி-யில் காட்டினார்கள். இதைப் புதுப்பிக்க ஒரு பிரபு மூணு கோடி ரூபாய் தந்திருப்பதாகவும், மதிலருகே வசிப்பவர்களைத் தற்காலிகமாக இடம் மாற்று வதில்தான் பிரச்னை என்றும் சொன்னார்கள்.

கோயிலை ஒட்டிய உத்தர வீதியின் மதில் சுவர்கள் பல அங்கங்கே சிதிலமாக இருப்பதையும், அவற்றுக்கருகே தற்காலிக அஸ்பெஸ்டாஸ் குடியிருப்புகள் முளைத்திருப்பதையும் சென்ற முறை பார்த்தேன். இவற்றை யார் அனுமதித்தார்கள், தெரியவில்லை! கோப்புகளை நோண்டிக் கண்டுபிடிப்பதற்குள் இம்மாதிரியான பிரச்னைக்கு உடனே கலெக்டரோ, கமிஷனரோ தீர்வு காண வேண்டும். மதில் கல் இடிந்து யார் தலையிலாவது விழும் வரை காத்திருக்கக்கூடாது. பெரிய பெரிய கற்கள். உடனடி பரமபதம்!

**ம**ற்றொரு ஐ.ஏ.எஸ். அதிகாரி, தன் வெற்றியின் ரகசியத்தைப் புத்தகமாக எழுதியுள்ளார் (தி.ந.வெங்கடேஷ்). கரூர் மாவட்ட மைய நூலகத்தில் இந்த நூல் இலவசமாகக் கிடைக்கும். வெ.இறையன்பு, சைலேந்திர பாபு போன்றவர்கள் இந்நூலுக்கு முன்னோடிகள்.

சாமர்செட் மாம்



பொதுவாக, தமிழ்நாட்டில்இருந்து ஐ.ஏ.எஸ். பரீட்சையில் தேர்பவர்கள் குறைவு! இதற்கு முக்கியக் காரணம், இந்தப் பரீட்சையைப் பற்றிய தவறான சில எண்ணங்களே! ப்ரிலிமினரி என்னும் ஒரே ஒரு முதன்மைத் தாள் மட்டும் ஆங்கிலத்தில் எழுத வேண்டி வரும். அதற்கு எளிய ஆங்கில அறிவு போதுமானது. மற்றதெல்லாம் தமிழி லேயே எழுத முடியும். என்ன... கொஞ்சம் பொது அறிவு வேண்டும். விருப்பப் பாடமாக தமிழ் இலக்கியத்தைக்கூட எடுத்துக்கொள்ளலாம். ரெ.பால கிருஷ்ணன் போன்றவர்கள் இப்படித் தமிழிலேயே எழுதித் தேர்வடைந்தவர்கள்தான். எனவே, ஐ.ஏ.எஸ். இந்திக்காரர்களுக்கு மட்டும்தான் என்கிற கருத்து தவறானது.

ஆதாரமான இளங்கலைப் படிப்பு முடிந்த கையோடு, ஒரு வருஷம் டி.வி, சினிமா இல்லாமல், நூலகங்களுக்குச் சென்று ஒரு நாளைக்குக் குறைந்தபட்சம் ஐந்து மணி நேரம் நுணுக்கமாகப் படிக்க வேண்டும். தினம் எழுதிப் பார்க்க வேண்டும்.

இந்த நாட்டில் மாற்றம் என்ற ஒரு வஸ்துவைக் கொண்டுவர முடியும் என்றால், அது இளம் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகளால்தான் முடியும். முதல் ஐந்து ஆண்டுகளாவது அவர்கள் அரசியல் குறுக்கீடுகள் இல்லாமல் செயல்பட்டால், நிறையவே சாதிக்கமுடியும். பிறகு சென்னைக்கும் டெல்லிக்கும் போஸ்டிங்குக்கு அலையலாம்!



## எ.பி.ஹை!

**பூ**மியின் கூடாரம்
பட்டெனக் கிழிந்தது
மின்னல்!

– **வீ.தங்கராஜ்**







**முற்றும்**